# கிரஹ தாகம்

பாகம் I


ஆசிரியர்

சரத் சந்திர சட்டர்ஜி

மொழிபெயர்ப்பாசிரியர்

அ. கி. ஜயராமன்



சென்னை - 600090.





ஜி. டி. சென்னை



பதிப்புரிமை பெற்றது]


[விலை ரூ. 1-12-0

# ஆறு நவயுக நாவல்கள்

| | | |
|---|---|---|
| கிரஹ தாகம் | - | சரத் சந்திர சட்டர்ஜி |
| பெண் | - | ஸியாராம்சரண குப்தர் |
| சுகம் எங்கே? | - | வி. ஸ. காண்டேகர் |
| அன்ன | - | லியோ டால்ஸ்டாய் |
| ரஜபுத்திர ஆதிக்கத்தின் அஸ்தமனம் | - | ரமேச சந்திர தத்தர் |
| மகாராஷ்டிர ஜீவன் உதயம் | - | ,, ,, ,, |

நாவல் இந்திய இலக்கியத்தில் ஒரு புதிய அம்சம். காதம்பரி, ஹர்ஷ சரிதம் போன்ற கதைகள் இந்திய இலக்கியத்திலும் இருக்கின்றன. ஆனால் அவற்றில் கதைப் போக்கும் வர்ணனையுமே முக்கியமாக இருக்கின்றன. நாவல், அதன் தற்கால அமைப்பில், வெறும் கதை மட்டுமல்ல. ஆதியில் பிறந்து வளர்ந்த மேலை நாடுகளில்கூட அது வெறும் கதைச் சாடாக இருந்த காலமும் உண்டு. அதன் வளர்ச்சி ஒரு தனிச் சரித்திரம். தற்சமயம் இலக்கியத்தின் எல்லாப் பகுதிகளிலும் நாவல்தான் அதிகமாக வளர்ச்சி பெற்று வலுத்திருக்கிறது என்று சொல்லலாம்: அநேகமாக அது இலக்கியத்தின் பரப்பையே அளாவி நிற்கிறது. கவிதையும் நாடகமுங்கூட அதில் ஊடுருவி நிற்கின்றன.

இதற்குக் காரணம் என்ன? நாவல் வாழ்க்கையின் சித்திரம்: வாழ்க்கையில் நடைபெறும் போராட்டங்களின் சித்திரம். அதில் கதையும் உண்டு; ஆனால், அந்தக் கதை பாத்திரங்களுடைய மன நிகழ்ச்சிகளின் கோவை. இக் காரணத்தாலே, நாவல் நீளமாக இருந்தாலும், அதன் 'கதை' நீண்டிருக்காது. குறுகிய கால அளவிலே அமைக்கப்பெற்ற சில பாத்திரங்களின் குண சித்திரமே சில சமயங்களில் நாவலாக அமைந்துவிடும். நிகழ்ச்சிக் காலம் குறுகக் குறுக, நாவலின் பிகுவும், கட்டுக் கோப்பும், உணர்ச்சிப் பெருக்கும் அதிகமாகும்.

மன நிகழ்ச்சிகள்! — இவைதான் நாவலில் ஆதியிலும், நடுவிலும், அந்தத்திலும் அதற்கு உயிர்நிலை.

குண சித்திரம் பல வகைப்பட்டது. அசாதாரணமான பிரகிருதிகள், வாழ்க்கை விதிக்கும் சுவட்டில் போக முடியாமல், அதை எதிர்த்து, வேறு தனிப் பாதைகளில் போக முயலும் காட்சியை வர்ணிப்பது ஒரு வகை; அலை மோதும் வாழ்க்கைக் கடலில் இறங்கி, நீந்த வகை தெரியாமல் தத்தளித்து மாயும் மென்மையான மனித இயல்புகளை அனுதாபத்துடன் படம் பிடிப்பது மற்றொரு வகை; லட்சிய வீரர்கள் (ஆண்களும் பெண்களும்), வாழ்க்கைத் தரையிலிருந்து கிளம்பி, சம்பாதியைப் போல மனோரத சூரியனிடம் செல்ல முயன்று, சிறகெரிந்து விழும் வீழ்ச்சியைச் சித்திரிப்பது மேலும் ஒரு வகை. கடைசியாகக் குறிப்பிட்ட இந்த இலக்கிய - வீரர்கள்தான் வாழ்க்கையின் விதிக்கும் விதியாக நிற்பவர்கள். இவர்களுடைய சித்திரங்களே எதிர்கால சமூகத்திற்கு வழிகாட்டிகள். மொத்தமாகப் பொது நோக்கில் கூறினால், மனித இயல்பும் வாழ்க்கை நியதியும் கை கலக்கும் கண்கொள்ளாக் காட்சிகளைச் சில அபூர்வ சந்தர்ப்பங்களில் பொறுக்கிப் பிணைப்பதன் மூலம் காட்டுவதுதான் நாவலின் தொழில்.

மனித இயல்பை ஓர் ஆற்றுப் பெருக்காகக் கொள்ளலாம்; வாழ்க்கை யென்று நாம் சொல்லும் சமூக அமைப்பு ஓர் அணை போல அதன் முன் நிற்கிறது. அணை நன்மைக்காகத்தான் ஏற்பட்டது. சமூக அமைப்பும், அணை போல வாழ்க்கையின் வெள்ளப் பெருக்கைத் தன் கட்டுக்குள் அணைத்து, சரியான பாதையில் விதிதப்படி திருப்பத்தான் ஏற்பட்டது. ஆனால் சந்தர்ப்ப மாறுபாட்டால், அணை, வெள்ளத்தை மேலே போகவிடாமல், தன் கட்டுக்குள்ளேயே அடக்க முயலும் கொடுமையுள்ளதாக ஆகிவிடுகிறது. அதன் கட்டுக்கு அடங்கி வாழும் பெருவாரியான மக்கள், சிறு மடைவாய்கள் வழியே சென்றுவிடுகிறார்கள். இதற்காக அவர்கள் தம் இயல்பைக் குறுக்கிக்கொள்ளுகிறார்கள், அல்லது அடக்கிக்கொள்ளுகிறார்கள், அல்லது ஒரேயடியாக இழந்தே விடுகிறார்கள். சிலர், பெரு வெள்ளம் போல், கட்டுக்கடங்காமல் அணையைத் தகர்க்க முயற்சிக்கிறார்கள். அவர்களில் பெரும்பாலோர் அணையை உடைக்க முடியாமல் சிதறிப் போகிறார்கள்; சிலர் அணையைச் சில இடங்களில் தகர்த்தும் விடுகிறார்கள். இந்த மூன்று முக்கியமான போக்குகளில் நாவல் மனிதனுடைய தன்மையைப் படம் பிடிக்க முயலுகிறது.

வாழ்க்கையின் கொடுமைகளுக்குப் பணிந்து, கஷ்டத்தைக் ‘கடவுள் சித்தம்’ என்று பொறுத்துக்கொண்டு காலம் கழிக்கும் மக்களிடையே, துயர்தான் தொலையாத கூட்டாளியாக இருக்கிறது. மனித இயல்பின் கீழ்த்தர அம்சங்களான பொய் புரட்டு, கொலை களவு,— இவை அத் துன்பத்திற்கு உதவி செய்து, உயர்ந்த அம்சங்களை இருந்த இடம் தெரியாமல் அடிக்க முயலுகின்றன. ஆனால் உயர்ந்த இயல்புகள் இலேசாக மறைவதில்லை. மல் யுத்தத்தில் இரண்டு சக்திகளும் மேலும் கீழுமாகக் கட்டிப் புரளுகின்றன.

வாழ்க்கையின் கட்டுக் கடங்காமல், மனித இயல்பையே பலமாகவும் துணையாகவும் கொண்டு, அதை எதிர்ப்பவர் களுக்கும் துயர்தான் மிச்சம்; ஆனால் அந்தத் துயரையும் அவர்கள் சகித்துப் போகாமல் துச்சமாகத் தூரத் தள்ளி, மேலும் போராடுகிறார்கள், மடிகிறார்கள். அந்தப் போராட் டமும் வீர மரணமும் இலக்கியத்திலும் சரித்திரத்திலும் அழியாத பெயர் பெறுகின்றன. போராட்டத்தின் முடிவு வெற்றிதான் என்பதற்குச் சரித்திரம் சாட்சியாக நிற்கிறது.

ஆனால், அந்தப் போரில் மனிதனுடைய மகத்தான இயல்புடன் உயர்ந்த லட்சியமும் கைகோத்துக்கொண்டால், வாழ்க்கைச் சட்டம் ஓரோர் சமயம் தணிந்து போய்விடு கிறது; இயல்பும் லட்சியமும் சேர்ந்து வெற்றி பெறுகின் றன. அப்படி அவை வெற்றி பெறத் தவறிவிட்டாலும், அவற்றின் வீழ்ச்சியும் உன்னதமான கம்பீரமான வீழ்ச்சி யாகிவிடுகிறது. ஏனெனில், வீழ்ச்சிக்குக் காரணம் லட்சி யக் கோளாறோ, தவறான வழியோ அல்ல - எங்கோ ஏதோ அற்பமான ஒரு பலவீனம் அல்லது தவறு நேர்ந்துவிடுவ தால்தான்.

இந்தச் சிறு பீடிகையுடன் என் பரிசீலனைக்கு வந்த மேலே குறித்துள்ள ஆறு நவீனங்களின் போக்கையும் பொதுவாக ஆராய்ச்சி செய்ய முயலுகிறேன்.

'கிரஹ தாக'த்தில் கதாநாயகியான அசலா வெறும் உணர்ச்சிக் குவியல்; நிமிஷத்துக்கு நிமிஷம் வாழ்வை அநு பவிப்பவள். மிகவும் சஞ்சல சுபாவமுள்ள இவளுக்கு, ஆசி ரியர், மிகுந்த நகைச் சுவையுடன், அசலா (அசைவற்றவள்) என்று பெயர் வைத்திருக்கிறார். அவள் பெண் ஹிருதயத்தி லிருந்து கிளம்பிய புயலின் வேகத்தில் நால்வர் சுழலுகின் றனர்: அவளிடம் காதல் கொண்ட ஸுரேசன், அவள்

தந்தை கேதார் பாபு, கணவன் மஹிம், கணவனுடைய பந்து மிருணாளினி. அவள் போக்கே விபரீதம். வாழ்க்கையில் தணிந்து போகவேண்டிய சந்தர்ப்பத்தில் கொதித்தெழுந்து மீறி, மேலும் சிக்கலில் மாட்டிக்கொள்வதே அவள் தன்மை. அவளுடைய வெள்ளை உள்ளம் வாழ்க்கையின் சோதனையால் களங்கமாகிறது. அதன் போக்கு, பல அநுபவங்களுக்குப் பிறகும், அவளுக்கு அர்த்தமாவதில்லை. தனக்குத் தெரியவில்லை என்பதால், தந்தை சொன்னதை அவள் கேட்டிருக்கலாம். அவள் உள்ளம் அதற்கு இடம் கொடுக்கவே இல்லை — முடிவு வரை — அவள் பாதாளத்தில் விழுந்து மாசு கொள்ளும்வரை — இடம் கொடுக்கவில்லை. முதலில் தந்தை முடித்தபடி ஸுரேசனையே மணந்திருக்கலாம் — மணந்துகொள்ள மறுத்தாள்; மஹிமை மணந்த பிறகு ஸுரேசன் காதலுக்கு இடம் கொடுக்காமலே இருந்திருக்கலாம் — இருக்கவில்லை; மணந்த கணவனுடன் வாழ்க்கை நடத்தப் போன பின் அங்காவது கணவன் மனப் போக்கை அறிந்து, அற்ப விஷயங்களைப் புறக்கணித்துப் பெரிதான அவன் காதலைக் கைக்கொண்டாளா? — அதுவும் இல்லை. மிருணாளினியின் கபடமற்ற பரிகாசத்தை - விளையாட்டை - வினையாக முடித்தாள். ஸுரேசனுடைய காதலைக் கண்டு இரங்கித் தன் கைகளைப் பிடிக்கும்படிகூட அனுமதித்தாள்; தன் கணவன் மிருணாளினியுடன் பரிவாகப் பேசினதைக் கண்டு பொறாமை கொண்டாள். வீடு எரிந்துபோன பொழுது, ஒரு நிமிஷம் கணவனின் நினைப்புக் கொண்டு, அவனுக்காக எங்கு வேண்டுமானாலும் போகத் தயாரானாள். ஆனால், மஹிம் அவளை எடைபோட்டு வைத்திருந்தான். அவள் உணர்ச்சி நிலைக்காதென்று அவனுக்குத் தெரியும். அவள் ஆதரவை அவன் லட்சியம் செய்யவில்லை. மறுபடியும் அசலா பெண் புலி யாகிறாள்.

மஹிம் தேக அசௌக்கியமடைந்த பொழுது, மறுபடியும் கணவனிடம் ஈடுபட்டு, ஸுரேசனை மறக்க முயலுகிறாள். அந்த நினைப்பும் நீடிக்கவில்லை. வெளியூர் போகும் வழியில், ஸுரேசன் துரோகமாகத் தன்னைத் தனியே அழைத்துக் கொண்டு போனதை மன்னித்து, உடனே வீடு திரும்பாமல், அவனுடன் இருந்தாள். கடைசியாக ஸுரேசனைப் பார்த்து, 'இன்னும் என்னதான் என்னிடம் எதிர்பார்க்கிறீர்கள்?' என்று கேட்கும் நிலைமையையும் அடைந்தாள். அப்படித் தான் ஸுரேசனையாவது 'காதலி'த்தாளா? இல்லவே யில்லை! மஹிமைத் திரஸ்கரித்தாளா? இல்லை! சமூகத்தை எதிர்த்தாளா? ஒன்றுமில்லை. தன் உணர்ச்சிக்குத்தான் பலி யானாள். அசலாவுக்கு அசலாதான் உலகம். பரஸ்பரம் குற்றங் குறைகளை மன்னித்து விட்டுக் கொடுக்கும் தியாகம் அசலாவுக்குப் புறம்பானது.

'சுகம் எங்கே?' என்ற நவீனத்தில் உஷா இதைப் பரிபூரணமாக உணர்ந்திருக்கிறாள். ஆகையால் அனாதை யான விதவையாக மைத்துனன் வீட்டிலிருந்து துரத்தப் பட்டு, கடலில் விழும் தருவாயில், தன்னைக் கரையேற்றின ஆனந்தனை அந்த நிமிஷம் முதல் உள்ளத்தில் தெய்வமாக இருத்திக்கொண்டுவிட்டாள். அந்த ஈடுபாட்டில் ஆனந்த னின் தீய பழக்கங்களை யெல்லாம் பொறுத்துக்கொண் டாள். அவனைச் சீர்திருத்தும் தொண்டில் தன் பெயர் கெடு வதையும் அவள் அலட்சியம் செய்தாள். தான் மனப் பூர்வ மாகச் செய்த அந்த ஆனந்த-ஆராதனை தன் வாழ்க்கையை ஸபலமாக்கப் போதுமானது என்று கொண்டாள்.

ஆனால், ஆனந்தன் கைபிடித்த மனைவி மாணிக்கம், வெறும் காதலிலோ, அடிபட்ட வாழ்க்கை முறையிலோ திருப்தி கொள்ளவில்லை. இருவர் ஒத்துப்போனால்தான்

சுகம் என்பதை அவள் தர்க்க ரீதியாக அறிந்தாள். ஆனால், தான் ஒத்துப்போக அவள் தயாரில்லை. பிறர் — அதாவது கணவர் — தன் மனத்தை அறிந்து நடந்து வாழ்க்கையை நிமிஷத்திற்கு நிமிஷம் நவீன மாக்கவேண்டுமென்று எதிர்பார்த்தாள். அது நடக்கவில்லை. அவள் படிப்பு, அசலாவின் படிப்பைப் போல, அதிருப்தியையும் அகங்காரத்தையுமே கற்றுக் கொடுத்தது. தனஞ்சயன் என்ற போக்கிரியின் வசமாகி அவனுக்கு இரையாகிறாள். அதன் பிறகு — தடுக்கி விழுந்த பிறகு — அவளுக்கு உண்மை தெளிவாகிறது. கணவனுடன் வாழ்வது அசாத்தியமான பிறகு, தனக்குப் பிறக்கவிருந்த குழந்தையின் சேர்க்கையில் சுகத்தை அடையத் தீர்மானிக்கிறாள். அகங்காரத்தாலும் விளம்பரப் பித்தாலும் அதிருப்தி கொண்டு திரிபவர்களுக்கு வாழ்க்கையில் ஏமாற்றந்தான் மிஞ்சும் என்று தான் அடைந்த அநுபவத்தைக் கணவனுக்குத் தாழ்மையுடன் கடிதமூலம் அறிவித்துவிட்டு அவள் மறைகிறாள்.

அன்னாவின் போக்கு எதிர்ப்பும் அன்று, பணிவும் அன்று — வெறும் நேர்மை. அலைபட்டது அன்று அவள் உள்ளம். யௌவனமும், அழகும், உணர்ச்சியும் நிரம்பப் பெற்ற அன்னா, காரினினுக்கு வாழ்க்கைப்பட்டு, குழந்தை பெற்று, சமூகத்தின் முன்பு சந்தோஷ வேஷம் பூண்டு சஞ்சரிக்கிறாள். யௌவனத்தில் அமிழ்ந்து மூழ்கித் திளைக்கவேண்டிய காதல் தன் வாழ்க்கையில் இல்லாதது பற்றிக் கவலையற்றவள் போல் இருக்கிறாள். திடீரென்று விரான்ஸ்கி என்ற யுவன் அவள் முன் தோன்றி, அவளை நிலைகுலையச் செய்கிறான். மறுக்கொணாத அந்த மர்மக் கிளர்ச்சிக்கு உட்பட்டு, அன்னா அவன் காதலியாகி, குழந்தை பெறுகிறாள். ஆனால், அவள் புருஷனிடமிருந்து தன் உள்ளத்தை மறைக்கவில்லை.

விவாக ரத்து வேண்டுகிறாள். தம் சமூக அந்தஸ்துப் போய் விடுமென்று பயந்து, கணவர் அவளைக் கட்டுப்படுத்த முயலு கிறார்.

அந்த நிலையில் விரான்ஸ்கியும் ஒன்றும் செய்வதற் கில்லை. எவ்வளவுக் கெவ்வளவு அவன் பொறுப்பை ஏற் றுக்கொள்ள விரும்பினானோ, அவ்வளவுக் கவ்வளவு அவ னுக்கு அது மறுக்கப்பட்டது. காரினின் விவாக ரத்துக்கு ஒப்புக்கொள்ள மறுத்ததால், விரான்ஸ்கி அன்னாவை மணந்துகொள்ள முடியாது என்பது சமூகம் விதித்த விதி. அந்த விதியையும் மீறிச் செல்லுவதற்கு வேண்டிய ஆற்றல் விரான்ஸ்கியிடம் இல்லை.

நேர்மையும் உயர்ந்த லட்சியங்களுங்கூட ஒன்றுக் கொன்று முரண்படக் கூடும் என்பதற்கு அன்னாவின் கதை அத்தாட்சி. கதை முழுவதும் தத்துவங்களின் போர்க்கள மாக விளங்குகிறது. காரினின் தம்முடைய மனைவிக்கு விவாக ரத்து அளிக்க மறுத்ததற்கு, சட்டப்படி அவருக்குச் சுதந் திரம் இருந்தது. அவருக்கு அன்னாவிடம் பிறந்த பையனை வேற்றாரிடம் ஒப்புவிக்கும்படி எப்படி வற்புறுத்த முடியும்? ......அன்னாவின் நேர்மை அபூர்வமானது. அவளை மறந்து விட்டு, அவள் கணவர் சர்க்கார் தஸ்தவேஜிகளை மணந்து கொண்டு வாழ்க்கை நடத்திவந்தார். அவளுடைய மனச் சாட்சி சரியானது என்பதனால், அவள் சமூகத்தையும் மீறிப் பொங்கினாள். தனக்கு எவ்விதத்திலும் மாறுபட்ட கணவ ருடன் இருப்பது அவள் இயற்கைக்கு விரோதமானது. அந்த உறவிலிருந்து விடுபடவேண்டும் என்பதே அவள் எண்ணம்...... விரான்ஸ்கி விஷயம் என்ன? தனக்குப் பிறக்கும் குழந்தைகளைக் காரினின் பெயருக்குப் பலியிட அவன் விரும்பாத நேர்மையும் ஒப்பற்றது. ஆனால், அவ னுக்குப் பெண் மனத்தின் தன்மை தெரியாது. அன்னாவின்

காதல் தன் சுதந்திரத்தைக் கட்டுப்படுத்தியது என்று அவன் தவறாக அர்த்தம் செய்துகொண்டதன் விபரீதம்தான் அன்னாவின் சோக நாடகம்.

அன்னாவுக்கு அப்பொழுதுதான் விழிப்பு ஏற்படு கிறது. 'காதல்' என்ற வார்த்தைக்கு அர்த்தமில்லை என்று உணருகிறாள். அவளுடைய உயர்வும், உள்ளத் தூய்மையும், அவளுடைய தாய் ஹிருதயத்தின் இளக்கத்தில் துயர் ஒலி யங்களாக மாறுகின்றன. அவள், தன் கணவனிடம் பெற் றெடுத்த பாலகனைத் திருட்டுத்தனமாகச் சென்று பார்த்து மகிழும் சந்தர்ப்பத்தில், அழியாத தாய் உருவமாக மாறு கிறாள்.

அன்னாவுக்கும் மேற்போன உன்னத விக்கிரகம் ஸியாராம்சரணர் கவிதை யுள்ளத்துடன் வார்த்து நிறுத்தி யிருக்கும் பெண். அவள்தான் ஜம்னா. ஜம்னா வாழ்க்கை யின் கொடுமைகளை யெல்லாம் சகித்து, வெள்ளத்தின் முன் படியும் நாணல் போல, வளைந்து கொடுத்துக்கொண்டு, மறு படி தலை நிமிர்கிறாள். கட்டுப்பாட்டைச் சிறிதளவுகூட எதிர்க்காமலிருந்தும்கூட, சமூகம் அவளுக்குப் 'பெயர்' வைக்கிறது. 'யுவதி எப்படித் தவறு செய்யாமல் இருக்க முடியும்?' — இதுதானே உலகரீதி! அதையும் அவள் பொருட்படுத்தாமல், கணவன் இழைத்த கொடுமையையும் பாராட்டாமல், அவனை எண்ணி எண்ணி ஏங்கி, அவன் தனக் குக் கொடுத்துச் சென்ற குழந்தையைத் துணையாகக் கொண்டு, வாழ்க்கையை அமைதியுடன் நடத்துகிறாள். அந்த அமைதியின் நடுவில், அஜீத்தின் களங்கமற்ற சேவை ஒரு நிமிஷம் அவள் மனத்தைக் கவருகிறது. தன் ஜாதி ஆசாரப்படி அவனுடன் சேர்ந்து வாழ்க்கை நடத்தலாமா என்றுகூட அவள் கொஞ்சம் தடுமாற்றம் கொள்ளுகிறாள்.

முடிவில் அந்த உணர்ச்சியையும் திடமாகத் தூரத் தள்ளி விடுகிறாள். தனக்குத் துணை மகனே போதும் என்று தீர் மானிக்கிறாள்.

'ஹல்லீயின் கையைப் பிடித்துக்கொண்டு அவள் நடந்து சென்றாள். ஆகாயத்தில் மேகங்கள் வந்து சூழ்ந்திருந்தன. நாற்புற மும் ஒரே இருள்! எங்கும் ஒன்றும் புலப்படவில்லை. ஆயினும், அவள் மகனின் கையைத் தாங்கி மேலே சென்றுகொண்டிருந் தாள். இன்று மாத்திரந்தான் அவள் போய்க்கொண்டிருந்தாள் என்பதில்லை. அந்தப் பண்டைக் காலத்துப் பெண், யுக யுகாந்தரத்து இருளில், அதைத் துச்சமாகக் கருதி, வெகுகாலமாக இப்படியே தான் மேலே நடந்து சென்றுகொண்டிருக்கிறாள்;— துன்பமும் இருளுமான இந்த இருள் வழியை, இவ்வண்ணமே கால்களால் மிதித்துக்கொண்டு செல்லுகிறாள்! அவளுக்கு எவ்வித அச்சமும் இல்லை, ஒரு கவலையும் இல்லை.'

இந்த நான்கு நவீனங்களிலும் பெண் உள்ளத்தின் உணர்ச்சிதான் பிரதானமாக நின்று வாழ்க்கையின் சுக துக்கங்களை ஆண் மக்களுக்குப் பங்கு போட்டுக் கொடுக் கிறது. கலப்பற்ற துக்கமோ சுகமோ கிடையாது. அந்த வீதாசாரப்படி சுகதுக்கங்கள் ஒரு முடிவற்ற தொடர்பு கொண்டிருக்கின்றன. வாழ்க்கையில் லட்சியமின்றிக் காதல் மட்டும் எப்படித் தனித்து நிற்க முடியாது என்பதை இவை காட்டுகின்றன.

ரமேச சந்திர தத்தர் எழுதியிருக்கும் 'ரஜ புத்திர ஆதிக்கத்தின் அஸ்தமனம்' 'மகாராஷ்டிர ஜீவன் உதயம்' என்ற இரண்டு நாவல்களிலும் காதல் இரண்டாம் அந்தஸ் தில்தான் இருக்கிறது. வீரந்தான் முதல் ஸ்தானம் வகிக் கிறது. தேசத்தின் கௌரவமும் ஒற்றுமையும் நிலைபெற

வீரம் போராடும் பொழுது, காதலை ஓய்வு நேரத்து இன்பமாக மட்டுமே கருதுகிறது. அதாவது தனி நபரின் சுகம் தேசத்தின் - சமூகத்தின் - சுகத்திற்காகத் தியாகம் செய்யப் பட்டுவிடுகிறது.

ரஜபுத்திரரின் கௌரவத்தையும் ஆதிக்கத்தையும் நிலை நாட்ட முனைந்த பிரதாப சிம்மன், மனைவியையும் குழந்தைகளையும் கஷ்டத்திற்கும் வறுமைக்கும் உள்ளாக்கத் தயங்கவில்லை. குழந்தைகள் பட்டினி கிடப்பதுகூட நிமிஷ நேரத்திற்கு மேல் அவரைக் கலங்கச் செய்யவில்லை. அவரைப் பின் பற்றின வாலிப வீரன் தேஜ் சிம்மன் நாட்டை எதிரியிடமிருந்து மீட்குமுன், குஸுமகுமாரியைக் கைப்பற்ற வரவில்லை. காதலனின் லட்சியம் கைகூடும் வரை காதலியும் காத்துக்கொண்டிருக்கிறாள்.

மகாராஷ்டிர ஜீவன் உதயமாகும் போரிலும் அதே மாதிரி நடைபெறுகிறது. சிவாஜி 'தம்மை' மறந்து பாடு பட்டுத்தான் மகாராஷ்டிரத்தை ஸ்தாபித்தார். சதா சர்வ காலமும் அவர் நினைத்துக்கொண்டு போர் புரிந்து வந்த ஒரே இலக்கு எதிரிதான். அவருக்குத் துணையாக இருந்து அவர் உயிரைக் காப்பாற்றிய இளைஞன் ரகுநாத்ஜி ஹவல்தார், போர் ஒருவிதமாக நின்ற பின்புதான், தன் காதலி ஸரயூ பாலாவைக் கண்ணெடுத்துப் பார்க்கிறான்.

இந்த இரண்டு நவீனங்களிலும், மனித ஹிருதயத்தை ஆட்கொண்டு, வாழ்க்கையின் சுகதுக்கங்களைத் தாய் நாட்டின் பாதங்களில் காணிக்கையாக சமர்ப்பிக்கத் தூண்டும் வேட்கை, உயர்வு பெற்று, வானத்தில் நின்று ஒளி செய்வது போல் விளங்குகிறது. அந்த மகா தாகத்தின் பரப்பில், சிறு மனித உணர்ச்சிகள் பேதைமை கொள்ளுகின்றன; உயிர்களே மதிப்பற்றுப் போகின்றன! வாழ்க்கையின் பிணைக்

கோலத்தின் அருகில் வீர சக்தி, இரத்த வெறிகொண்ட காளி போல், தாண்டவமாடுகிறது.

சோகம் எங்கே என்ற பிரச்னை அங்கே கிடையாது! பெண் உள்ளத்தின் பிரசண்ட வேகம்கூட அங்கே எடுபடுவதில்லை; துக்கத்தின் தூய வர்ணனைக்கு அங்கே இடமில்லை. பெண்மையே அந்த ஊக்கத்திற்கு உணர்வளித்துத்தான் உயிர் பெறுகிறது. வாழ்க்கை பெரிதா, லட்சியம் பெரிதா என்ற கேள்வி அங்கே பிறக்க முடியாது. வாழ்க்கையைத் திருணமாக மதித்த சந்தர்ப்பத்தில், அது எப்படி எழும்? அந்த வீரத்திற்கு லட்சியம் நாட்டின் கௌரவம், ஒற்றுமை. தர்மமும் சத்தியமுமே அதன் கவசமும் கேடயமும். அதைப் போருக்கனுப்பிப் பேரவா ஊட்டும் கருவி — பெண்மை!

இந்த நவீனங்களில் திடுக்கிடும்படியாகவோ எதிர் பாராத வண்ணமோ சம்பவங்கள் நடைபெறா; இவற்றில் துப்பறியும் வேலை கிடையாது; மயிர்க் கூச்செறியும் நெருக்கடிகளும் கொலைகளும் நடக்கமாட்டா. எல்லாம் நாம் வாழ்க்கையில் அனுபவத்தில் எதிர்பார்க்கும் சம்பவங்களாகவே இருப்பவை.

ஆனால், மனித சித்திரங்கள் நிறைய இருக்கும். க்ஷண சித்தமும் தயாள குணமும் படைத்த ஸுரேசன், 'பெரிய மனுஷர்' என்று தாராளமாகச் சொல்லக்கூடிய கேதார் பாபு, 'அசையாத குன்று' என்று சொல்லுவோமே அந்த மாதிரியான மஹிம், பெண்மையின் பொலிவாகிய மிருணாளினி — இப்படி எத்தனை விதமான பிரகிருதிகள்! வாழ்க்கை - வீட்டில் வசிக்கும் இவர்கள் எல்லோரும் அசலாவின் தன்மையால் பாதிக்கப்படுகிறார்கள். கிரஹ தாகம்! (வீடு எரிந்து போகிறது!) நடுத் தெருவில் நிற்கிறார்கள் எல்லோரும்!

'சுகம் எங்கே?' என்பதில்தான் என்ன குறைவு! விளம்பரப் பிரியர் முத்தண்ணா, விவஸ்தையற்ற சஞ்சலா, தனஞ்சயன், ஆனந்தன், மாணிக்கம், உஷா — எவ்வளவு வேறுபட்ட தன்மைகள்!

'அன்னா'வில் உலவும் பிரகிருதிகள் கணக்கில் அடங்காதவர்கள். ஒவ்வொருவரும் தனித் தன்மை கொண்டவர்கள். டால்ஸ்டாய், தம் திறமையையும் உணர்ச்சியையும் பூராவும் அதில் கொட்டி, ஒப்பற்ற வகையில் உருவங்களை வார்த்து நிறுத்தியிருக்கிறார். எல்லோரும் கண்ணெதிரில் நடமாடுவது போலவே தோன்றுகிறது.

'பெண்'ணில் ஜம்னாவின் அடக்கம் அசாதாரணமானது. கிராமாந்தரப் பரோபகாரி அஜீத், மனத்தை விட்டு அகல முடியாத உயிர்ச் சித்திரம். ஹல்லீ, இலக்கியத்தில் தத்ரூபமாக சிருஷ்டிக்கப்பட்டு நிற்கும் பாலகர்கள் சிலரில், நம் உள்ளத்தைக் கொள்ளைகொள்பவன்.

ரமேச சந்திரரின் நாவல்களில், குன்றின் மேலிட்ட விளக்குகளைப் போலப் பிரகாசிக்கும் பிரகிருதிகள் எல்லோரும் சரித்திர புருஷர்கள். ராணா பிரதாப்சிங், அமர்சிங், தேவீசிங், ராணி துர்க்கா, தேஜ்சிங், திவான் பாமா ஷாஹ், — பெயர்களைக் கேட்டாலே போதும். நமது சரித்திரத்தில் தலைநிமிர்ந்து நடமாடிய ஜோதிகள்! பிறகு சிவாஜி, தானாஜி, ரகுநாத்ஜி, ராஜா ஜயசிங் — எப்பேர்ப்பட்ட லட்சிய புருஷர்கள்!

இவற்றை எழுதியவர்கள் சாமானியர்கள் அல்லர். சரத் சந்திரர் இந்தியாவிலேயே தலை சிறந்த நாவலாசிரியர் எனலாம். காண்டேகர் மராட்டியில் முதல் ஸ்தானம் வகிப்பவர். டால்ஸ்டாயைப் பற்றி அதிகம் சொல்லவேண்டியதில்லை. அவர் 'வானமும் பூமியுமாய் வளர்ந்து நிற்கும் கலா நிபுணர்.' ஸியாராம்சரணர் ஹிந்தியில் பிரதம நூலாசிரியர்,

— கவியுங்கூட. ரமேச சந்திரர் இந்தியாவின் ஒப்பற்ற சரித்திராசிரியர்.

இந்த மொழிபெயர்ப்புகளின் மூலம் தமிழிலும் முதல்தரமான நாவல்கள் தோன்றும்படியாக ஓர் ஊக்கம் ஏற்பட வேண்டும்; தமிழ் ஆசிரியர்கள், இவற்றைக் கண்டு, நம் தாய்மொழியிலும் பெரிய நாவல்களை எழுதத் தூண்டுதல் பெற்றால், இந்த நவீனங்களை வெளியிட எடுத்துக் கொள்ளப்பட்ட முயற்சி வீணில்லை.

இந்தப் புதிய நாவல்களை உங்களுக்கு அறிமுகம் செய்துவைக்க முயன்றிருக்கிறேன். இனிமேல், நீங்களே படித்துப் பாருங்கள்.

கு. ப. ராஜகோபாலன்



அவளுடைய வாழ்க்கைக் குருக்ஷேத்திரத்தில் நடக்கும் இவ்வளவு பெரிய போராட்டத்திற்கு உலகில் என்ன அவசியம் இருக்கிறது? உலகத்திலுள்ள சகல ஜ்வாலைகள், இழிவுகள், சுயநலங்கள் யாவும் அழிந்து, இந்த இரவைப் போலவே முடிந்துவிடுமா?

— இரண்டாம் பாகம், பக்கம் 232

# I

மஹிமனுடைய நெருங்கின நண்பன் ஸுரேசன். இருவரும் ஒன்றாக எம். ஏ. பாஸ் செய்தார்கள். ஸுரேசன் மெடிகல் காலேஜில் சேர்ந்தான். ஆனால், மஹிமன் தன் பழைய ஸிட்டி காலேஜிலேயே இருந்தான்.

இதனால் ஸுரேசனுடைய கௌரவம் சற்று பாதகமடைந்தது. 'மஹிம், நான் அடிக்கடி சொல்லி வருகிறேன், பி.ஏ., எம்.ஏ. பாஸ் செய்வதால் ஒரு லாபமுமில்லை. இப்பொழுதுகூடச் சாவகாசம் இருக்கிறது. நீ மெடிகல் காலேஜில் சேரவேண்டும்' என்றான்.

மஹிமன் சிரித்துக்கொண்டே, 'செய்யலாம், ஆனால் செலவு விஷயத்தையும் யோசிக்கவேண்டியதா யிருக்கிறது' என்றான்.

'நீ செய்ய முடியாத அவ்வளவு பெரிய செலவு என்ன ஆகப்போகிறது? மேலும் உனக்கு உபகாரச் சம்பளம்தான் கிடைக்கிறதே!'

மஹிமன் புன்சிரிப்புடன் மௌனமாக இருந்தான்

ஸுரேசன் பயத்துடன், ‘இல்லை, இல்லை! சிரிக்கக்கூடிய விஷயமன்று இது. மஹிம்! இனிமேல் தாமதம் செய்தால் ஒன்றும் நடக்காது. நீ இப்பொழுதே சேர்ந்தாக வேண்டும். நான் சொல்லி வைக்கிறேன். செலவு விஷயத்தைப் பற்றிப் பின்னல் யோசித்துக்கொள்ளலாம்’ என்ருன்.

‘நல்லது’ என்ருன் மஹிம்.

ஸுரேசன் மீண்டும், ‘இதோ பார், மஹிம்! உனக்கு எது நல்லது எது கெட்டது என்பதை இன்றுவரை நான் அறிந்து வந்திருக்கிறேன். ஆனல் இப்போது வழியில் நான் உன்னிடம் விஸ்தாரமாக உறுதி கூற முடியாது. காரணம், நான் காலேஜுக்குப் போக நேரமாய்விட்டது. ஆனல் நாளை அல்லது மறுநாளைக்குள், எப்படியாவது இதற்கு ஒரு வழி கண்டுபிடிக்காமல் நான் விடமாட்டேன். நாளைக் காலை ரூமிலேயே இரு. நான் வருகிறேன்’ என்று சொல்லிக் கொண்டே வேகமாகக் காலேஜ் பக்கம் சென்ருன்.

பதினைந்து தினங்கள் கழிந்தன. எங்கே இருக்கிருன் மஹிம்? அவன் மெடிகல் காலேஜில் சேருவது எங்கே போயிற்று! ஒரு நாள் ஞாயிற்றுக்கிழமை மத்தியானம் ஸுரேசன் ரொம்பத் தேடி அலைந்த பிறகு, ஏழைமையான ஒரு மாணவர் விடுதிக்கு வந்து சேர்ந்தான். நேரே மேலே சென்று பார்த்தான். எதிரேயுள்ள ஓர் இருட்டறையில், ஒரு கிழிந்து போன பாயின் மீது அமர்ந்து ஐந்தாறு பேர் போஜனம் செய்துகொண்டிருந்தார்கள். மஹிம் தலை நிமிர்ந்ததும், அகஸ்மாத்தாக நண்பனைப் பார்த்து, ‘திடீரென்று இடம் மாற்றவேண்டி ஏற்பட்டுவிட்டது. ஆகையால் உனக்குத் தகவல் கொடுக்க முடியவில்லை. ஆனல், உனக்கு எப்படி விலாசம் தெரிந்தது?’ என்ருன்.

ஸுரேசன் அவன் வார்த்தைக்குப் பதில் ஒன்றும் சொல்லாமல், சட்டென்று வாசற்படியில் அமர்ந்து, அந்த

யுவர்கள் போஜனம் செய்யும் பக்கம் பார்க்கலானான். பெரிய பெரிய அரிசிச் சோறு, தண்ணீர் போன்ற பருப்பு, ஏதோ ஒரு கறி, பொசுங்கிப் போன சில அப்பளங்கள் — இவைகள் தான் இருந்தன. தயிர் இல்லை, பால் இல்லை. வேறு பட்சணங்கள் ஒன்றுமில்லை.

எல்லோருடனும் சந்தோஷமான முகத்துடன், மிகுந்த திருப்தியோடு, மஹிம் சாப்பிடலானான். ஆனால் அவனைப் பார்க்கப் பார்க்க ஸுரேசன் கண்களில் கண்ணீர் நிரம்பிவிட்டது. அவன் ஒருவிதமாக முகத்தைத் திருப்பிக் கண்ணீரைத் துடைத்துக்கொண்டு எழுந்து நின்றான். சாதாரண விஷயங்களுக்குக்கூட ஸுரேசனுடைய கண்களில் ஜலம் வந்துவிடும்.

போஜனம் ஆனபிறகு, மஹிம் ஸுரேசனை அழைத்துக் கொண்டுபோய்த் தன் படுக்கையில் உட்கார வைத்தபோது, ஸுரேசன், தடைபடும் குரலுடன், 'மஹிம்! அடிக்கடி உன்னுடைய இந்த அதிகப் பிரசங்கித்தனத்தை என்னால் சகிக்க முடியவில்லை!' என்றான்.

மஹிம் சாந்தமாக, 'இதன் அர்த்தம்?' என்றான்.

'இந்த மாதிரி ஒரு அசம்பாவிதமான வீடுகூட ஒரு நகரத்தில் இருக்க முடியுமா? இந்த மாதிரி சாப்பாட்டைக்கூட மனிதன் சாப்பிடுவானா? கண்ணால் பார்க்காமல், இந்த விஷயங்களை என்னால் நம்ப முடியவில்லை. போகட்டும், எதுவாவது இருக்கட்டும். இந்த இடத்தை நீ எப்படித் தேடிப் பிடித்தாய்? உன்னுடைய பழைய விடுதி எவ்வளவுதான் கெடுதலாக இருந்தாலும், அத்துடன் இதை ஈடு சொல்ல முடியாது. அதை ஏன் விட்டாய்?' என்றான் ஸுரேசன்.

நண்பனின் அன்பு, மற்ற நண்பனின் உள்ளத்தில் வருத்தத்தை உண்டாக்கியது. தன்னுடைய சலனமற்ற காம்பீரியத்தைக் கடைசிவரை நிலைநிறுத்த மஹிமனால் முடியவில்லை.

அவன், தழுதழுத்த குரலில், 'ஸுரேஷ்! நீ என்னுடைய கிராமத்து வீட்டைப் பார்த்ததில்லை; பார்த்திருந்தால் இந்த விடுதியில் எனக்குக் கொஞ்சம்கூடக் கஷ்டம் ஏற்படாதென்பதை உணர்ந்திருப்பாய். சாப்பாட்டு விஷயத்தைச் சொன்னாய். நாலு பெரிய இடத்துப் பிள்ளைகள் சந்தோஷமாகச் சாப்பிடுவதை நானும் சாப்பிட முடியாதா?' என்றான்.

ஸுரேசன் பதட்டத்துடன், 'இது ஏன் என்கிற விஷயமல்ல; நல்ல பொருள்களும், கெட்ட பொருள்களும் உலகத்தில் இருக்கவே இருக்கின்றன. ஆனால் நல்லது நல்லது தான்; கெட்டது கெட்டதுதான். அதில் சந்தேகமில்லை. நீ இவ்வளவு துக்கத்தை அனுபவிக்கவேண்டி என்ன ஏற்பட்டது என்பதைத்தான் நான் அறிய விரும்புகிறேன்' என்றான்.

மஹிம் மெள்ள மெள்ளச் சிரித்தான். ஒன்றும் பேசவில்லை.

ஸுரேசன் மீண்டும், 'உன் அவசியம் உன்னிடமே இருக்கட்டும்; நான் அதை அறிய விரும்பவில்லை. ஆனால் உன்னை உத்தாரணம் செய்யவேண்டிய அவசியம் எனக்கு இருக்கிறது. நான் இப்பொழுதே வண்டி கொண்டுவந்து, உன் சமான்கள் எல்லாவற்றையும் ஏற்றி, உன்னை என் வீட்டிற்கு அழைத்துக்கொண்டு போகப் போகிறேன். நான் உன்னை இங்கேயே விட்டுவிட்டுச் சென்றால், எனக்குத் தூக்கம் கொள்ளாது. வாய் ஆகாரம் செல்லாது. உன் விடுதியிலிருக்கும் வேலைக்காரனைக் கூப்பிடு. வண்டி கொண்டுவரட்டும்!' என்று சொல்லி, மஹிமனைக் கையைப் பிடித்துத் தூக்கி, அவன் படுக்கையைச் சுருட்ட ஆரம்பித்தான்.

மஹிம் தடுப்பதற்காக ஒன்றும் செய்யவில்லை. ஆனால், சாந்தமான கம்பீர மொழியில், 'ஸுரேஷ்! பயித்தியக்காரத்தனம் ஒன்றும் செய்யாதே!' என்றான்.

ஸுரேசன் தலைநிமிர்ந்து, 'பயித்தியக்காரத்தன மென்ன? நீ வர மாட்டாயா?' என்றான்.

'மாட்டேன்!'

'ஏன் வர மாட்டாய்? நான் உனக்கு ஒன்றுமில்லையா? என் வீட்டிற்கு வந்தால், உனக்கு அவமானம் வந்து விடுமா?'

'இல்லை.'

'பின்?'

'ஸுரேஷ்! நீ என் நண்பன். உன் மாதிரி எனக்கு வேறு நண்பன் கிடையாது. உலகத்தில் எத்தனை பேருக்கு இந்த மாதிரியான நண்பர்கள் இருக்கிறார்கள்—அதுவும் எனக்குத் தெரியாது. இவ்வளவு நாட்களுக்குப் பிறகு இந்த வஸ்துவைச் சிறிது நேர சுகத்திற்காக இழந்து விடுவேனா? நீ என்னை அவ்வளவு அறியாதவன் என்று எண்ணினாய்?'

'மஹிம், நட்பு என்ற பொருள், உன்னுடையது மாத்திரமன்று, எனக்கும் அதில் பங்கு இருக்கிறது. அதை இழந்துவிட்டால், எவ்வளவு பெரிய நஷ்டம் ஏற்படு மென்று அறியும் சக்தி என்னிடம் இல்லையா? நான் அவ்வளவு முட்டாளா? மேலும், இவ்வளவு ஜாக்கிரதையாகவும், கணக்கு வழக்குப் பார்க்காமலும் நாம் போகும்போது, அந்தக் கஷ்டம் வருமானால், வந்துவிட்டுப் போகட்டும். அது என்ன அவ்வளவு விலை உயர்ந்தது, அதற்காகச் சரீர சுகத்தை அலட்சியம் செய்வதற்கு?' என்றான் ஸுரேசன்.

மஹிம் சிரித்துக்கொண்டே, 'இல்லை, இல்லை! இந்தத் தடவை நான் தோற்றுவிட்டேன். ஸுரேஷ், நான் ஒரு விஷயம் உன்னிடம் நிச்சயமாகச் சொல்லுகிறேன். நான் சந்தோஷத்துடன் துக்கத்தைச் சகிக்க இங்கே வந்திருக்கிறேனென்று நீ எண்ணுகிறாய். ஆனால் அது உண்மையன்று' என்றான்.

'சரி, உண்மையாக இருக்க வேண்டாம். நான் காரணத்தை அறியவும் விரும்பவில்லை. ஆனால் ரூபாயை மிச்சப்படுத்துவதென்பது உன் உத்தேசமாயிருந்தால், என் வீட்டில் வந்து இரேன். அதனால் உன் உத்தேசம் பூர்த்தியாகாமல் போகாது.'

மஹிம் தலையை அசைத்துக்கொண்டு, சுருக்கமாக, 'ஸுரேஷ்! இப்பொழுதிருக்கட்டும். உண்மையாக கஷ்டம் ஏற்பட்டால் உனக்குச் சொல்லுகிறேன்' என்றான்.

மஹிமனின் உறுதியினின்று அவனை வழுவச் செய்வது அசாத்தியம் என்பதை ஸுரேசன் அறிவான். மேற்கொண்டு அவனை வற்புறுத்தாமல், ஒரு விதமான கோபத்துடன் சென்றான். ஆனால், நண்பன் அந்த மாதிரி யிருந்ததும், அவன் சாப்பாட்டு நிலைமையைக் கண்ணால் பார்த்ததும், அவன் மனத்தில் முள் கொண்டு குத்துவது போல் இருந்தன.

ஸுரேசன் தனவந்தன் வீட்டுப் பிள்ளை. அவன் கபடமற்ற மனத்துடன் மஹிமனை விரும்புகிறான். எப்படியாவது தான் நண்பனுக்கு உபயோகப்படவேணுமென்று அவன் உள்ளத்தின் அபிலாஷை. ஆனால் அன்றுவரை மஹிமனைத் தன்னுடைய ஒத்தாசையை ஏற்றுக்கொள்ளும்படி செய்ய அவனால் முடியவில்லை; அன்றும் முடியவில்லை.



# II

ஐந்து வருஷங்களுக்குப் பிறகு இரண்டு மித்திரர்களுக்குள் கீழ்க்கண்டவாறு சம்பாஷணை நடந்தது.

'மஹிம், உன்னிடம் எனக்கு எவ்வளவு சிரத்தை தெரியுமா? அதை என்னால் சொல்ல முடியாது' என்றான் ஸுரேசன்.

'ஸுரேஷ்! சொல்லும்படி நான் உன்னைத் தொந்தரவு செய்யவில்லையே!' என்றான் மஹிமன்.

'அந்தச் சிரத்தை இப்பொழுது இல்லையென்று தெரிகிறது.'

'சிரத்தை இல்லாததற்குத் தண்டனையென்று நான் உன்னைப் பயமுறுத்தவில்லையே!'

'உன்மேல் கபடத்தின் தோஷத்தை உன் சத்துருவால் கூடச் சுமத்த முடியாது.'

'சத்துரு செய்ய முடியாத காரியத்தை மித்திரன் செய்ய முடியாதென்று "தரிசன" சாஸ்திரத்தில் ஒரு விதியும் இல்லை.'

'சிச்சீ! கடைசியில் நீ போய் ஒரு பிரம்ம சமாஜப் பெண்ணையா பிடித்துக்கொண்டு வந்தாய்? என்ன இருக்கிறது அவளிடம்? மெலிந்த தேகம், ஒட்டின முகம்; புஸ்தகத்தைப் புரட்டிப் புரட்டிச் சரீரத்தில் ஒரு துளி ரத்தம் கூடக் கிடையாது; தட்டினால் கீழே விழுந்துவிடுவாளோ என்று பயமாய் இருக்கிறது. குரல்கூட 'கீ, கீ' என்று கேட்பதற்கு வெறுப்பா யிருக்கிறது!' என்றான் ஸுரேசன்

'அது உண்மையாக இருக்கலாம்!' என்றான் மஹிம்.

'பார், மஹிம்! பிரம்ம சமாஜப் பெண்களைக் கண்ணால் கூடப் பார்க்காத கிராமத்து ஜனங்களிடம் வேடிக்கை செய்; பெண்கள் ஆங்கிலத்தில் விலாசம் எழுதுவதைக் கேட்டு ஆச்சரியமடைந்து, அப்படிப்பட்டவர்களைக் கண்டவுடன் மரியாதையுடன் தூர நிற்கிறார்களே, அவர்களிடம் சொல்லு. ஆச்சரியத்தினால் அவர்கள் "தேவ தேவி" என்று தரையில் விழுந்து வணங்குவார்கள். ஆனால் நாங்கள் கிராமத்தாரல்ல: எங்களை அவ்வளவு சுலபமாக ஏமாற்றிவிட முடியாது!' என்றான் ஸுரேசன்.

'ஸுரேஷ் நான் உன்னிடம் சத்தியம் செய்து சொல்லுகிறேன். உன்னுடைய நகரத்தார்களை ஏமாற்றவேண்டுமென்று கிஞ்சித்தும் எனக்கு எண்ணமில்லை. நான் அவளை என் கிராமத்திற்கே அழைத்துக்கொண்டு போய் வைத்துக் கொள்கிறேன். இதில் உனக்கொன்றும் தடையில்லையே?' என்றான் மஹிம்.

ஸுரேசன் கோபத்துடன், 'தடையில்லையா? நூறு, ஆயிரம், லட்சம், கோடித் தடைகள் இருக்கின்றன. நீ எவ்விடத்திலும் மரியாதையும் கௌரவமும் பெறத்தக்க ஹிந்துவின் சந்தானமாக இருந்து, ஒரு ஸ்திரீயின் மோகத்தில் விழுந்து, ஜாதியை நஷ்டம் செய்துவிடுவாயா? இது மோகம்: ஒரு முறை அவளுடைய செருப்பு, ரிப்பன், அந்தப் புது மோஸ்தர் ஆடைகள்—இவைகளை அகற்றி, நமது கிருகலட்சுமிகளின் வர்ணப் புடவையை அணிவித்துப் பார், அந்த மோகம் போய்விடுகிறதா, இருக்கிறதா என்பதை! அப்பொழுது அந்த உயிரற்ற பொம்மையின் ரூபத்தைக் கண்டு உன் பிரமை விலகிவிடுகிறதா, இல்லையா பார்! என்ன இருக்கிறது அவளிடம்? அவள் என்ன செய்ய முடியும்? தையல் முதலிய வேலைகளுக்கு உனக்கு அதிக அவசியமிருந்

தால், கல்கத்தாவில் எவ்வளவோ தையல்காரர்கள் இருக்கிறார்கள். ஒரு கடிதத்திற்கு விலாசம் எழுதுவதற்காக நீ ஒரு பிரம்ம சமாஜப் பெண்ணின் காலில் விழவேண்டிய அவசியமில்லை. உன்னுடைய அசௌகரியமான நாட்களில், அவள் மசாலை அரைத்துக் கறிகாய் சமைத்து உனக்குச் சாப்பாடு பண்ணிவைக்க முடியுமா? நோயுற்ற நாட்களில் உனக்கு அவள் சேவை செய்ய முடியுமா? அந்த மாதிரி சிட்சை அவளுக்கு அளிக்கப்பட்டிருக்கிறதா? அந்த மாதிரியான நாள் வராமலிருக்கக் கடவுள் அருள் செய்யட்டும். ஆனால் அசௌகரியமான நாட்களில் உன்னை விட்டுவிட்டு அவள் போய் விடாவிட்டால் என் பெயரை மாற்றி வைத்துக்கொள். அதற்காக நான் துக்கப்படமாட்டேன்!' என்றான்.

மஹிமன் மௌனமாக இருந்தான்.

'மஹிம்! நான் ஹிதத்தைத் தவிர மறந்துபோய்க்கூட உனக்குத் தீமை செய்ய விரும்ப மாட்டேன். நான் அநேக பிரம்ம சமாஜப் பெண்களைப் பார்த்திருக்கிறேன். இரண்டொரு நல்லவர்களும் இருக்கலாம். அதைப்பற்றி யில்லை. ஆனால், நமது ஹிந்துக்கள் வீட்டுப் பெண்களுடன் அவர்களை ஒப்பிட முடியாது. நீ விவாகம் செய்துகொள்ள விரும்பியிருந்தால், என்னிடம் ஏன் சொல்லவில்லை? சரி, போகட்டும். ஆனது ஆகிவிட்டது. இனி நீ அங்கே போகவேண்டிய அவசியமில்லை. நான் உனக்கு வாக்குக் கொடுக்கிறேன். வாழ்க்கையில் ஒருபொழுதும் துக்கம் ஏற்படக் காரணமாகாத ஒரு பெண்ணை ஒரு மாதத்திற்குள் உனக்குத் தேடித் தருகிறேன். கொடுக்க முடியாவிட்டால், பிறகு உன் இஷ்டம் போல் செய்துகொள்ளலாம். அவளுடைய திருப் பாதங்களிலேயே வேணுமானாலும் போய் விழு. நான் உன்னைத் தடுக்கமாட்டேன். ஆனால், ஒரு மாதம்வரை, தைரியத்துடன் நமது பாலிய நட்பிற்கு மரியாதை வைத்துத்

தான் ஆகவேண்டும். சொல்லு, வைக்கிறாயா?' என்றான் ஸுரேசன் மறுபடியும்.

மஹிம் முன்போலவே மௌனமாக இருந்தான். 'ஆம்' 'அல்ல' என்று ஒரு பதிலும் சொல்லவில்லை. ஆனால், ஸுரேசன் தன்னுடைய நண்பனின் நன்மைக்காக எவ்வளவு அந்தரங்கத்துடன் வருந்துகிறான் என்பதை அவன் பூர்ணமாக அறிந்துகொண்டான்.

ஸுரேசன் மறுபடியும், 'மஹிம்! கொஞ்சம் ஞாபகப் படுத்திப் பார். நீ பிரம்ம சமாஜியாக இல்லாமலிருந்தாலும், நீ பிரம்ம சமாஜக் கோயிலுக்குச் செல்ல ஆரம்பித்த போது, நான் உன்னை அடிக்கடி தடை செய்யவில்லையா? இவ்வளவு பெரிய கல்கத்தா நகரில் உனக்கு ஒரு ஹிந்துக் கோயில் இல்லையா? நீ திருட்டுத்தனம் செய்ய அவசியம் ஏற்பட்டதிலிருந்தே நீ இம்மாதிரி ஒரு ஆபத்தில் சிக்கிக் கொள்ளவேண்டி வரும் என்று நான் அப்பொழுதே சந்தேகப்பட்டேன்' என்றான்.

இந்தத் தடவை, மஹிம் சற்று சிரித்துக்கொண்டே, 'செய்தாய் என்பதை ஒப்புக்கொள்கிறேன். ஆனால் நான் சென்றதில் திருட்டுத்தனம் ஒன்றும் இல்லை. ஆனால், ஸுரேஷ்! உன்னிடம் ஒன்று கேட்கிறேன், நீதான் கடவுளையே மதிப்பதில்லை. அப்படி யிருக்கும் பொழுது ஹிந்துக்களின் தேவதைகளை என்ன மதிக்கப் போகிறாய்? இந்நிலைமையில் நான் ஹிந்துக் கோயிலுக்குப் போனாலென்ன, பிரம்ம சமாஜக் கோயிலுக்குப் போனாலென்ன? இதில் உனக்கு என்ன கெட்டுப் போய்விடுகிறது?' என்றான்.

ஸுரேசன் திடமான குரலுடன், 'அது இல்லவே யில்லை; அதை நான் மதிப்பதே யில்லை. கடவுள் இல்லை; தேவதைகளும் பொய்க் கற்பனைகள். ஆனால் எது இருக்கிறதோ அதை மறுக்க முடியாது. சமூகத்தினிடம் நான்

மரியாதை வைக்கிறேன். மனிதர்களைப் பூசிக்கிறேன். மனிதர்களுக்கு சேவை செய்வதே மனித ஜன்மத்தின் ஸாபல்யம் என்று அறிகிறேன். எப்போது ஹிந்து வீட்டில் பிறந்துவிட்டேனே, ஹிந்து சமூகத்தை ரட்சிப்பது என் வேலை. என் உயிர் போனாலும், நீ பிரம்ம சமாஜிகளின் வீட்டில் மணம் செய்துகொண்டு அவர்கள் பலம் பெருகும் படி செய்ய விடமாட்டேன். கேதார் முகர்ஜியின் மகளைக் கலியாணம் செய்துகொள்வதாக நீ வாக்குக் கொடுத்திருக்கிறாயா ?' என்று கேட்டான்.

'இல்லை! வாக்குக் கொடுப்பது என்று எதைச் சொல்லுகிறீர்களோ, அதை இன்னும் கொடுக்கவில்லை!' என்றான் மஹிம்.

'கொடுக்கவில்லையா ? நல்லது, நல்லது! பின்னே பேசாமலிரு. நான் இந்த மாதத்திற்குள்ளேயே உனக்கு விவாகம் செய்துவைக்கிறேன்.'

'நான் கலியாணப் பைத்தியம் பிடித்து அலைகிறேனென்று உன்னிடம் யார் சொன்னார்கள் ? நீயும் பேசாமலிரு. வேறு எங்கும் எனக்கு விவாகம் நடப்பது என்பது முடியாது.'

'ஏன் முடியாது ? என்ன செய்தாய் ? அந்த அம்மாளிடம் காதல் கொண்டுவிட்டாயோ ?'

'ஆச்சரியம் ஒன்றுமில்லை ! ஆனால், ஸுரேஷ் ! அந்தக் கண்ணியமான ஸ்திரீயைப் பற்றி நீ மரியாதையுடனேயே பேசு.'

'மரியாதையுடன் பேச எனக்குத் தெரியும். நீ எனக்குக் கற்றுக்கொடுக்க வேண்டியதில்லை. கௌரவிக்கத் தகுந்த அந்தப் பெண்மணியின் வயதென்ன சொல்லேன், சற்று !'

'எனக்குத் தெரியாது.'

'தெரியாதா, இருபது, இருபத்தைந்து, முப்பது, நாற்பது, இல்லை அதைவிட அதிகமாக — ஒன்றும் தெரியாதா ?'

'தெரியாது.'

'உன்னைவிடச் சின்னவளா, பெரியவளா? அதுவும் தெரியாதா?'

'தெரியாது.'

'எப்பொழுது உன்னை வலையில் சிக்க வைத்தாளோ, அவள் சிறு குழந்தையாக இருக்கமாட்டாள் என்று நான் அனுமானிப்பது அவ்வளவு முறையற்றதாகாது. என்ன சொல்லுகிறாய்?'

'இல்லை, உன்னைப்பற்றிய வரையில் எதுவும் முறை யற்றதல்ல. ஆனால் எனக்கு இப்பொழுது கொஞ்சம் வேலை யிருக்கிறது. ஸுரேஷ், நான் ஒரு முறை வெளியே செல்ல விரும்புகிறேன்.'

'சரிதான், மஹிம்! எனக்குக்கூட இப்பொழுது வேலை யொன்றுமில்லை, வா. உன்னுடன் சற்று உலாவிவிட்டு வரு கிறேன்.'

நண்பர்கள் இருவரும் வெளியே வந்தார்கள். சிறிது நேரம் பேசாமல் நடந்த பிறகு, ஸுரேஷ் மெதுவாக, 'தெரிந்தே நான் இன்று உனக்கு வருத்தத்தைக் கொடுத்து விட்டேன். இந்த விஷயத்தை அறிவுறுத்தவேண்டிய அவ சியமே யில்லை!' என்றான்.

'இல்லைதான்.'

ஸுரேசன் முன்போல மிருதுவான குரலுடன், 'சரிதான் நான் ஏன் சொன்னேன்?' என்றான்.

மஹிம் சிரித்தான். 'முதல் விஷயத்தை அறிவுறுத் தாமலிருந்தும் அறிந்துவிட்டேன். ஆனால் இதையும் நீ அறிவிக்க வேண்டியிருக்காதென்று எண்ணுகிறேன்' என்றான்.

மஹிமனின் ஒரு கை ஸுரேசனின் கையில் இருந்தது. ஸுரேசன் கலங்கிய சித்தத்துடன் அவன் கையைச் சற்று

அழுத்தி, 'இல்லை மஹிம், நான் உனக்கு அறிவுறுத்த விரும்பவில்லை. உலகில் மற்றவர் என்னைத் தப்பாக நினைத்துக்கொள்ள முடியும். ஆனால், நீ என்னைத் தவறுதலாக நினைத்துக்கொள்ள மாட்டாய். ஆயினும் நான் உன் எதிரிலேயே சொல்லுகிறேன். நான் உன்னிடம் எவ்வளவு அன்பாக இருக்கிறேனோ அதில் பாதியளவு கூட நீ என்னிடம் இருக்கிறதில்லை. நீ எதையும் சட்டை செய்யவில்லை என்பதை நான் ஒப்புக்கொள்கிறேன். ஆனால், நான் உன் துக்கத்தை அசட்டை செய்ய முடியாது. சிறு வயதில் இந்த விஷயமாக நமக்குள் எவ்வளவு சண்டை நடந்திருக்கிறதென்பதை நினைத்துப் பார். இப்பொழுது இவ்வளவு நாட்களுக்குப் பிறகு யாருக்காக என்னைத் தியாகம் செய்து கொண்டிருக்கிறாயோ, மஹிம், அவளுடன் நீ வாழ்க்கையில் சுகமடைவாய் என்பதை நான் நிச்சயமாக அறிந்தால், என் துக்கத்தை யெல்லாம் சிரித்துக்கொண்டே சகித்துக்கொள்வேன். எதிராக ஒரு வார்த்தையும் சொல்லமாட்டேன்!' என்றான்.

'அவளை அடைந்து சுகமே அடையாவிட்டாலும், உன்னை இழந்துவிடுவேன் என்பதை எப்படி அறிந்தாய்?'

'நீ விடு, அல்லது விடாமலிரு; நான் உன்னை விட்டு விடுவேன்!'

'ஏன்? நான் உனக்கு பிரம்ம சமாஜத்தைச் சேர்ந்த ஒரு மித்திரனாக இருக்கலாமல்லவா?'

'இல்லை, அவசியமில்லை. பிரம்ம சமாஜிகளைக் கண்டாலே எனக்குப் பிடிக்காது. எனக்கு பிரம்ம சமாஜ நண்பர்களே கிடையாது.'

'ஏன் அவர்களைக் கண்டால் பிடிக்காது?'

'அநேக காரணங்கள். இது ஒன்று: எந்த ஜனங்கள் நம்முடைய சமூகத்தைக் கெடுதி யென்று சொல்லிவிட்டுச்

சென்றுவிட்டார்களோ, அவர்களை நல்லவர்க ளென்று எவ் வகையிலும் நம்மிடம் இழுக்க முடியாது. நம்முடைய சமூ கத்தை யார் பரதேசத்திலும், சுதேசத்திலும், எல்லோர் முன் னிலையிலும், குறைவுபடுத்த விரும்புகிறார்களோ, அவர்கள் நன்மை அவர்களிடமே யிருக்கட்டும் — நாம் அவர்களுடைய சத்துருக்கள்!'

மஹிம் மனத்திற்குள் பொறுமையை இழந்து வந்தான். 'நீ இப்பொழுது என்னை என்ன செய்யச் சொல்லுகிறாய்?' என்றான்.

'அப்பொழுதிலிருந்து எதைச் சொல்லி வந்திருக் கிறேனோ அதைத்தான்!'

'சரி, இன்னும் ஒருமுறை சொல்லேன்.'

'எப்படியாவது அந்த யுவதியின் மேல் உனக்கிருக்கும் மோகத்தை விடவேண்டும். குறைந்தது ஒரு மாதத்திற்கு முன் அவளைச் சந்திக்கக் கூடாது.'

'ஆனால் அதை விடாவிட்டால், மோகத்தைவிட மேலானதாக ஒன்றிருந்தால்?'

ஸுரேசன் சிறிது நேரம் யோசித்துவிட்டு, 'மஹிம்! அதெல்லாம் எனக்குத் தெரியாது. எனக்குத் தெரிந்தது இதுதான். உன்னிடம் எனக்கு அன்பு இருக்கிறது. அதை விட அதிகமாக சமூகத்தினிடம் அன்பு செலுத்துகிறேன். ஒரு தரம் யோசித்துத்தான் பாரேன், உன்னுடைய சிறு வய தில் வந்த அந்த வியாதியின் விஷயத்தை! மேலும், முங்கேரில் கங்கையில் ஓடம் முழுகியவுடன், இருவரும் இறந்து போவது போலிருந்தோமே, அந்த விஷயத்தை நினைத்துப் பார்! மறந்துபோன கதையை ஞாபகப்படுத்தியதற்கு என்னை மன்னித்துவிடு, மஹிம்! இனி நான் சொல்லவேண்டிய தொன்றுமில்லை. நான் போகிறேன்!' என்று சொல்லி, சட்டென்று வெகு வேகமாகப் பின்புறம் செல்லலானான்.

## III

ஸுரேசனின் குரலில் எவ்வளவு வேகம் இருந்ததோ அவ்வளவு மிருதுத் தன்மையும் சிநேக சீலமும் அவன் உள்ளத்தில் இருந்தன. பழகியவர்கள் பழகாதவர்கள் யாருடைய கஷ்டத்தைக் கேட்டாலும், துக்க மிகுதியால் அவனுக்கு அழுகை வந்துவிடும். சிறு வயதில் ஈ எறும்பைக் கூட அவன் அடித்ததில்லை. ஜைன மார்வாடிகளைப் பார்த்து எத்தனையோ நாள் அவன் பையில் மாவும் சர்க்கரையும் எடுத்துக்கொண்டு போய், பள்ளிக்கூடம் போகாமல், மரங்களிடையே சுற்றி, எறும்புகளுக்கு ஆகாரம் அளிப்பான். வாழ்க்கையில் எத்தனை தடவை மாமிசம் சாப்பிடுவதில்லை என்று விட்டிருக்கிறான்! எத்தனை தடவை மீண்டும் ஏற்றுக்கொண்டிருக்கிறான்! இதற்கு ஒரு கணக்குக் கிடையாது. யாரிடம் அன்பு செலுத்துகிறானோ அவனுக்காக, எப்படி, என்ன செய்வது என்பது அவனுக்கு விளங்கவில்லை. பள்ளிக்கூடத்தில், வகுப்புக்குள்ளேயே, மஹிம் ஒருவன் தான் நல்ல பையன். ஆனால் அவனுடைய துணிகள், சட்டைகள் கிழிந்து போயிருக்கும். மெலிந்த சரீரம். உலர்ந்த முகம். இவைகள் எல்லாவற்றையும் பார்த்து ஸுரேசனுக்கு அவனிடம் ஒரு பற்றுதல் ஏற்பட்டது. சில நாட்களுக்குள் இந்தப் பற்றுதல், வெள்ளத்தைப் போலப் பெருகி, பள்ளிக் கூடத்துப் பிள்ளைகளும் இதைப்பற்றி யோசிக்கும்படி ஆகி விட்டது. உபகாரச் சம்பளம் பெறுவதற்கான தனிப் பரீட்

சையில் மஹிம் தேறி, அதனால் கிடைத்த அந்த நாலு ரூபாய்களை நம்பி கல்கத்தா வந்து, தன்னுடைய கிராமத்துக் கடைக்காரன் ஒருவன் வீட்டில் வசித்துப் பள்ளிக்கூடத்தில் சேர்ந்தான். அப்பொழுதிருந்து ஸுரேசன் அவனைத் தன் வீட்டிற்கு அழைத்துக்கொண்டு போய் வைத்துக்கொள்ளப் பலவிதமான முயற்சிகள் செய்தான். ஆனால் எவ்விதத்திலும் அவனை ஒப்புக்கொள்ளச் செய்ய முடியவில்லை. அங்கேயே இருந்து, சில தினங்களில் அரை வயிறு சாப்பிட்டும், சில தினங்கள் பட்டினியிருந்தும், மஹிம் பிரவேசப் பரீட்சை பாஸ் செய்தான். இதற்குப் பிந்தின சம்பவங்கள்தான் முத அத்தியாயங்களில் விவரிக்கப்பட்டிருக்கின்றன.

அந்த தினத்திலிருந்து ஒரு வாரம் கழிந்தது. ஸுரே சன் மஹிமைக் காணவே முடியவில்லை. ஆகையால் அவ மஹிமனுடைய விடுதிக்குச் சென்றான். அன்று ஏதோ ஒ விசேஷத்திற்காக காலேஜுக்கு விடுமுறை. விடுதிக்குச் சென் தும், காலையிலேயே வெளியே சென்ற மஹிம் அதுவன வரவில்லை என்பதைக் கேள்விப்பட்டான். அவன் விடுமுன நாட்களைக் கழிக்க படல்டாங்கா கேதார் முகர்ஜியின் வீ டுக்குக் கட்டாயம் போயிருப்பான் என்பதில் ஸுரேசனு குச் சற்றும் சந்தேகம் ஏற்படவில்லை.

தன்னுடைய சிறு வயது முதல் வளர்ந்து வந்திருக்கு நட்பின் மரியாதையைக் குலைத்து, சாதாரணமான ஒரு ஸ்தி யின் மோகத்தில் விழுந்து, ஒரு வாரம்கூடப் பொறுக்கா விழுந்தடித்துக்கொண்டு அங்கே ஓடிய தன் நண்பனை பற்றி, ஸுரேசனின் மனத்தில், அவன் உணர்ச்சிகளுக்கு ரிடையாக, ஒரு துவேஷத்தின் நெருப்பு திடீரென்று பட்டது, அக்னி உற்பாதம் போல. அவன் ஒரு கணம் யோசனை செய்யாமல் வண்டியில் ஏறி, வண்டியைப் பட டாங்காவுக்கு ஓட்டச் சொல்லி மனத்திற்குள் சொல்

கொள்ளலானான் : 'அடே! மானம் அற்றவனே! நன்றி கெட்டவனே! நீ உன்னுடைய எந்த உயிரை இந்த ஸ்திரீக்குக் கொடுத்து உன்னைத் தன்யனாக எண்ணிக்கொண்டிருக்கிறாயோ, அந்த உயிர் இன்று எங்கே இருக்கிறது? தன் உயிரை லட்சியம் செய்யாமல் இரண்டு தடவைகள் யார் அந்த உயிரைக் காப்பாற்றினார்கள்? அதற்குச் சற்றாவது மரியாதை வைக்கவேண்டாமா நீ?'

கேதார் முகர்ஜியின் வீடு இருக்கும் தெரு ஸுரேசனுக்குத் தெரியும். சாதாரணமாக இரண்டொரு விசாரிப்புகளுக்குப் பிறகு வண்டி அங்கு வந்து சேர்ந்தது. வண்டியிலிருந்து இறங்கி அங்கு இருந்த வேலைக்காரியிடம் ஸுரேசன் ஏதோ கேட்டுவிட்டு, மேலே சென்று, முன் அறையில் நுழைந்தான்.

சமுக்காளத்தின் மேல் விரித்திருந்த மெத்தையின் மீது தலையணையில் சாய்ந்துகொண்டு வயோதிகரான ஒரு கனவான் பத்திரிகை படித்துக்கொண்டிருந்தார். அவர் அவன் பக்கம் பார்த்தார். ஸுரேசன் நமஸ்காரம் செய்துவிட்டுத் தன்னை அறிமுகம் செய்துகொண்டான்.

'என் பெயர் ஸுரேச சந்திர பானர்ஜீ — நான் மஹிமின் நண்பன்!' என்றான்.

விருத்தர் பதில் நமஸ்காரம் செய்துவிட்டு, மூக்குக் கண்ணாடியைக் கழற்றிக்கொண்டே, 'உட்காருங்கள்!' என்றார்.

ஸுரேசன் உட்கார்ந்துகொண்டே, 'நான் மஹிமின் விடுதிக்குச் சென்றேன். அவன் இங்கே வந்திருப்பதாகக் கேள்விப்பட்டேன். ஆகையால் — போகட்டும், இந்தச் சாக்கில் தங்களுடைய பரிசயமும் ஏற்படட்டும் என்று வந்தேன்' என்றான்.

'தாங்கள் வந்தது எனது பெரும் பாக்கியம். ஆனால், பத்துப் பன்னிரண்டு நாட்களாக மஹிமும் இங்கே வரவில்லை.

நாங்களும் இன்று காலை அவர் எப்படி இருக்கிறாரோ எ
னமோ என்று யோசித்தோம்' என்றார்.

ஸுரேசன் மனத்திற்குள் சற்று ஆச்சரியம் அடைந்த
ாய், 'ஆனால் அவன் விடுதியில் உள்ளவர்கள் சொ
னார்கள்......' என்றான்.

'ஒருகால் வேறு எங்கேயாவது போயிருப்பார்
போகட்டும், நன்றாக இருக்கிறார் என்று கேட்டு கவலை
யற்றேன்.'

வழியில் வரும்பொழுது ஸுரேசன் மனத்திற்குள் என்
னென்ன உக்கிரமான சங்கல்பங்கள் செய்திருந்தானோ
அவற்றை அந்த வயோதிகரின் முன் சரியாக வெளியிட
முடியவில்லை. அவருடைய சாந்தமான முகமும், மிருது
வான வார்த்தைகளும் அவன் உள்ளத்திலிருந்த கோபத்
தைச் சாந்தம் செய்துவிட்டன.

ஆயினும் அவன் தன்னுடைய கடமையை மறக்கவில்லை.
அவன் தன் மனத்திற்குள், 'இவர் எவ்வளவுதான் நல்லவராக
இருக்கட்டும், கடைசியில் பிரம்ம சமாஜிதானே! இவர்களு
டைய சிஷ்டாசாரங்கள் போலிதானே! இவர்கள் இம்மாதிரி
முட்டாள்களை அழைத்துத் தங்கள் காரியத்தைச் சாதித்துக்
கொள்ளுகிறார்கள். ஆகையால் இந்தத் தன்னல வேட்டைக்
காரர்கள் முன் என்னை மறந்துவிட்டால் காரியம் ஒன்றும்
நடவாது. எப்படி வேண்டுமானாலும் இருக்கட்டும், இவரு
டைய சூழ்ச்சியிலிருந்து நம்முடைய நண்பனைக் காப்பாற்றவே
வேண்டும்' என்று சொல்லிக்கொண்டு தன்னைத் தானே
தேற்றிக்கொள்ளலானான்.

அவன் தான் வந்த விஷயத்தைப் பிரஸ்தாபிக்கலானான்.
'மஹிம் என்னுடைய பாலிய கால நண்பன். தாங்கள் உத்
தரவிட்டால் அவனைப்பற்றித் தங்களிடம் இரண்டொரு வார்த்
தைகள் சொல்லலாம்' என்றான்.

விருத்தர் சற்று சிரித்துக்கொண்டே, 'பேஷாகச் சொல்லலாம். நான் தங்கள் பெயரை அவர் வாயிலாகக்கூடக் கேட்டிருக்கிறேன்' என்றார்.

'மஹிமுக்குத் தங்கள் பெண்ணை விவாகம் செய்து கொடுப்பது என்பது நிச்சயமாகிவிட்டதா?'

'ஆமாம், ஒரு மாதிரி நிச்சயமானது என்றே வைத் துக்கொள்ளுங்கள்.'

'ஆனால், மஹிம் தங்கள் பிரம்ம சமாஜத்தில் சேரவில் லையே, இருந்தும் நீங்கள் மணம் செய்து கொடுப்பீர்களா?'

விருத்தர் மௌனமாக இருந்தார்.

ஸுரேசன் மீண்டும், 'சரி, அந்த விஷயம் இப்பொழுது இருக்கட்டும். ஆனால் அவனுடைய பொருளாதார நிலைமை என்ன? மனைவி மக்களைப் போஷிக்க அவனுக்கு யோக்கியதை உண்டா, இல்லையா? பட்டிக்காட்டு ஹிந்து சமூகத்தின் மத்தியில், ஓட்டை மண் வீட்டில், தங்கள் பெண் இருக்க முடியுமா, முடியாதா? இருக்க முடியாவிட்டால் மஹிம் என்ன உபாயம் செய்வான்?—இவற்றையெல்லாம் தாங்கள் யோசித் துப் பார்த்தீர்களா?' என்றான்.

விருத்தர் கேதார் பாபு ஒரு முறை சரியாக நிமிர்ந்து உட்கார்ந்தார். 'இல்லையே, இந்த விஷயங்களையெல்லாம் நான் கேள்விப்படவில்லை; மஹிமும் ஒரு நாளும் ஒன்றும் சொன்னதில்லை!' என்றார்.

'ஆனால், நான் இவை எல்லாவற்றையும் யோசித்துப் பார்த்தேன். மஹிமிடமும் சொல்லியிருக்கிறேன். மனத்திற் குப் பிடிக்காத இந்த விஷயத்தைத் தங்களிடம் சொல்லவே நான் இன்று வந்தேன். தங்கள் பெண் விஷயமாகத் தாங்கள் யோசித்துப் பார்க்கலாம். ஆனால் எனது அருமை நண்பன் இந்தப் பெரும் பொறுப்பைச் சிரமேல் தரித்து, அதன் பாரத் தால் உயிர்ப் பிணமாக ஆக நான் விடமாட்டேன்!' என்றான்.

கேதார் பாபுவின் முகம் சுண்டியது. 'ஸுரேஷ் பாபு, தாங்கள் என்ன சொல்லிக்கொண்டிருக்கிறீர்கள்?' என்றார்.

'அப்பா!' என்று கூப்பிட்டுக்கொண்டே, பதினாறு பதினேழு வயதுள்ள ஒரு பெண், சட்டென்று அறையில் நுழைந்தாள். தந்தை அருகில் ஓர் அன்னியர் இருப்பதைப் பார்த்துத் தயங்கி நின்றுவிட்டாள்.

'யார், அசலாவா? வா அம்மா, வெட்கம் என்ன? இவர் நமது மஹிமின் நெருங்கிய நண்பர்.'

அந்தப் பெண் சற்று முன்னால் வந்து இரு கைகளையும் எடுத்து ஸுரேசனுக்கு நமஸ்காரம் செய்தாள். ஸுரேசன் பார்த்தான். பெண் நல்ல சிவப்பு. கொடி போன்ற உடம்பு. முகம், நெற்றி யாவும் சௌந்தரிய சின்னமாக இருந்தன. கண் பார்வை ஒருவிதமான ஸ்திர புத்தியைக் காட்டியது. நமஸ்காரம் செய்துவிட்டு அவன் அருகேயே அமர்ந்தாள். ஸுரேசன் அவளுடைய முகத்தைப் பார்த்த நிமிஷமே அவளிடம் பிரியம் கொண்டுவிட்டான்.

இதற்குள் அவள் தந்தை, 'மஹிமின் விஷயத்தைக் கேட்டாயா அம்மா? அவன் வரவில்லையே என்று நாம் யோசனையில் மூழ்கிக் கிடக்கிறோமே! இவரிடம் கேள். இவர் அவருடைய அத்தியந்த நண்பராகையால் சொல்வதற்காக வந்திருக்கிறார். இல்லாவிட்டால் என்ன ஆகியிருக்கும், பாரேன்? அவன் இப்படி நம்பிக்கை மோசம் செய்பவன், இந்த மாதிரி பொய் சொல்பவன் என்று யார் கண்டார்கள்? அவனுக்குக் கிராமத்தில் ஓர் ஓட்டை வீடு இருக்கிறதாம். அதுவும் மண் வீடு. அவனுக்கே சாதாரண சாப்பாடு கிடைக்க வழியில்லாத போது உனக்கு எப்படிச் சோறு போடப் போகிறான்? ஆகா! எவ்வளவு பயங்கரமான மனிதன்! அவன் உள்ளத்தில் விஷமா, அடடா!' என்றார்.

விஷயத்தைக் கேட்டு அசலாவின் முகம் வெளுத்தது. ஸுரேசனுடைய முகமும் ஏனோ கறுத்தது. அவன் ஒன்றும் தோன்றாமல், பொம்மை போலத் தன் பார்வையை அந்தப் பெண் பக்கம் செலுத்தி, பேசாமல் உட்கார்ந்திருந்தான்.



# IV

தன்னுடைய நிஷ்டுர வார்த்தைகள் நேரே சென்று அசலாவின் உள்ளத்தில் குத்தின என்று ஸுரேசனுக்கு ஒரு முறை தோன்றியது. ஆனால் அவளுடைய தந்தை தன் காதில் படும்படி, 'ஸுரேஷ் பாபு, தாங்கள் உண்மையான நட்பின் கடமையை நிறைவேற்ற வந்திருக்கிறீர்கள். நாங்கள் தவறிக்கூட, இதில் அவநம்பிக்கைப் படமாட்டோம். பிரியமில்லாதது போலக் கடுமையாகத் தோன்றினாலும்கூட இதுதான் உண்மையான அன்பு. தாய் தன்னுடைய நோயுள்ள குழந்தைக்கு ஆகாரம் கொடுக்காமல் மறைத்தால், அது கொடுமை ஆகிவிடுமா? ஆனால் அவள் அந்தக் காரியத்தைச் செய்யத்தான் வேண்டியிருக்கிறது. உண்மையாகச் சொல்லுகிறேன், ஸுரேஷ் பாபு, மஹிம் இவ்வளவு பெரிய அநியாயத்தைச் செய்வார் என்று நாங்கள் கனவிலும் நினைக்கவில்லை. கிட்டத்தட்ட இரண்டு வருஷங்களுக்கு முன், சமாஜத்தில் அவருடைய வார்த்தையிலும் நடவடிக்கையிலும் பிரியப்பட்டு, நானே அவரை மரியாதையுடன் என் வீட்டிற்கு அழைத்து வந்து அசலாவிற்கு அறிமுகம் செய்துவைத்தேன். அவர் இந்த மாதிரிப் பழி தீர்த்துக்கொள்வார் என்று யார் கண்டார்கள்? இவ்வளவு பெரிய மோசத்தை என் வாழ் நாளில் நான் கண்டதில்லை' என்று சொல்லிக் கொண்டே, தன் உள்ளத்தின் துடிப்புடன், கேதார் பாபு எழுந்திருந்து இங்கு மங்கும் நடக்கலானார்.

ஸுரேசனும், அசலாவும் பேசாமல் தலை குனிந்து உட்கார்ந்திருந்தார்கள். கேதார் பாபு, சட்டென்று பிரமித்து நின்று மகளைப் பார்த்து, 'இல்லை அம்மா, இது நடக்கக் கூடியது அல்ல. அவசியமில்லை. ஸுரேஷ் பாபு, தாங்கள் எந்த லட்சியத்திற்கு உயர்ந்த ஸ்தானத்தைக் கொடுத்து நட்பின் கடமையைச் செய்ய வந்திருக்கிறீர்களோ, நானும் அதே லட்சியத்துடன் தந்தையின் கடமையைச் செய்வேன். அசலாவுக்கும் மஹிமுக்கும் இடையே நட்பு இவ்வளவு வளர்ந்திருக்கிற பொழுது நான் காரணம் இல்லாமல் அவன் முகத்தின் முன் கதவைச் சாத்துவது அவ்வளவு நன்றாக இருக்காது. ஆகையால் இந்த விஷயத்திற்கு ஒரு பிரமாணம் அவசியம் வேண்டும். தங்களுடைய வார்த்தையில் அவநம்பிக்கைப் படுவதாகத் தாங்கள் நினைக்கக் கூடாது. ஆனால் இதுவும் என் கடமைதான். என்ன அம்மா, அசலா, நமக்கு ஒரு பிரமாணம் வேண்டுமா, வேண்டாமா?' என்றார்.

இருவரும் முன்போல பேசாமல் உட்கார்ந்திருந்தார்கள். உசிதம், அநுசிதம் எதைப்பற்றியும் யாரும் அபிப்பிராயம் சொல்லவில்லை.

கேதார் பாபு ஒரு கணம் யாராவது பதில் சொல்லுவார்களா என்று பார்த்துவிட்டு மறுபடியும், 'ஆனால் ஸுரேஷ் பாபு! இதைப் பற்றிய பிரமாணத்தின் பாரம் தங்கள் மேல் தான் இருக்கிறது. மஹிமின் குடும்ப நிலைமையை அறிவதென்பது எங்களுக்கு வெகு தூரம். எங்கே, எந்தக் கிராமத்தில், அவன் வீடு இருக்கிறது — இதுகூட எங்களுக்குத் தெரியாது!' என்றார்.

இதற்குள் வேலைக்காரன் வந்து, 'கீழே விகாஸ் பாபு வந்திருக்கிறார்!' என்று தெரிவித்தான்.

அதைக் கேட்டு கேதார் பாபுவின் மனம் சலித்தது. 'இன்று அவர் வருவதாக இல்லையே! சரி, நான் வருவதாகப்

போய்ச் சொல்' என்று சொல்லி, ஸுரேசனின் பக்கம் திரும்பி, 'ஸுரேஷ் பாபு, ஐந்தாறு நிமிஷங்களுக்கு என்னை மன்னித்துக்கொள்ளுங்கள். அவருக்கு விடை கொடுத்து அனுப்பி விட்டு வருகிறேன். எப்பொழுது வந்துவிட்டாரோ, சந்திக்காமல் தட்டிக் கழிக்க முடியாது. அசலா, ஸுரேஷ் பாபுவை நமது அத்தியந்த நண்பராகப் பாவித்துக்கொள். என்னென்ன தெரிந்துகொள்ள வேண்டுமோ இவரிடம் தெரிந்துகொள். நான் இதோ வந்துவிடுகிறேன்!' என்று சொல்லி, கீழே சென்றார்.

அப்பொழுது ஒரு கணம் இருவர் கண்களும் சந்தித்தன. இருவரும் தலை குனிந்தனர். சிறிது நேரம் சும்மா இருந்த பிறகு, ஸுரேசன் மெதுவாக, 'நாங்கள் இருவரும் பால்ய நண்பர்கள். ஆனால் அவனுடைய நடத்தையால் தங்கள் முன் வெட்கத்தால் என் தலை குனிகிறது' என்றான்.

அசலா மெதுவான குரலில், 'அவருக்காகத் தாங்கள் வெட்கப்பட வேண்டிய அவசியமில்லை' என்றாள்.

'தாங்கள் என்ன சொல்லுகிறீர்கள்? அவனுடைய இந்தக் கபடமான செய்கை, இந்த மோசமான பழக்கம் - இவைகளால், நண்பனாகிய நான் வெட்கப்படாவிட்டால், வேறு யார் படப்போகிறார்கள், சொல்லுங்கள்? உண்மையை எப்பொழுது அவன் ஆரம்பத்திலிருந்து இதுவரை என்னிடமிருந்து மறைத்து வந்திருக்கிறானோ, அப்போதே உள்ளுக்குள் அவன் ஏதோ ஒரு பெரிய தவறைச் செய்து வருகிறான் என்று நான் அறிந்திருக்க வேண்டும்' என்றான்.

'நாங்கள் பிரம்ம சமாஜிகள். தாங்கள் இந்த சமாஜத்தைச் சேர்ந்த யாரிடமும் பழக்கம் வைத்துக்கொள்வதை விரும்பவில்லை. இதனால் ஒருகால் அவர் இதைத் தங்களிடம் பிரஸ்தாபிக்காமல் இருந்திருக்கலாம்' என்றாள் அசலா.

இந்த வார்த்தைகள் ஸுரேசனுக்குப் பிடிக்கவில்லை. அவன் எதிரேயே அசலா மஹிமின் குற்றத்தை மாற்ற முயற்சி செய்வாள் என்று அவன் எண்ணவில்லை. வரண்ட குரலுடன், 'இந்த விஷயம் தாங்கள் மஹிமிடமிருந்து கேட்டிருப்பீர்கள் என்று நினைக்கிறேன்' என்ருன்.

அசலா தலை யசைத்து, 'ஆமாம், அவர் ஒரு நாள் சொன்ஞர்' என்ருள்.

'அவன் என்னுடைய குற்றத்தைச் சொல்ல மறக்க வில்லை என்று எண்ணுகிறேன்.'

அசலா ஒரு மெல்லிய சிரிப்புச் சிரித்துவிட்டு, 'இதில் குற்றம் சொல்லக்கூடிய விஷயம் என்ன இருக்கிறது? எல்லோருடைய குணங்களும் ஒரே மாதிரியாக இருப்பதில்லை. தங்களுடைய பழக்கங்களை விட்டுவிட்டவர்களிடம் பழகத் தங்களுக்குப் பிடிக்காவிட்டால் அதில் நான் குற்றம் என்று எண்ண என்ன இருக்கிறது?' என்ருள் அசலா.

இந்த விஷயம் ஸுரேசனுடைய மனத்திற்குப் பிடித்ததுதான். வேறு எங்கேயாவது கேட்டிருந்தால் அவன் குதித்திருப்பான். ஆனல், அளந்து பேசும் அந்த யௌவன பிரம்ம சமாஜப் பெண்ணின் வாயிலாகப் பிரம்ம சமாஜத்தின் மேல் தனக்கு இருக்கும் வெறுப்பின் விஷயத்தைக் கேட்டு, அன்று அவனுக்குக் கொஞ்சங்கூடச் சந்தோஷம் ஏற்பட வில்லை. உண்மையில் இந்தக் கட்சி கட்டுகிறவர்களின் வாதங் களை யெல்லாம் கேட்பதற்காக அவன் இந்த வார்த்தையைச் சொல்லவில்லை. மஹிமின் வாயினல் தன்னைப் பற்றிய நற் குணங்கள் ஏதாவது அவள் காதுவரை எட்டியிருக்கிறதா என்பதை அறியத்தான் அவன் விரும்பினன். ஆனல், அவனிடம் ஒளிந்திருந்த இந்த அபிலாஷையை அசலா அறிய முடியவில்லையோ என்னமோ, அதனல்தான் கேள் விக்கு நேரான விடை அளித்துவிட்டுப் பேசாமல் இருந்தாள்.

ஸுரேசன் வருத்தமடைந்து, 'எனக்கு, தங்கள் சமூகத்தினிடத்தில் துவேஷம் இருக்கிறதா, இல்லையா என்பதைப் பற்றிய சர்ச்சைகளை மஹிமே செய்துகொள்ளட்டும். ஆனால் அவனிடம் எனக்குச் சிறிதுகூடத் துவேஷம் இல்லை. இந்த வார்த்தையை என் வாயினால் கேட்டும் தாங்கள் அவநம்பிக்கைப்பட வேண்டாம். அவன் என் எதிரில் அன்று இந்த உண்மையை ஒப்புக்கொண்டிராவிட்டால், நான் அவனுடைய குடும்ப நிலைமையைச் சொல்ல வந்திருக்க மாட்டேன்' என்றான்.

அசலா ஸுரேசனின் முகத்தை ஸ்திர திருஷ்டியுடன் பார்த்துக்கொண்டே, கலங்காத குரலில், 'ஆனால் அவர் என்னமோ ஒரு பொழுதும் பொய் சொல்வதில்லை' என்றாள்.

இந்தத் தடவை ஸுரேசன் ஆச்சரியத்தினால் சித்தம் கலங்கியவனானான். ஸ்திரீகளின் வாயிலிருந்து இந்த மாதிரி சாந்தமும் திடமும் கொண்ட பதில் வருமா என்று அவனால் ஒரு கணம் கற்பனை கூடச் செய்ய முடியவில்லை. ஆனால் அது ஒரு கணம்தான். வாழ்க்கையில் அவன் பொறுமையைக் கற்கவில்லை.

அடுத்த கணமே அவன் பதட்டமடைந்தவனாய், 'என்னை மன்னித்துக்கொள்ளுங்கள், அவன் என்னுடைய பால்ய நண்பன். தங்களைவிட நான் அவனைக் குறைவாக அறிந்திருக்க மாட்டேன். ஆனால் இங்கே தன்னை ஒரு விதத்தில் கட்டுப்படுத்திக்கொண்டு, தன் குறைகளை ஸ்பஷ்டமாக ஒப்புக்கொள்ளாதவனை நான் சத்தியவாதி என்று சொல்ல முடியாது' என்றான்.

அசலா முன்போலவே, சாந்தமாக மிருதுவான குரலில், 'அவர் இங்கே ஒரு விதமான பந்தமும் ஏற்படுத்திக் கொள்ளவில்லையே!' என்றாள்.

'தங்கள் தந்தைதானே சொன்னார்? அதைத் தவிர தன்னுடைய தாழ்ந்த நிலைமையைத் தங்களிடம் ஒளித்து வைத்தவனைச் சரியாக நடந்துகொண்டவன் என்று சொல்ல முடியாது. குடும்ப சம்ரக்ஷணையை நிர்வகிக்கச் சாமர்த்திய மில்லாதவன் பிறரிடம் வேண்டுமானால் அதைச் சொல்லாமல் இருக்கட்டும். தங்களிடமாவது அதைச் சொல்லியிருக்கவேண்டும்' என்றான் ஸுரேசன்.

அசலா பேசாமல் இருந்தாள். ஸுரேசன் மீண்டும், 'தாங்கள் ஏன் இப்படி அவனுடைய குற்றங்களை மறைக்கிறீர்கள், சொல்லுங்கள். எல்லா விஷயமும் முன்பே தெரிந்திருந்தால், தாங்கள் அவனுக்கு இவ்வளவு இடம் கொடுத்திருக்க முடியுமா?' என்றான்.

அசலா முன்போலவே பேசாமல் உட்கார்ந்திருந்தாள். அவளிடமிருந்து யாதொரு பதிலும் வாராததால், ஸுரேசன் இன்னும் அதிகக் கலக்க மடைந்து, 'இந்தக் கல்கத்தா நகரில் தங்களை வைத்து ரட்சிக்கத் தனக்குச் சாமர்த்தியமில்லை. அந்த எண்ணமுமில்லை என்று என்னிடம் தன் வாயினாலேயே சொல்லி ஒப்புக்கொண்டிருக்கிறான். தன்னுடைய அந்தச் சிறு கிராமத்தில், தங்களுக்கு நேர் எதிரிடையான ஹிந்து சமூகத்தின் மத்தியில் உள்ள அந்த ஏழ்மையான மண்வீட்டிற்குத் தங்களை அழைத்துக்கொண்டு போக எண்ணினால், அவன் அதைத் தங்களிடம் சொல்லவேண்டியது அவனுடைய கடமையா இல்லையா? இவ்வளவு கஷ்டங்களைச் சகிக்கத் தாங்கள் தயாரா, இல்லையா என்பதைக் கேட்பது அவசியம் இல்லை என்று அவன் நினைத்தானா?' என்று சொல்லி, பதிலை எதிர்பார்த்துத் தலை நிமிர்ந்தான்.

அசலா வருத்தத்துடன் தலை குனிந்துகொண்டு அசையாமல் உட்கார்ந்திருந்தாள். பதில் கிடைக்காவிட்டாலும் தன்னுடைய வார்த்தைகள் வேலை செய்தன என்பதை ஸுரேசன்

உணர்ந்தான். 'பாருங்கள் தங்களிடம் நான் உண்மையாகச் சொல்லுகிறேன். இன்று நான் என் நண்பனைக் காப்பாற்று வது என்ற எண்ணத்துடன் மாத்திரம்தான் வந்தேன். அவன் ஆபத்தில் சிக்காமல் இருக்கட்டும் என்பதுதான் என் உத்தேசம். ஆனால் இப்பொழுது அவனைக் காப்பாற்றுவதை விட தங்களைக் காப்பாற்றுவது எனக்கு இன்னும் மேலான கடமை ஆகிவிட்டது என்பதைக் காண்கிறேன். காரணம், அவனுடைய ஆபத்து அவன் வேண்டுமென்று ஏற்படுத்திக் கொண்டது. ஆனால் தாங்கள் இருளில் தெரியாமல் குதித்துக் கொண்டிருக்கிறீர்கள். இப்பொழுதுதான் தங்கள் தந்தை என்னையே இதன் உண்மையை நிரூபிக்கும் பொறுப்பை வகிக்கும்படி சொன்னார். நண்பனுக்கு எதிராக இதை ஒப்புக் கொள்ள வேண்டாம் என்று எண்ணினேன். ஆனால் இப் பொழுது இந்த வேலையை நானே செய்துதீரவேண்டும் என்று தோன்றுகிறது. இல்லாவிட்டால் நியாயமாகாது' என்றான்.

'ஆனால் இதைக் கேட்டால் அவர் துக்கமடைய மாட் டாரா?' என்றாள் அசலா.

'வேறு வழியில்லை. மோசக்காரனைப் போலத் தங்களை அவன் இவ்வளவு தூரம் ஏமாற்றிவிட்டான். ஆகையால் என்னுடைய ஆப்த நண்பனாக இருந்தாலும், அவனுடைய சுக துக்கத்தைப்பற்றி இனிச் சிந்திக்கவேண்டியது அவசியம் என்று நான் எண்ணவில்லை. ஆனால் ஆபத்து என்னவென் றால், எனக்கு அவனுடைய கிராமத்தின் பெயர்கூடத் தெரி யாது. எப்படியாவது இன்று எனக்கு அது தெரிந்தால், நாளை நானே நேரில் அங்கு சென்று எல்லா உண்மைகளையும் திரட்டிக்கொண்டு வந்து தங்கள் தந்தை முன் வைத்து, நண் பனின் பாபத்திற்குப் பிராயச்சித்தம் செய்வேன்.'

'ஆனால், தாங்கள் ஏன் இவ்வளவு கஷ்டப்படுகிறீர்கள்? தந்தையிடம் சொல்லிவிடுங்களேன்! அவர் நம்பிக்கையுள்ள

தம் மனிதர்களைக் கொண்டு எல்லாவற்றையும் அறிந்து கொண்டு விடுவார். இருபத்திநாலு மைல் தூரத்திலுள்ள ராஜபுரம் அதிக தூரம் ஒன்றுமில்லை' என்றாள் அசலா.

ஸுரேசன் ஆச்சரியத்தினால் பிரமித்துப் போய், 'ராஜ புரமா! அப்படியானால் கிராமத்தின் பெயர் தங்களுக்குத் தெரியும்போ லிருக்கிறது. இன்னும் ஏதாவது தெரியுமா?' என்றான்.

அசலா சுபாவமான முறையில், 'தாங்கள் என்ன சொன்னீர்களோ அவ்வளவுதான் எனக்கும் தெரியும். ராஜ புரத்தில் வடக்குத் தெருவில் ஒரு மண் வீடு. உட்புறம் மூன்று அறைகள். வெளியே சண்டி மண்டபம். அதில்தான் கிராமத்துப் பள்ளிக்கூடம் இருக்கிறது' என்றாள்.

'மஹிமின் வீட்டு நிலைமை?'

'இந்த விஷயமாகத் தாங்கள் என்ன சொன்னீர்களோ அதேதான். சாதாரணமான ஜீவேஜி இருக்கிறது. அதைக் கொண்டு ஏதோ கஷ்டத்துடன் அன்ன வஸ்திரத்துடன் காலம் தள்ள முடியும்.'

'ஆனால், தங்களுக்கு எல்லாம் தெரியும் போல் தோன்று கிறது.'

இவ்வளவுதான் தெரியும். இவ்வளவுதான் நான் அவ ரிடம் ஒரு நாள் கேட்டேன். தங்களுக்குத்தான் தெரியுமே, அவர் ஒரு நாளும் பொய் சொல்வதில்லை என்பது!' என்றாள் அசலா.

ஸுரேசனின் முகம் சுண்டிவிட்டது. 'எப்பொழுது தங்களுக்கு எல்லாம் தெரிந்திருக்கிறதோ, தங்களை ஜாக்கிர தைப்படுத்த நான் வந்தது முற்றிலும் தவறு. தங்களை அவன் ஏமாற்ற விரும்பவில்லை என்றே எண்ணுகிறேன்' என்றான்.

'எனக்குக் கொஞ்சம் கொஞ்சம் தெரியும்தான். ஆனால் தாங்கள் என்னிடம் சொல்ல வரவில்லை. தாங்கள் சொல்ல வந்

தது என் தகப்பனரிடம். அவருக்கு இதுவரை ஒன்றும் தெரியாது. ஆமாம்! தாங்கள் சொன்னல் எனக்கு எவ்வளவு தெரியுமோ அதைத் தந்தைக்கு அறிவிக்க முடியும்' என்ருள் அசலா.

ஸுரேசன் வருத்தமான குரலுடன், 'தங்கள் இஷ்டம். ஆனல் நான் சென்று மஹிமிடம் சகல விஷயங்களையும் சொல்லி இதற்காக மன்னிப்புப் பெற்றுக்கொள்ள வேண்டும். அப்பொழுதுதான் எனக்கு நிம்மதி ஏற்படும்' என்ருன்.

'அதற்கு என்ன அவசிய மிருக்கிறது?'

ஸுரேசன் மீண்டும் பதட்டமடைந்து, 'அவசியமில்லையா? கேட்காமல் கொள்ளாமல் அவன் பேரில் நான் குற்றம் சாட்டியிருக்கிறேன். இது என்னுடைய எவ்வளவு பெரிய தவறு? இதைத் தாங்கள் மனத்திற்குள் அறியவில்லையா? அவனைப் பொய்யன், மோசக்காரன், — சொல்ல வேண்டியது பாக்கி ஒன்றும் வைக்கவில்லை. இவை எல்லாவற்றையும் அவன் எதிரில் ஒப்புக்கொள்ளாமல் நான் எப்படி இதி லிருந்து விடுபட முடியும்?' என்ருன்.

அசலா சிறிது நேரம் பேசாமல் இருந்துவிட்டு, மெதுவாக, 'ஸுரேஷ் பாபு, இவை ஒன்றும் அவசியமில்லை என்று நான்தான் சொன்னேனே. மனத்திற்குள் மன்னிப்புக் கோருவதைவிட வெளிப்படையாக மன்னிப்புக் கோருவதே எந்த நிலைமையிலும் பெரிதென்பதை நான் ஒப்புக்கொள்ளவில்லை. எப்பொழுது இதைக் கேட்டாலே அவருக்கு வருத்தமாகுமோ, இதை அவரிடம் சொல்லவேண்டிய அவசியம் என்ன? நான் இந்த விஷயங்களை அவரிடம் சொல்ல வேண்டாம் என்று அப்பாவையும் தடுத்துவிடுகிறேன்' என்ருள்.

ஸுரேசன், 'சரி' என்று சொல்லிவிட்டு, மீண்டும் சிறிது நேரம் வரை பேசாமல் அசலாவின் முகத்தைப் பார்த்

துக்கொண்டிருந்து, 'மஹிமுக்கு எந்தக் காரணத்தி ஞலும் சிறிதுகூட வருத்தம் ஏற்படக் கூடாது என்பதே என் லட்சியம். தாங்களும் அதே முயற்சியைச் செய்கிறீர் கள். நல்லது, அப்படியே நடக்கட்டும். நான் அவனிடம் ஒன்றையும் சொல்லவில்லை. இன்று அவன் சம்பந்தமாக என் னென்ன விஷயங்கள் என் மனத்தில் எழுந்தனவோ அவற் றையும் சொல்ல விரும்பவில்லை. ஆனால், ஒரே ஒரு விஷயத் தைத் தங்களிடம் சொல்லாமல் நான் விடைபெற்றுக் கொள்ள முடியாது' என்றான்.

அசலா தன்னுடைய அன்பு வழியும் கண்களுடன் அவனைப் பார்த்து, 'நல்லது சொல்லுங்கள்!' என்றாள்.

'அவனிடம் மன்னிப்புக் கேட்க முடியாது. ஆனால் தங்களிடம் மன்னிப்பை விரும்புகிறேன். தாங்கள் மன் னித்து விடுவீர்கள்!' என்று சொல்லிக்கொண்டே அவன் தனது இரு கரங்களையும் குவித்தான்.

'சேச்சே! இது என்ன செய்கிறீர்கள் நீங்கள்?' என்று சொல்லி, ஒரு நொடியில் அசலா சட்டென்று ஸுரேசனின் இரு கரங்களையும் பிடித்து, அந்த க்ஷணமே விட்டுவிட்டு, 'இது என்ன அநியாயம்? நீங்கள்தான் சொல்லுங்கள்!' என்று சொல்லிக்கொண்டிருக்கும்போதே அவள் முகம் வெட்கத்தால் வாடியது.

ஸுரேசன் சரீரம் முழுவதிலும் மயிர்க்கூச் செறிந்தது. இந்த ஆச்சரியகரமான ஸ்பரிசமும் வெட்கம் தவழும் அந்தச் சிவந்த முகமும் அவனை ஒரே யடியாய்ச் செயலறச் செய்து விட்டன. அவன் அசலாவின் குனிந்த முகத்தின் பக்கம் சிறிது நேரம்வரை மௌன பாவத்துடன் பார்த்துக்கொண் டிருந்துவிட்டு, கடைசியில் மெதுவாக, 'இல்லை, நான் ஒரு அநியாயமும் செய்யவில்லை. என்னுடைய கோடி அநியாயங் களுக் கிடையே ஒரு நல்ல காரியம் நடந்திருக்குமானால் அது

இதுதான். தாங்கள் மன்னிப்பதனாலேயே என் மனத்தி லுள்ள வருத்தங்கள் யாவும் அகன்றுவிடும்' என்றான்.

அசலா வியாகூலத்துடன், 'தாங்கள் அம்மாதிரி சொல் லாதீர்கள். யாரைத் தாங்கள் இரண்டு தடவை மரணத்தின் கையினின்றும்......'

'அதையும் சொல்லிவிட்டானா ?'

'ஆமாம், தங்களுக்குச் சமானமான நண்பர் அவருக்கு வேறு யார் இருக்கிறார்கள் ?'

'இல்லை, ஒருகால் உங்களைத் தவிர வேறு யாரும் இருக்க முடியாது. அந்தப் பங்கில் நாம் இருவரும்......'

அசலாவின் முகத்தில் மீண்டும் சற்று சோபை திகழ்ந் தது. 'ஆமாம், நண்பர்! தாங்கள் அவரை மரணத்தின் வாயினின்றும் திருப்பிக்கொண்டு வந்தீர்கள். ஆகையால் அவர் சம்பந்தமாகத் தங்களுடைய எந்தக் காரியத்தையும் அநியாய மென்று எண்ண முடியாது. தாங்கள் மனத்தில் எவ்வித வருத்தமும் லஜ்ஜையும் வைத்துக்கொள்ள வேண் டாம். நானும் தங்களிடம் மன்னிப்புக் கேட்கத் தயாரா யிருந்தேன்' என்றாள்.

'சரி, அவசியமில்லை' என்று சொல்லி, ஸுரேசன் எழுந்து நின்று, 'தங்கள் தந்தையைச் சந்திக்க முடியவில்லை. ஒருகால் அவர் கவலையோடுகூட இருப்பார். மஹிமுடன் மற்றொரு நாள் வருகிறேன். நமஸ்காரம்!' என்றான்.

அசலா புன்சிரிப்புடன், 'நமஸ்காரம். ஆனால் அவருடன் தான் வரவேண்டும் என்பதில்லை!' என்றாள்.

'உண்மையாகத்தான் சொல்லுகிறீர்களா ?'

'உண்மையாகத்தான் சொல்லுகிறேன்!'

'என்னுடைய பெரும் பாக்கியம்!' என்று ஸுரேசன் மீண்டும் ஒருமுறை நமஸ்காரம் செய்துவிட்டுப் புறப் பட்டான்.

# V

வெளியே வந்ததும் அவன் உள்ளமும் உடலும் போதை கொண்டவை போலக் கலங்கலாயின. வானத்தின் கடும் வெய்யில் அவனுக்குக் கடுமையற்று இருந்தது. வண்டியைத் திருப்பி அனுப்பிவிட்டு, அவன் தனியே கால் நடையாக நடக்கலானான். கல்கத்தாவின் ஜனம் நிறைந்த கோலாகலமயமான ரஸ்தாவில், தான் தன் நிலைமையை ஒரு தரம் நன்றாக ஆழ்ந்து யோசிக்கவேண்டு மென்பது அவனுக்குத் தோன்றியது.

அசலாவின் முகம், அவளுடைய அங்கங்கள், அவளுடைய பேச்சு, அவள் நடந்துகொண்டது — யாவும் ஆதியோடு அந்தமாக மீண்டும் அவன் நினைவுக்கு வரலாயின. அவன் தன்னை அவளைவிட சற்று குறைவாகவே எண்ணலானான்.

அவளுடைய முக சௌந்தரியத்தில் அலௌகிகமாக ஒன்றுமில்லை; பேச்சு வார்த்தை, நடவடிக்கை, ஞானம், வித்தியாபுத்தி — எதிலும் எந்த விதமான அபூர்வத்தையும் காணவில்லை. ஆயினும் தான் இதுவரை எங்கும் பார்த்திராத ஓர் ஆச்சரியகரமான பொருளைப் பார்த்து விட்டு வந்த ஒரு நினைவே அவனுக்கு மாறி மாறி எழுந்தது. வழியில் செல்லும் போதே, ஒவ்வொரு கணமும், 'இந்த ஆச்சரியம் எதற்காக?' என்ற கேள்வியே அவன் முன் எழுந்தது. எந்தப் பொருள் அவனை இன்று இவ்வளவு வசப்படுத்திக்கொண்டது?

அந்தப் பெண்ணிடம் அவன் அன்று கண்ட புதுமை யில் மூழ்கியவனாக எண்ணும் பொழுது, அவன் உள்ளம் விவரிக்க வொண்ணாத ஒரு தன்மையால் நிரம்பியது. இந் தப் பெண்ணின் பரிசயம் உண்மையில் இதுவரை அவனுக்கு ஏற்படவில்லை என்பது வாஸ்தவம்தான். ஆயினும் அவன் மனத்தில், அவள் பெரியவள், ரொம்பப் பெரியவள்—அவளை அடைவது எந்தப் புருஷனுக்கும் துர்ப்பாக்கியம் என்று சொல்ல முடியாது என்ற சம்சயம் ஒரு முறைகூட ஏன் எழவில்லை? யோசித்து யோசித்து அவன் சிந்தனைப் பிரவாகம் ஓரிடத்தில் வந்து நின்றுவிடும். அந்தப் பெண் படிப்பில், ஞானத்தில், வயதில்—எல்லா விஷ யங்களிலும் அவனுக்குச் சிறியவளாகவே தோன்றினாள். ஆயினும்கூட, அவள் இந்தச் சில நிமிஷப் பேச்சில், தன் னுடைய அசாதாரணமான அன்பு பலத்தினால் அவனை வென்றுவிட்டாள். ஆகையால் அவள் இவ்வளவு சாந்த மாகவும், இவ்வளவு திடமாகவும், இவ்வளவு அறிந்தும் இருந்தபோதிலும், இந்த மௌனமும் கொண்டிருந்தாள். பஹுறியின் விஷயமாகத் தான் ரொம்பத் தெரிந்தவன் போல அவன் பேசிக்கொண்டு போகும் பொழுது அந்தப் பெண் பேசாமல் தலை குனிந்து கேட்டுக்கொண்டிருந்தாள்; ஒரு கணம்கூடச் சஞ்சல மடையவில்லை. இடை மறித்துக் கலகம் செய்து தன்னைக் குறைவுபடுத்தவில்லை. அவளுக்கு எல் லாம் தெரிந்திருந்தும் அவற்றை மறைத்துத் தன்னைப் பூரா வும் அடைக்கிக்கொண்டிருந்தாள். மஹுறிமை அவள் எவ் வளவு அதிகமாக விரும்புகிறாள் என்பதை வெளிப்படுத்த வில்லை. ஆனால், இதை எவ்வளவு சகஜமாகவும் சுருக்கமாக வும் வெளிக்காட்டினாள்! அவளுடைய கலங்காத சிரத்தை எந்த விதத்திலும் துளிகூட அசையவில்லை.

இந்தப் பாடத்தை அவள் மஹிமிடமிருந்துதான் நன்றாகக் கற்றிருக்கிறாள். இந்த வார்த்தைகளை அவன் பல தடவை தனுக்குள் சொல்லிக்கொள்ளலானான். அவன் உள்ளத்தில் சிறு வயது முதற்கொண்டே கலங்காத பாவம் என்பதே கிடையாது. ஆகையால் அது பிறரிடம் இவ்வளவு ஆதிக்கம் செலுத்துவதைக் கண்டு, அவனுடைய கண்யமான உள்ளம் தன்னை மறந்து அவளுடைய சரணங்களில் கவிழ்ந்து தன்னைத் தான் தன்யனாக எண்ணலாயிற்று.

*　　*　　*　　*

பல சாலைகளையும், தெருக்களையும் சுற்றிக் களைத்துப் போய், மாலை நேரத்திற்கு முன் ஸுரேசன் வீடு வந்து சேர்ந்தான். முன் அறையில் நுழைந்ததும், மஹிம் கண்கள் மேல் கைகளை வைத்துக்கொண்டு சோபாவில் படுத்திருப்பதைக் கண்டு, ஆச்சரிய மடைந்தான். ஸுரேசன் வந்ததும் அவன் எழுந்து உட்கார்ந்து, 'வா, ஸுரேஷ்!' என்றான்.

'நல்லது, வந்துவிட்டாயா!' என்று சொல்லி, ஸுரேசன் மெல்ல ஒரு நாற்காலியை இழுத்துப் போட்டுக்கொண்டு அவன் அருகில் அமர்ந்தான்.

மஹிம் எப்பொழுதாவதுதான் வருவான். அவன் வந்தால் ஸுரேசனுடைய ஆனந்தம் எல்லை கடந்துவிடும். ஆனால், இன்று அவன் வாயினின்றும் ஒரு வார்த்தைகூட வெளிப்படவில்லை. மஹிம் மனத்திற்குள் ஆச்சரிய மடைந்து, 'விடுதிக்குச் சென்றதும் நீ வந்ததாகக் கேள்விப்பட்டேன். ஆகையால்—' என்றான்.

'தயவுசெய்து தலையைக் காட்டிவிட்டுப் போகலாம் என்று வந்தாயாக்கும்! — ஏன், அதுதானே விஷயம்? எவ்வளவு நாட்களுக்குப் பிறகு வந்திருக்கிறாய் — ஞாபகம் இருக்கிறதா?'

மஹிம் சிரித்துக்கொண்டே, 'ஞாபகப் படுத்திக் கொள்ள முடியும். ஆனால் இது சமயமில்லை' என்று சொல்லிக்கொண்டே, விளக்கின் ஒளியில், வாடிக் கடுமை யடைந்த ஸுரேசனுடைய முகத்தைக் கவனித்தான்.

அவனைச் சந்தோஷப்படுத்தும் எண்ணத்துடன், அன்பான குரலில், 'ஸுரேஷ், நீ கோபித்துக்கொள்ள முடியும் என்பதை ஆயிரம் தடவை வேண்டுமானாலும் ஒப்புக் கொள்ளுகிறேன். ஆனால் உண்மையில் எனக்குச் சமயம் கிடைப்பதில்லை. இப்பொழுதெல்லாம் படிக்கவேண்டிய பாரம் ஜாஸ்தியாகிவிட்டது. அதைத் தவிர காலை மாலையில் இரண்டொரு ட்யூஷன்—' என்றான்.

'மறுபடியும் ட்யூஷன் ஆரம்பித்துவிட்டாயா?'

மஹிம் இதற்குச் சரியான பதில் அளிக்காமல், 'என்னைத் தேடிக்கொண்டு வந்தாயே, ஏதாவது முக்கியமான காரணம் உண்டா?' என்றான்.

'ஆமாம் நீ இன்று வந்திராவிட்டால் நான் மீண்டும் நாளை வரவேண்டி யிருந்திருக்கும்' என்றான் ஸுரேசன்.

மஹிம், ஏன் என்று கேட்பதற்காக, ஆவல் நிறைந்த முகத்துடன், அவன் பக்கம் பார்த்துக்கொண்டிருந்தான். ஸுரேசன் வெகு நேரம் வரை அவன் செருப்பைப் பார்த்துக் கொண்டிருந்துவிட்டு, கடைசியில், 'வெகு நாட்களாக நீ கேதார் பாபுவின் வீட்டிற்குப் போகவில்லையா?' என்றான்.

'இல்லை.'

'ஏன் போகவில்லை? என் காரணமாகத்தானே? இன்று உன்னை அந்தக் கட்டுப்பாட்டினின்றும் விடுவிக்கிறேன். நீ உன் இஷ்டப்படி அங்கே போகலாம்.'

மஹிம் சிரித்துவிட்டு, 'போகாமல் என்ன? அந்த மாதிரி பிரதிக்ஞை செய்ததாக எனக்கு என்னமோ ஞாபகமில்லையே!' என்றான்.

'இல்லாவிட்டால் நல்லதாயிற்று. ஆயினுங்கூட நீ அங்கே போவதில் என்னைப் பொறுத்தவரை ஏதாவது தடையிருந்தால், அதை வாபஸ் பெற்றுக்கொள்கிறேன்.'

'ஸுரேஷ், இது அநுக்கிரஹமா, நிக்கிரஹமா?'

'உனக்கு எப்படித் தோன்றுகிறது, மஹிம்?'

'எப்பொழுதும் என்ன தோன்றுமோ அதேதான்.'

'அதாவது நான் சொல்வது எல்லாம் வீண் என்பது தானே? நல்லது. நீ எப்படி வேண்டுமானாலும் எண்ணிக் கொள். எனக்கு அதைப்பற்றி ஒன்றும் தடையில்லை. நான் போட்ட தடையை நான் எடுத்துக்கொள்கிறேன், அவ்வளவுதான்.'

'ஆனால் அதனுடைய காரணத்தைக் கேட்கலாமா?'

'வீண் யோசனைக்குக் காரணம்கூட இருக்கிறதா— உனக்கு நான் விவரிப்பதற்கு?'

மஹிம் ஒரு கணம் மௌனமாக இருந்துவிட்டு, பிறகு கம்பீரமாக, 'ஆனால் ஸுரேஷ், உன் எண்ணத்தின் பிரகாரம் உலகில் தடைகள் வரலாம், போகலாம் போலிருக்கிறது. ஆனால் உண்மையில் அந்த மாதிரி நடப்பதில்லை. உதாரணமாக, இப்பொழுது உனக்கு எங்கே தடையில்லையோ அங்கே எனக்கு இருக்க முடியும்!' என்றான்.

'இதன் அர்த்தம்?'

'இதன் அர்த்தமா? நீ அன்று பிரம்ம சமாஜப் பெண்களைக் குறித்துச் சொன்னாயே, அதைப்பற்றி யோசித்தேன். ஆமாம், அன்று ஒரு மாதத்திற்குள் எனக்குப் பெண் தேடிக் கொடுப்பதாகச் சொன்னாயே, அது என்ன ஆயிற்று?— இதைச் சொல்லு!'

ஸுரேசன் தலை நிமிர்ந்து பார்த்தான். மஹிம் கம்பீரத்தின் மறைவில் பரிகாசம் செய்துகொண்டிருந்தான். அவனும் கம்பீரத்துடன், 'மஹிம், நான் யோசித்துப் பார்த்

தேன். பெண் பார்த்து மணம் செய்விப்பது என்பது என்னுடைய தினசரி வேலையல்ல' என்று சொல்லி, சிரித்துக்கொண்டே, 'அது இருக்கட்டும், கேலியை விடு. இவ்வளவு நாட்களாக எனக்கு நீ மரியாதை வைத்ததற்கு ஆயிரம் தரமும் உனக்கு என் நன்றிகள். ஆனால் எப்பொழுது இன்று என் உத்தரவைப் பெற்றுவிட்டாயோ நாளைக் காலையிலேயே அங்கே ஒரு முறை போகமாட்டாயா?' என்றான்.

'இல்லை, நாளை மாலை நான் வீட்டிற்குப் போகிறேன்.'

'எப்பொழுது திரும்புவாய்?'

'பத்துப் பதினைந்து நாட்கள் ஆகும். ஒரு மாதம் ஆனாலும் ஆகும்.'

'ஒரு மாதமா! இல்லை, மஹிம். அது முடியாது!' என்று சொல்லிக்கொண்டே, அவன் சட்டென்று மஹிமின் பக்கம் குனிந்து, அவன் வலது கையைத் தன் கையில் எடுத்துக்கொண்டு, 'என்னுடைய குற்றத்தை மேலும் வளர்க்காதே. மஹிம்! நாளைக் காலையிலேயே ஒரு முறை சென்று வா! உனக்காக அவள் வழி பார்த்துக்கொண் டிருந்தாலும் இருப்பாள்' என்று சொல்லும் போதே அவன் குரல் நடுங்கியது.

மஹிமின் ஆச்சரியத்திற்கு ஓர் எல்லை இல்லை. அகஸ்மாத்தாக நடுங்கும் ஸுரேசன் குரலையும், வேண்டுகோளையும், வற்புறுத்தலையும், குறிப்பாக பிரம்ம சமாஜப் பெண்ணிடம் அவனுக்கு ஏற்பட்டிருக்கும் மரியாதையையும் கண்டு, அவன் மனம் தத்தளித்தது. சிறிது நேரம் வரை நண்பனின் முகத்தைப் பார்த்துக்கொண் டிருந்துவிட்டு, 'யார் என் வழி பார்த்துக்கொண் டிருக்கிறார்கள், ஸுரேஷ்? கேதார் பாபுவின் பெண்ணா?' என்றான்.

ஸுரேசன் சட்டென்று தன்னைச் சமாளித்துக்கொண்டு, 'ஆமாம், இருக்கலாம்!' என்றான்.

மஹிம் மீண்டும் சிறிது நேரம் வரை ஸுரேசனின் முகத்தைப் பார்த்துக்கொண்டிருந்தான். மத்தியில் அவன் தானே பிரம்ம சமாஜிகளின் வீட்டுக்குச் சென்று பரிசயம் செய்துகொண்டு வந்திருக்கிறான் என்ற எண்ணம் அவன் மனத்தில் எவ்விதத்திலும் எழவில்லை. பின்னும் சற்று நேரம் சும்மா யிருந்துவிட்டு, 'இல்லை, ஸுரேஷ், நான் என் தோல்வியை ஒப்புக்கொள்கிறேன். உண்மையில் உன்னுடைய இன்றைய மன நிலையை அறிவது என் புத்திக்குப் புறம்பான விஷயம். பிரம்ம சமாஜப் பெண் எனக்காக வழி பார்த்து உட்கார்ந்துகொண் டிருக்கிறாள் என்ற விபரத்தை உன் வாயினின்றும் கேட்பது எனக்கு விபரீதமாகத் தோன்றுகிறது!' என்றான்.

'நல்லது, அதை இன்னொரு நாள் தெரிவிக்கிறேன். இப்பொழுது சொல்லு, நாளைக் காலையிலேயே நீ அவர்களை ஒரு முறை சந்திக்க மாட்டாயா?'

'முடியாது, நாளைக்கு முடியாது. எனக்குக் காலை வண்டியிலேயே ஊருக்குப் போகவேண்டும்.'

'சில நிமிஷங்களுக்குக்கூடப் போக முடியாதா?'

'முடியாது. அதுவும் முடியாது. ஆனால் உனக்கு என்ன ஆயிற்று சொல்லேன்?'

'அதையும் மற்றொரு தினம் சொல்லுகிறேன். இன்று முடியாது. சரி, நானே சென்று உன் விஷயத்தைச் சொல்லி விட்டு வரட்டுமா?'

மஹிம் இன்னும் அதிக ஆச்சரியத்தில் ஆழ்ந்தவனாய், 'போகலாம், ஆனால் அதற்கு அவசியம் ஒன்றுமில்லை' என்றான்.

'அவசிய மில்லாமல் இருக்கட்டும், அவசியமேதான் எல்லாம். என்னை அறிமுகம் செய்துகொண்டால் அறிந்து கொள்வார்கள் அல்லவா?'

'ஒருத்தி கட்டாயம் அறிந்துகொள்வாள்.'

'போதும், அதுவே போதும். உன் நண்பன் என்று சொன்னாலே அறிந்துகொண்டுவிடுவாளா?'

'ஆமாம்.'

ஸுரேசன் சற்று சிரிக்க முயற்சித்துக்கொண்டே, 'கொடுமையான பிரம்ம சமாஜத் துவேஷியான உன் ஹிந்து நண்பன் ஒருவன் என்ற முறையில் அவசியம் அறிந்துகொள் வாள் அல்லவா?' என்றான்.

'ஆனால் இது உன்னுடைய கர்வத்தின் வார்த்தை அல் லவா, ஸுரேஷ்?'

'அதுதான் இருக்கவே இருக்கிறதே!' என்று சொல்லி, சிறிது நேரம் பேசாமல் தரையைப் பார்த்துக்கொண் டிருந்துவிட்டு, சட்டென்று எழுந்து நின்று, 'இன்று எனக்கு ரொம்பத் தூக்கம் வருகிறது, மஹிம்! நான் படுக்கைக்குச் செல்லுகிறேன்' என்று சொல்லி, மனம் கொள்ளாதவனைப் போல, அறையிலிருந்து ஸுரேஷ் வெளியே சென்றான்.



# VI

தன் வார்த்தையை மஹிம் எப்படி எடுத்துக்கொண்டிருந்தாலும், தன்னுடைய குறிப்பிட்ட வற்புறுத்தலை அசட்டை செய்ய முடியாததன் காரணமாகவே அவன் இவ்வளவு நாள் வரை அசலாவைச் சந்திக்கச் செல்லவில்லை என்பது ஸுரேசனுக்கு மனத்தில் சந்தேகமின்றித் தெளிவாயிற்று. மஹிம் அசலாவை எவ்வளவுதான் விரும்பி யிருக்கட்டும், இதுவரை ஒன்று நிச்சயமாகத் தெரிந்தது. அவன் ஒரு பிரம்ம சமாஜப் பெண்ணுக்கு எதிரில் தன் பாலிய கால நண்பனைக் குறைவு படுத்தவில்லை. அதை எண்ணும்போது ஸுரேசனின் உள்ளம் பூரித்தது. ஆனால் இன்று அவன் படுக்கையில் உட்கார்ந்து யோசித்தபொழுது இந்தச் சிந்தனைகள் அவனுக்குச் சற்றும் ஆனந்தத்தை அளிக்கவில்லை. ஒரு நாள் இல்லாவிட்டால் ஒரு நாள் பேச்சு வாக்கில் சிரிப்பு விளையாட்டாகத் தன்னுடைய விஷயங்களெல்லாம் விசித்திரமாகச் சித்திரிக்கப்பட்டு அசலாவின் காதுவரை எட்டிவிடும் என்ற எண்ணமே அவன் மனத்தில் மாறி மாறி எழுந்தது. என்றாவது ஒரு நாள், சுகத்தின் மடியில் அமர்ந்து, அவள் தன் கணவனுடைய செயலற்ற இந்த நண்பனின் வீண் பொறாமையின் கருத்தைத் தேடினால்கூட அறியமாட்டாள். வேறென்ன? அடக்கமான பேச்சுடைய அந்தப் பெண், விளையாட்டுப் போக்காகக்கூட, ஒருநாளும் எந்தக் கேள்வியும் கேட்கப் போவதில்லை. மனத்திற்குள் சிறிது சிரித்துக்

கொண்டே, 'இந்த மனிதர் நட்பின் கர்வத்தினால் வியர்த்தமாக எவ்வளவு சிரமம் எடுத்துக்கொண்டார்! வீணான ஆத்திரத்தினால் எவ்வளவு பொங்கி எழுந்தார்!' என்று எண்ணக்கூடும்.

இரவு அவனுக்கு நிம்மதியான தூக்கம் வரவில்லை. எத்தனை தடவைகள் தூக்கம் கலைந்ததோ அத்தனை தடவை இந்தக் கொடும் சிந்தனைகள், அவனை வெறுத்துக்கொண்டே, 'பிறருக்காகத் தலைவேதனைப்படும் இந்த நோய் உன்னை விட்டு எப்பொழுது நீங்கும், ஸுரேஷ்!' என்று சொல்லின.

காலையில் எழுந்து அவன் எந்த வேலையிலும் மனம் செலுத்த முடியவில்லை. நாழிகை ஆயிற்றோ ஆகவில்லையோ, அவன் வண்டியில் ஏறி, கேதார் பாபுவின் வீட்டுக்கு வந்து சேர்ந்தான். வேலைக்காரன், 'பாபு அலிபுரம் கோர்ட்டுக்குப் போயிருக்கிறார்; திரும்பி வர மூன்று நான்கு மணி கூட ஆகலாம்!' என்றான்.

ஸுரேசன் திரும்புவதற்குத் தயாராகி, 'இருவர்களும் போயிருக்கிறார்களா?' என்று கேட்டான்.

கேள்வியை வேலைக்காரனால் அறிந்துகொள்ள முடியவில்லை. அவன் தலையை அசைத்து, 'அது எனக்குத் தெரியாது, பாபு!' என்றான்.

ஸுரேசன் சங்கடத்தில் ஆழ்ந்தான். வீட்டு எஜமானர் இல்லாதபோது, அவருடைய யௌவனப் பெண்ணின் விஷயமாக ஏதாவது கேட்பது பிரம்ம சமாஜக் குடும்பத்தில் கூட வழக்கத்திற்கு விரோதமா இல்லையா என்பதை அவனால் நிர்ணயம் செய்ய முடியவில்லை. மேலும் வேடிக்கை என்னவென்றால், அந்தப் பெண்ணிடம்தான் அவனுக்குக் காரியம் இருந்தது. சிறிது நேரம் யோசித்துவிட்டு, 'உங்கள் பாபு வர அவ்வளவு நேரம் ஆகாமல் இருந்தாலும் இருக்கலாம் அல்லவா? நான் ஒரு அரை மணி நேரம் இருந்து அவரை எதிர்பார்க்கிறேன்' என்றான்.

வேலைக்காரன் ஸுரேசனை அழைத்துக்கொண்டு போய்க் கூடத்தில் உட்கார வைத்து, 'அம்மா வீட்டில் இருக்கிறார்கள், அவர்களுக்குத் தகவல் சொல்லட்டுமா?' என்று சொல்லி, பதிலுக்காக அவன் முகத்தைப் பார்க்கலானான். அசலா அவன் எதிரில் வர முடியும் என்பதை அவன் முதல் நாளே பார்த்திருந்தான். ஸுரேசன் தன்னுடைய மனத்திலுள்ள ஆவலின் ஆதிக்கத்தை முடிந்த வரையில் அடக்கிக்கொண்டு, சாதாரண பாவத்தில், 'இப்பொழுது அவர்களுக்குத் தகவல் கொடுக்கிறாயா? சரி சொல்லு, அதுவரையில் அவர்களுடன் பேசிக்கொண்டிருக்கிறேன்' என்றான்.

வேலைக்காரன் சென்றான். சிறிது நேரத்திற்குப் பிறகு, அசலா பக்கத்து வாசற்படியின் படுதாவை அகற்றி உள்ளே நுழைந்தாள். ஸுரேசன் எழுந்து நின்று, 'மஹிம் ஊருக்குப் போய்விட்டான். தங்களை ஒரு முறை பார்த்துவிட்டுப் போகச் சொன்னேன். ஆனால் அவன் என் வார்த்தையைக் கேட்கவே இல்லை. இம்மாதிரி—' என்று இழுத்தான்.

அசலாவின் முகம் ஒரு கணம் வாடியது. ஆனால், நமஸ்காரம் செய்துவிட்டு, ஒரு நாற்காலியில் அமர்ந்து, மிருதுவான குரலில், 'ஊருக்குப் போகவேண்டியது முக்கியமாக இருந்திருக்கலாம். வீட்டில் யாருக்கும் நோய் நொடி ஒன்றும் இல்லையே?' என்றாள்.

அசலா நமஸ்காரம் செய்வதைப் பார்த்து ஸுரேசனும் வெட்கத்துடன் பிரதி நமஸ்காரம் செய்து, அனாவசியமான தன் ஆத்திரத்துடன், அசலாவின் சாந்தமும் அமரிக்கையும் கொண்ட வார்த்தைகளை ஒப்பிட்டுப் பார்த்து, அவன் நூறு மடங்கு வெட்கமும் திகைப்பும் அடைந்தான். பிறகு தன் குரலை எப்பொழுதும் போல சகஜமும் சுபாவமுமாக ஆக்கிக்கொண்டு, 'எப்படிப்பட்ட அவசியமாயும் இருக்கட்டும். எப்பொழுது திரும்பி வருவோம் என்பது நிச்சயமில்லாமல்

இருக்கிறதோ, ஓரிரண்டு நிமிஷம் தங்களிடம் வந்து சொல்லிவிட்டுப் போக முடியாமல் அப்படி என்ன பயங்கர மான விஷயமாக இருக்கப் போகிறது? நீங்கள்தான் சொல் லுங்களேன்? வீட்டில் அவனுக்கு யார் இருக்கிறார்கள், அவர் களுடைய நோய்க்காக இவன் இப்படி ஓடவேண்டும்? என் உயிர் போனாலும் இம்மாதிரி நான் போகமாட்டேன்!' என்றான்.

அசலாவின் முகத்தில் வெட்கத்துடன் கூடின ஓர் அன் புச் சிரிப்பு பிரகாசித்தது. 'தங்களுக்கு இதுவரை ஒன்றும் அந்த மாதிரி நேரவில்லை. அதனால்தான் இந்த மாதிரி சொல்லுகிறீர்கள். ஆனால், ஏற்பட்டால், அவரைப் போலவே அசட்டையாகத்தான் தாங்களும் செல்வீர்கள் என்பதை நான் நிச்சயமாகச் சொல்லுவேன்' என்றாள்.

ஸுரேசன் தனது நற்காலியின் கைகளில் வேகமாக ஓர் அடி அடித்து, 'இல்லை யில்லை. என்னைத் தாங்கள் சரி யாக அறியவில்லை. அதனால்தான் இந்த மாதிரி சொல்லுகி றீர்கள். அறிந்திருந்தால் சொல்லியிருக்க மாட்டீர்கள்!' என்றான்.

'நல்லது, பிற்பாடு தெரிந்துகொள்ளுகிறேன். வேறு ஏதாவது இருந்தாலும் தெரிந்துகொள்வேன். ஏன், சரி தானே?'

'கட்டாயம்! நூறு தடவையும் அப்படியே! மேலும் மஹிமைப் போல நான் நண்பனிடம் எந்த விஷயத்தையும் ஒளித்துவைக்க மாட்டேன். ஒளிக்காமல் இருப்பதே நல்லது என்று எண்ணுகிறேன்' என்று சொல்லிக்கொண்டே, அவன் உணர்ச்சியுடன், 'நேரும் பொழுது தெரிந்துகொள்ளுகிறேன் என்று சொன்னீர்கள்; ஆனால் நான் சொல்லுகிறேன்; தங்க ளுக்குத் தெரியாமலும் தங்கள் அபிப்பிராயம் இல்லாமலும் ஒன்றும் ஒரு பொழுதும் நடக்கவே முடியாது. இனிமேல்

நீங்கள் வேறு மஹிம் வேறு என்று பிரித்துப் பார்க்க எனக்குச் சாமர்த்தியமில்லை. நீங்கள் எனக்கு இனிமேல் வேற்று மனிதர் அல்ல' என்றான் ஸுரேசன்.

அசலா, வெட்கத்துடன் தலையை அசைத்து, சிரித்த முகத்துடன், 'ஸுரேஷ் பாபு! சரிதான், அதெல்லாம் அப்பொழுது பார்த்துக்கொள்ளலாம். ஆனால், தங்களைப் பரீட்சை பார்க்கும் அந்த சுபதினம் வரும்வரை நான் தங்களுடைய நண்பரைக் குற்றம் சொல்ல முடியாது' என்றாள்.

ஸுரேசன் சட்டென்று கம்பீரமாக, 'அது தங்கள் இஷ்டம். ஆனால் என்னைப் பரீட்சை செய்யும்படியான சுபதினம் இந்த ஜன்மத்தில் வருமா வராதா என்பது சந்தேகம். அது இருக்கட்டும், நான் இன்று இவ்வளவு காலையிலேயே தங்களிடம் ஏன் வந்தேன் தெரியுமா? நேற்று இரவு எனக்குத் தூக்கம் வரவில்லை. இரவு முழுதும் தூங்க முடியவில்லை — இங்கே வராவிட்டால் இன்றும் தூக்கம் வராது. நிச்சயம். நான் அநேகம் குற்றங்களை இழைத்திருக்கிறேன், அவை எல்லாவற்றையும் ஒவ்வொன்றாகத் தங்கள் முன் ஒப்புக் கொண்டுவிட்டுத்தான் போவேன். நான் அதற்காகத்தான் வந்தேன்!' என்றான்.

அவன் பிரம்ம சமாஜிகளிடம் கொண்டிருந்த விரோத பாவம் அசலாவுக்குத் தெரியும். ஆகையால் அவள் சங்கை அடைந்த முகத்துடன், பேசாமல் அவன் பக்கம் பார்த்துக் கொண்டு உட்கார்ந்திருந்தாள்.

ஸுரேசன் மீண்டும், 'நேற்று சாயங்காலம் வீட்டுக்குப் போய்ப் பார்த்தேன். மஹிம் அங்கே உட்கார்ந்திருந்தான். பிரம்ம சமாஜிகளைக் கண்டால் எனக்குப் பிடிப்பதில்லை என்ற விஷயம் தங்களுக்குத் தெரிந்தே யிருக்கும்—அதாவது பிரம்ம சமாஜத்தை நான் அவ்வளவு நல்லதாக நினைக்கவில்லை' என்றான்.

அசலா தலையை அசைத்து, 'ஆமாம், எனக்குத் தெரியும்' என்றாள்.

'அப்படித்தான் நினைத்தேன்! ஆனால் அப்பொழுது உங்களை எனக்குத் தெரியாது என்பதையும் மறந்துவிட வேண்டாம். இதனால்தான் மஹிமைக் குறைந்தது ஒரு மாதத்திற்காவது இங்கே வரவேண்டாம் என்று வற்புறுத்தினேன். அது தெரியுமா?' என்றார்.

அசலா மறுபடியும் தலையை அசைத்து, 'இல்லை. ஆனால், ஆமாம்! புருஷர்கள் யாரையாவது மறப்பதற்கு ஒரு மாதக் காலம் போதும் என்று தாங்கள் நினைத்திருக்கலாம், அதைவிட அதிகந் தாமதமாவது உசிதமில்லை!' என்றாள்.

ஸுரேசன் இந்தக் குத்தலைத் தாழ்மையுடன் சகித்துக் கொண்டு, 'நான் எப்பொழுதுமே ஒரு முட்டாள். ஆகையால் நான் இந்த மாதிரி ஒரு விஷயத்தைப் பற்றி எண்ணியிருக்கலாம். ஆனால் தங்களுக்கு எதிரிடையாக மற்றொரு பயங்கரமான சூழ்ச்சியையும் செய்ய எண்ணியிருந்தேன். இந்த ஒரு மாதத்திற்குள் வேறொரு பெண்ணைத் தேடி மஹிமுக்குக் கலியாணம் செய்து வைப்பதாகப் பிரதிக்கினை செய்திருந்தேன். எப்படியானாலும் சரி, அவனை இந்தக் கட்டிலிருந்து விடுவித்துக் காப்பாற்றுவது என்னுடைய கடமை என்று எண்ணினேன். என் நண்பனாக இருந்து, அவன் பெண் மோகத்தில் தன் சமூகத்தை விட்டுச் செல்ல ஒரு பொழுதும் நான் விடக்கூடாது என்றும் எண்ணினேன்!' என்றான்.

அடக்கிக்கொண்டிருந்த மூச்சை விடுத்து, 'அப்புறம்?' என்றாள் அசலா.

அவளுடைய வெளுத்த முகத்தைப் பார்த்து ஸுரேசன் சற்று சிரித்துவிட்டு, 'அப்புறம் பயப்பட வேண்டிய

விஷயம் ஒன்றுமில்லை. நான் அந்தக் கொடிய தீர்மானத்தை விட்டுவிட்டேன். இன்று நான் அதைத் தங்கள் முன் ஒப்புக் கொள்ள வந்தேன். தங்களைச் சந்திக்கும்படி நேற்று இரவு அவனை ரொம்பவும் வற்புறுத்தினேன். இதற்கு முன் என்னுடைய உசிதமற்ற வற்புறுத்தலை அவன் காப்பாற்றினான். ஆனால், நேற்றைய வற்புறுத்தலை அவன் ஒப்புக் கொள்ளவில்லை. தங்களைச் சந்திக்காமலே அவன் கல்கத்தாவை விட்டுச் சென்றுவிட்டான்' என்றான்.

'போவதற்கு ஏதாவது காரணம் சொன்னரா?' என்று கேட்டாள் அசலா.

'இல்லை, அவசியம் என்றான், அவ்வளவுதான்.'

அசலா ஒரு நீண்ட பெருமூச்சு விட்டுக்கொண்டு, தனக்குத் தானே சொல்லிக்கொள்பவள் போல, 'அவசியம்! அவசியம்! எப்பொழுதும் அவர் இதையே சொல்லக் கேட்டிருக்கிறேன், இதே நடத்தையைக் கண்டு வந்திருக்கிறேன். எப்பொழுதும் அவருக்கு சகலமும் அவசியம்தான்' என்றாள்.

'ஒரு கடிதமாவது எழுதி அவன் தங்களுக்குத் தெரிவித்திருக்கக் கூடும்' என்றான் ஸுரேசன்.

அசலா மெதுவாகத் தலையை அசைத்து, 'இல்லை, அவர் கடிதம் எழுதுவதில்லை' என்றாள்.

ஸுரேசன் சிறிது நேரம் பேசாமலிருந்துவிட்டு, தலை நிமிர்ந்து அசலாவின் பக்கம் பார்த்து, மறுபடியும், 'என்ன அவசியம் என்பதையும் சொல்லவில்லை. அவனுடைய சுக துக்கம், நன்மை தின்மை எல்லாம் அவனுக்கு மாத்திரம்தான். தன்னலக்காரன்! எப்பொழுதும் யாருக்கும் அவன் பங்கு அளிப்பதில்லை. இதனல் சிறு வயதிலிருந்து அவன் எனக்கு எவ்வளவு வருத்தத்தை அளித்து வந்திருக்கிறான் என்பதற்கு ஒரு கணக்குக் கிடையாது.

கொடியவன்! எத்தனை நாள் அவன் பட்டினியிருந்திருக்கிறான்! என்னுடைய தினசரிச் சாப்பாட்டைக் கசக்கும் நஞ்சாகச் செய்திருக்கிறான் — ஆயினும் கூட என் முகத்தைப் பார்த்து என் கையிலிருந்து ஒன்றையும் வாங்கிக் கொள்வதில்லை. எந்தக் கல்லைக் கட்டிக்கொண்டு எனக்குச் சுகம் ஏற்படவில்லையோ அத்துடன் நீங்கள் கடைசிவரை எப்படிச் சுகப்பட முடியும் என்பதுதான் என் பயம்!' என்று சொல்லிக்கொண்டிருக்கும்போதே, சட்டென்று அவன் கண்களில் கண்ணீர் வந்துவிட்டது. உடனே அதைத் துடைத்துக் கொண்டு, சிரமத்துடன் சற்று சிரித்து, 'பாருங்கள் மேலுக்கு நான் கடுமையானவனாகக் காணப்படுகிறேன். ஆனால் உள்ளே ரொம்ப மிருதுத்தன்மை யுள்ளவன். மஹிம் இதற்கு நேர் விரோதம். ஆயினும் என்னுடையதைப் போன்ற நட்பு உலகத்தில் ரொம்பக் கொஞ்சம்தான்!' என்றான்.

அசலா தலை குனிந்துகொண்டே, இனிய குரலில், 'அது எனக்குத் தெரியும், ஸுரேஷ் பாபு! அந்த நட்பு இன்னும் குறையாமல் இருக்கிறதென்பதும் தெரியும்' என்றாள்.

சிறு வயதின் எல்லா நினைவுகளும் ஸுரேசனுடைய மனத்திற்குள் கொந்தளித்து எழுந்தன. அவன், கண்ணீர் பொங்க, தடைபட்ட குரலுடன், 'எப்பொழுது எல்லாவற்றையும் அறிந்திருக்கிறீர்களோ அப்பொழுது, நான் அறியாமையாலோ, ஞானமில்லாமையாலோ உங்களுக்கு இழைத்திருக்கும் அந்த அபராதங்கள் மீண்டும் என் உள்ளத்தில் குத்தாமலிருக்கும் பிக்ஷையை அளியுங்கள்!' என்றான்.

அவனுடைய குரல் துக்கத்தினால் தழுதழுத்தது. அவனுடைய வியாகூலம் அசலாவின் உள்ளத்தைக் கூடக் கலங்கச் செய்துவிட்டது. பொங்கி வரும் தனது கண்ணீரை மறைப்பதற்காகச் சட்டென்று முகத்தைத் திருப்பினாள். எதிரே வாசற்படியில் அவள் தந்தை நின்றுகொண்டிருந்தார்.

ஸுரேசனைப் பார்த்து கேதார் பாபு சந்தோஷமடைந்து, 'ஓகோ, ஸுரேஷ் பாபுவா!' என்றார்.

ஸுரேசன் எழுந்து நின்று நமஸ்காரம் செய்தான்.

கேதார் பாபு உட்காராமலே, 'மஹிமைப் பற்றிய செய்தி என்ன? அவனைப் பார்க்கவில்லையே?' என்றார்.

'மஹிம் முக்கியமான வேலையாக, காலை வண்டியில் ஊருக்குச் சென்றிருக்கிறான். அந்தத் தகவலைச் சொல்லத் தான் நான் வந்தேன்' என்றான் ஸுரேசன்.

கேதார் பாபு ஆச்சரியமடைந்து, 'ஊருக்குச் சென்று விட்டானு!' என்று சொல்லிக்கொண்டு, கோபத்தால் பொங்கி, 'அவன் ஊருக்குப் போனால் போகட்டும். நமக்கு அதைப் பற்றி அவசியமில்லை. ஆனால், அப்பா ஸுரேஷ், எப்பொழுது உனக்கு இஷ்டமோ, எப்பொழுது சமயம் கிடைக்கிறதோ, அப்பொழுது வீட்டுப் பிள்ளையைப் போல இங்கே வந்து போ. அது எனக்கு ரொம்ப சந்தோஷம். ஆனால், உன்னுடைய பொய்யனை அந்த மித்திர ரத்தினத்தின் முகத்தைக் கூட நான் பார்க்க விரும்பவில்லை. அவனைச் சந்தித்தால், வேறு எந்த விஷயத்திற்கும் வெட்கப்படா விட்டாலும், அவமானத்திற்காவது பயப்பட வேண்டும் என்று சொல்லிவிடு' என்றார்.

ஸுரேசன் தலை குனிந்துகொண்டு உட்கார்ந்திருந்தான். அவன்மனோபாவத்தை அறியமுயற்சித்துக்கொண்டே கேதார் பாபு, உற்சாகத்துடன், 'இல்லை இல்லை, ஸுரேஷ்! நீ இதில் வெட்கப்பட வேண்டியது ஒன்றுமில்லை. தவிர, நீ நிறைவேற்றிய கடமைக்கு நீ பெருமைப்பட வேண்டியதுதான். எப்படிப்பட்ட ஆபத்திலிருந்து எங்களை நீ காப்பாற்றினாய் என்பது உனக்குத் தெரியாது. அதற்காக நாங்கள் உனக்கு எவ்வளவோ கடமைப்பட்டவர்கள்' என்று சொல்லி, பெண் பக்கம் பார்த்து, 'அசலா! மஹிம் ஸுரேஷ் போன்ற பிள்ளைக

ளுடன் நட்புக்கொண்டு எப்படி அதை இன்னும் வைத்துக் கொண்டிருக்கிருனென்பது நேற்று முதல் எனக்கு ஆச்சரிய மாக இருக்கிறது!' என்று சொல்லி, சற்றுப் பொறுத்து, 'இந்த வேலையைச் செய்தவன் நம் போன்ற இன்னும் இரண்டு சாது மனிதர்களையும் பிரமிக்க வைப்பான். இது பிரமாத மில்லை என்பதை நான் அறிவேன். ஆனால் என் போன்ற சாமர்த்தியமான மனிதர்களுக்குக்கூட, இவன் யார், எப்படிப் பட்ட மனிதன், என்பதை அறிய வேண்டும் என்ற எண்ணம் தோன்றவில்லையே! இதுதான் பெரிய வேடிக்கை. ஆச் சரியம்தான்!' என்ருர்.

ஸுரேசன் ஒன்றும் பேசவில்லை. தலை நிமிர்ந்து கேதார் பாபுவின் முகத்தைக்கூட அவனுல் பார்க்க முடியவில்லை. கேதார் பாபு சற்று நேரம் பொறுத்துத் தம்முடைய ஆடை களைப் பார்த்துக்கொண்டே, 'எனக்கு ரொம்ப விஷயம் கேட்க வேண்டியிருக்கிறது. சற்று உட்காரப்பா! நான் அதற்குள் உடையை மாற்றிக்கொண்டு வருகிறேன்' என்று சொல்லிப் போக ஆரம்பித்ததுமே, 'எனக்கு நாழிகை யாகிவிட்டது. இன்று செல்கிறேன், மற்ெறுரு நாள் வரு கிறேன்!' என்று சொல்லி, ஒரு புறம் வருத்தத்துடனேயே, ஸுரேசன் எழுந்து நின்று அவருக்கு ஒரு நமஸ்காரத்தைச் செய்துவிட்டு, அவருடனேயே வெளியே வந்தான்.

ஆனல் மறுநாள் காலையிலேயே மீண்டும் அவன் அங்கே காணப்பட்டான். மூன்ருவது நாளும் அதே சமயத்தில் அவன் வண்டியின் சத்தம் அந்த வீட்டின் வாசலில் வந்ததும் கேட்டது.

ஆனல், அதற்குப் பிறகு நான்காவது நாள், அவனுடைய வண்டியின் சத்தம் கேட்கும்போது நேரமாகிவிட்டது. ஸ்நானம் செய்து சாப்பிடுவதற்கு அசலா தந்தையை எழுப் பும் பொழுது, அவரால் எழுந்துவர முடியவில்லை. அவர்

ஸுரேசனைச் சந்தோஷத்துடன் உட்கார வைத்துக்கொண்டு ஏதோ வம்பு பேச ஆரம்பித்தார்.

ஸுரேசன் இதை அறிந்துகொண்டான். ஆகையால், சாதாரணமாக நாலு ஐந்து வார்த்தைகளைச் சொல்லிவிட்டு அவன் எழுந்திருக்கும் பொழுது, அவனுடைய வெறிச் சென்றிருந்த நெற்றியின் பக்கம் அகஸ்மாத்தாகப் பார்த்த கேதார் பாபு, ஒரு கணம் வருத்தமும் சஞ்சலமும் அடைந்தவராய், 'ஸுரேஷ், நீ இன்னும் ஸ்நானம் செய்து சாப்பிடவில்லையா?' என்றார்.

ஸுரேசன் சிரித்துக்கொண்டே, 'நான் சற்று தாமதமாகத்தான் ஸ்நானம் செய்து சாப்பிடுவேன்' என்றான்.

கேதார் பாபு அவன் வார்த்தையில் கவனம் செலுத்தவே யில்லை. அவர் தம் போக்கில் சொல்லிக்கொண்டே போனவர், ஒரே கணத்தில் பெரும் சஞ்சல மடைந்தவராய், 'அடேடே! இன்னும் ஸ்நானம் செய்து சாப்பிடவில்லையா? இல்லை, இனி ஒரு நிமிஷம் கூடத் தாமதம் செய்யாதே, ஸுரேஷ்! இங்கேயே ஸ்நானம் செய்துவிட்டு, ஏதோ ஆனவரையில் ஒரு வாய் சாப்பிட்டுவிட்டுப் போ! அம்மா அசலா, கொஞ்சம் சீக்கிரம் ஆகட்டும். மணி பன்னிரண்டு அடித்துவிட்டது! அடே, யாரடா அங்கே!' என்று கூப்பிட்டுக்கொண்டே, தாமே வேண்டிய ஏற்பாடு செய்ய வெளியே சென்றார்.

அசலா அதுவரையில் அசையாமல் நின்றுகொண்டிருந்தாள். அப்பொழுதும் அவள் எந்த விதமான சஞ்சலத்தையும் வெளியிடவில்லை. தந்தை சென்ற பிறகு, தயக்கத்துடன், 'தாங்கள் எங்கள் வீட்டில் சாப்பிட முடியுமோ?' என்றாள்.

ஸுரேசன் தலை நிமிர்ந்து, சிறிது நேரம்வரை அசலாவின் முகத்தைப் பார்த்துவிட்டு, பிறகு, 'தாங்கள் என்ன சொல்லுகிறீர்கள்?'

'நீங்கள் பிரம்ம சமாஜிகளின் வீட்டில் சாப்பிடுவ தில்லையே?'

'இல்லை, சாப்பிடுவதில்லைதான். ஆனால், நீங்கள் கொண்டுவந்து கொடுத்தால் சாப்பிடுவேன்!' என்று சொல்லி, சற்று நிறுத்தி, மறுபடியும், 'நான் வேடிக்கையாகச் சொல்லு கிறேன் என்று நீங்கள் நினைக்கலாம். ஆனால் அப்படியன்று. உங்கள் கையினால் எடுத்து வந்து கொடுத்தால், நான் உண்மையாகச் சாப்பிடுவேன்!' என்று சொல்லி, அவள் பக் கம் பார்க்கலானான் ஸுரேசன்.

இந்தத் தடவை அசலா சற்று முகத்தைக் கவிழ்த்துக் கொண்டு, தன் சிரிப்பை மறைத்துக் கொண்டாள். 'உண்மை யில் தாங்கள் வேடிக்கை செய்கிறீர்கள் என்றுதான் நான் நினைத்துக்கொண்டிருந்தேன். நேற்று வரை எங்களுடைய வீட்டுச் சாப்பாட்டில் தங்களுக்கு எல்லையற்ற வெறுப்பு இருந் தது. இன்று எங்களில் ஒருவர் தொட்ட சாப்பாட்டின் மேல் தங்களுக்கு இவ்வளவு பிரியம் ஏற்பட்டதைப் பற்றி எனக்கு ஒன்றும் விளங்கவில்லையே, ஸுரேஷ் பாபு!' என்றாள்.

ஸுரேசன் வருத்தமான முகத்துடன், கலங்கிய குரலில், 'இவ்வளவு நேரத்திற்குப் பிறகு, உங்கள் கையால் சாப் பிட எனக்கு வெறுப்புண்டாகும் என்றுதான் உங்களுக்குத் தெரிந்ததா?' என்றான்.

'ஆனால் ஸுரேஷ் பாபு, அப்படி எண்ணுவதுதானே சுபாவம். தங்களைப் போன்ற உயர்ந்த படிப்புள்ள கண்ணிய புருஷர்கள் வெகு நாட்களாக வந்துகொண்டிருக்கும் சமூக விதிகளைத் திடீரென்று ஒரே நாளில் காரணமில்லாமல் விடுவ தென்றால், அதைப்பற்றி யோசிப்பது சுபாவம்தானே?' என்றாள்.

'இல்லை சுபாவமன்று. ஆனால் காரணமில்லாமல் விட்டுவிட்டேன் என்று ஏன் நினைத்துக்கொண்டீர்கள்?

காரணமும் இருக்கலாம்!' என்று பதில் சொல்லிக்கொண்டே, அசலா ஆச்சரிய மடையும்படியாக அவளைப் பார்த்தான்.

தன் வார்த்தையினால் ஸுரேசனுடைய மனம் புண் பட்ட தென்பதை அவன் முகத்தைப் பார்த்து அறிந்து கொண்டாள் அசலா. ஒருவிதமான ஹிம்சை நிறைந்த ஆனந்தத்தையும் அடைந்தாள். ஆனால் இந்த வேதனை சட்டென்று ஒரே கணத்தில் அவன் முகத்தை இம்மாதிரி சாம்பல் போல் உலரச் செய்துவிடும் என்பதை அவள் கற்பனை கூடச் செய்யவில்லை. அவள் அதை விரும்பவும் இல்லை. ஆகையால் அவள் வருத்த மடைந்து, மற்றப் பேச்சுக்களைச் சுபாவமான சிரிப்பு வேடிக்கையாக மாற்றிக்கொண்டு, பலவந்தமாகச் சிரிப்பை வரவழைத்துக்கொண்டு, 'தங்கள்போன்ற திடமான பிரதிக்ஞை உள்ளவர்கள் கூட—' என்று ஆரம்பித்தாள்.

'ஆமாம் முழுகிப் போகிறார்கள்!' என்றான் ஸுரேசன். அவன் குரல் நடுங்கியது. 'நீங்கள் ஒரு நாள் விஷயத்தைச் சொல்லுகிறீர்கள். ஆனால் ஒரு நாள் பூகம்பத்திலேயே பாதி உலகம் பூமியில் ஆழ்ந்துவிடுகிறது என்பது உங்களுக்குத் தெரியுமா? ஒரு தினம் என்பது கொஞ்ச நேரமல்ல!' என்று சொல்லி, அவன் முன்போலவே பேசாமல் பார்த்துக் கொண்டிருந்தான்.

அசலா பயந்துவிட்டாள். ஸுரேசனின் முகத்தில் ஒருவிதமான வரண்ட வெளுப்புத் தட்டியது. நெற்றி விம்மியது. ஏதோ ஒரு பொருளைத் தாவிப் பிடிக்க விரும்புவதைப் போலக் கண்கள் பிரகாசித்தன.

உக்கிரமான வெயில் ஒருபுறம், வெகுநேரம் வரையில் ஸ்நானம் செய்து சாப்பிடாதது மற்றொருபுறம்—முதல் நாள் இரவு சற்றுக்கூடத் தூங்கவுமில்லை. ஆதலால், அவனுக்குப் பூமியே அசைவதுபோல் தோன்றியது! தன்னுடைய சிவந்த கண்களை இமைத்துக்கொண்டே, 'பிரம்ம சமாஜிகளிடம்

விருப்பம் கொள்ளுகிறேன், அல்லது இல்லை என்பதற்குப் பதில் பிரம்ம சமாஜிகளிடம் சொல்லிக்கொள்ளுகிறேன். ஆனால், நீங்கள் எனக்கு அவர்களைவிட ரொம்ப உயர்ந்தவர்கள்!' என்றான் ஸுரேசன்.

அவனுடைய ஆவேசமான நிலைமையைக் கண்டு அசலா பயத்தினால் குன்றினாள். எந்த விதமாகவாவது அந்தச் சச்சரவை அடக்க எண்ணி, அவள் பயந்துகொண்டே, 'சமையற்காரன்......' என்று ஆரம்பித்தாள். ஆனால் அவளுடைய மெல்லிய குரல் ஸுரேசனின் உணர்ச்சியில் அமுங்கிவிட்டது. அவன் முன் போலவே வேகமான குரலில், 'இரண்டு நாளைய பரிசயம்! அது வாஸ்தவம்தான். ஆனால் ஒன்று தெரியுமா, அசலா? நாள், மணி, நிமிஷம் — இவைகளால் மஹிமை அளக்க முடியும். ஆனால் ஸுரேசனை அப்படி அளக்க முடியாது. அவன் இடத்தையும், காலத்தையும் கடந்தவன்! நீங்கள் பூமியை விழுங்கும் பூகம்பத்தைப் பார்த்திருக்கிறீர்களா?' என்றான்.

வேடனிடம் பயந்த மான் போல, அசலா ஒரு கணத்தில் எழுந்து நின்று, 'தாங்கள் ஸ்நானம் செய்ய ஏற்பாடு......' என்று சொல்லி, உள்ளே போகக் காலை எடுத்து வைத்தாளோ இல்லையோ, ஸுரேசன் சட்டென்று முன் பக்கம் குனிந்து, அவள் வலது கையைப் பிடித்து இழுத்தான். இந்த மாதிரிப் பைத்தியக்காரத்தனத்தையும், எதிர்பாராத மோதுதலையும் சமாளித்துக்கொள்வதற்கு ஸ்திரீகளுக்கு அவ்வளவு சாமர்த்தியம் போதாது. பயமும் வியப்பும் மேலிட்டு, அசலா ஸுரேசன் மேல் விழுந்துவிட்டாள். அவள் 'அம்மாடி!' என்று கூவிய தெளிவில்லாத கூக்குரல் அவளுடைய நடுங்கும் உதடுகளைத் தாண்டக்கூடவில்லை: ஸுரேசன் அவளுடைய இரு கரங்களையும் தன் மார்புடன் பலமாக அணைத்துக்கொண்டு, 'அசலா!' என்றான்.

அசலா, தலை நிமிர்ந்து, மாயையினால் மூர்ச்சை யடைந்தவளைப் போலச் செயலற்று, அவன் பக்கம் பார்த்துக்கொண்டிருந்தாள். ஸுரேசனும் ஒரு கணம் ஒன்றும் பேசவில்லை. அவனுடைய அடக்க முடியாத தாகம், துடிக்கும் உதடுகளில் ஒருவிதமான ஜ்வாலையை வீசுவது போல், இருந்தது.

சில கணங்கள் இம்மாதிரி இருந்துவிட்டு, மறுபடியும் ஒரு முறை அசலாவின் கைகளைத் தன் மார்பில் அணைத்துக் கொண்டு, துடிதுடிப்புடன், 'அசலா, ஒரு முறை பூகம்பத்தின் இந்தப் பிரசண்ட ஹிருதய நடுக்கத்தை உன் கையினால் அநுபவித்துப் பார்! எப்படிப்பட்ட பயங்கரமான தாண்டவம் இந்த உள்ளத்திற்குள் நடக்கிறது! இது பூமியில் தோன்றும் பூகம்பத்தைவிடச் சிறியதா? இந்த உலகத்தில் எந்த ஜாதி, எந்த மதம், எந்த தர்மம் இந்தப் புரட்சியில் விழுந்து மூழ்கிப் பாதாளத்திற்குப் போகாமல் இருக்க முடியும்? இதைச் சொல்ல முடியுமா, அசலா?' என்றான்.

'விடுங்கள் — அப்பா வருகிறார்!' என்று சொல்லி, அசலா பலவந்தமாகத் தன்னை விடுவித்துக்கொண்டு, சாந்தமடைந்து, தன் நாற்காலியில் அமர்ந்தாள்.

அடுத்த நிமிஷமே, கேதார் பாபு வருத்தத்துடன் உள்ளே வந்து, 'என்ன செய்வது, ரொம்ப நாழிகை ஆகிவிட்டது. எங்களுடைய சமையற்காரன் இருந்தாற்போலிருந்து எங்கே போய்விடுகிறானோ தெரியவில்லை! அம்மா அசலா!— இது என்ன இது? உனக்கு உடம்பு சரியில்லையா? என்ன முகம் வாடி இம்மாதிரி—' என்றார்.

அசலா ஒருவிதமாகக் கொஞ்சம் சிரிக்க முயற்சித்துக் கொண்டே, 'உடம்புக்கு என்ன வந்தது!' என்றாள்.

'பின் தலைவலி ஏதாவது இருக்கிறதா இந்த உஷ்ணத்தினால்?'

'இல்லையே, அப்பா! நான் நன்றாக இருக்கிறேன், எனக்கு ஒன்றுமில்லை.'

கேதார் பாபு கவலையற்று, 'அப்படியானால் சரி. முகத்தைப் பார்த்து எனக்குப் பயமாகப் போய்விட்டது. நீயே சற்று சென்று பாரேன்! ஒருகால்—' என்றார்.

'நல்லது அப்பா! நான் ஒரு நிமிஷத்தில் எல்லாவற்றையும் ஏற்பாடு செய்கிறேன். ஆனால், நான்கூட, இங்கே ஸ்நானம் செய்து சாப்பிடுவதில் அவருக்கு யாதொரு ஆட்சேபமும் இல்லையே என்பதைத்தான் ஸுரேஷ் பாபுவிடம் கேட்டுக்கொண் டிருந்தேன்!' என்றாள்.

கேதார் பாபு ஆச்சரியத்துடன், 'ஆட்சேபம் எதற்கு? இல்லை, இல்லை. ஸுரேஷ், ஒரே தினத்திலேயே நான் உன்னை வீட்டுப் பிள்ளையாக நினைத்துக்கொண்டுவிட்டேன் என்பதை உன்னிடம் சொல்லியிருக்கிறேன். இந்த வீடு உன்னுடைய வீடுதான்!' என்று சொல்லி, பெண் பக்கம் பார்த்து, கர்வத்துடன், 'அசலா, இந்த விஷயம் முடியாவிட்டால், பகவான் நம்மை உத்தாரணம் செய்ய இவரை ஏன் அனுப்புகிறார்? ஆனால் இப்பொழுது தாமதம் செய்வது சரியல்ல. ஸுரேஷ், என் கூட வா. ஸ்நான அறையைக் காட்டுகிறேன்!' என்றார்.

ஆனால் ஸுரேசன், கேதார் பாபுவின் அறையில் நுழையும்போது எப்படித் தலை குனிந்திருந்தானோ, அதே மாதிரித் தான் அப்பொழுதும் இருந்தான். அவன் தலை நிமிரவில்லை.

'அதிகமாகச் சொல்வதற்கு அவசியம் என்னப்பா இருக்கிறது? நம் போன்ற பிரம்ம சமாஜிகள் வீட்டில் சாப்பிடுவது அவருக்குப் பிடிக்காம லிருக்கலாம். அதைத் தவிர உடம்பு சரியில்லாதபோது சாப்பிடுவதால் ஆரோக்கியம் கெட்டுத்தானே போகும்?' என்றாள் அசலா.

கேதார் பாபுவை உள்ளூரக் குத்தியதைப் போலிருந்தது. ஸுரேசன் பெரிய இடத்துப் பிள்ளை — சுதந்திரமானவன். வீட்டுக்கு வண்டியில் போகிறான். அவனுக்குச் சாப்பாடு செய்வித்து எப்படியாவது தம்முடையவ னாக்கிக்கொள்ள வேண்டும் என்பது அவர் எண்ணம். சட்டென்று அவ னுடைய குனிந்திருந்த முகத்தில் அவருடைய பார்வை விழுந்ததும், அவர் ஆச்சரியமடைந்து போனார். 'ஓஹோ! என்ன சமாசாரம், முகம் உலர்ந்து கறுத்திருக்கிறதே! எழுந்திரு, எழுந்திரு! கைகால் கழுவிக்கொள்ள ஒரு நிமிஷம் கூடத் தாமதம் செய்யாதே!' என்று சொல்லி, அவர் அவனுடைய கைகளைப் பிடித்துப் பலவந்தமாக இழுத்துச் சென்றார்.



மகாமகோபாத்தியாய
டாக்டர். உ. வே. சாமிநாதையர்
நூல் நிலையம்,
சென்னை - 600090.

# VII

சாப்பாடு ஆனபிறகு, அந்த வெயிலில் ஸுரேசன் வீட்டுக்குப் போக, கேதார் பாபு சம்மதிக்கவில்லை. இளைப்பாறுதல் என்ற பெயரில் மத்தியானம் முழுவதும் அவனை ஓர் அறையில் கைது செய்து வைத்தார். அவன் கண்ணை மூடிக் கொண்டு ஒரு சோபாவில் படுத்துக்கொண்டிருந்தான்; ஆனால் தூக்கம் வரவில்லை. வீட்டுக்கு வெளியே மத்தியான சூரியன் வானத்தில் காய்ந்துகொண்டிருந்தான். உள்ளே மனப் புழுக்கம் அதைவிடக் கடுமையாக ஸுரேசனின் ஹிருதயத்தை எரிக்கலாயிற்று. இந்த விதமாக, நாள் முழுவதும் அகமும் புறமும் எரிந்து, பாதி உயிர் போனவனாய், அவன் எழுந்து ஜன்னல் கதவைத் திறந்து பார்த்த பொழுது சாயங் காலம் ஆகிக்கொண்டிருந்தது. கேதார் பாபு அறைக்குள் வந்து ஒரு பெருமூச்சு விட்டுக்கொண்டு, 'அப்பா! இன்றைக்கு என்ன வெய்யில் பார்த்தாயா, ஸுரேஷ்! நான் என் வயதில் கல்கத்தாவில் இம்மாதிரி வெய்யிலைக் கண்டதே யில்லை! உனக்குத் தூக்கம் கீக்கம் வந்ததா?' என்றார்.

ஸுரேசன் தலையை அசைத்துக்கொண்டே, 'இல்லை, நான் பகலில் தூங்குவதில்லை' என்றான்.

உடனே கேதார் பாபு, 'தூங்கவும் கூடாதுதான். ஆரோக்கியத்திற்கு அது கெடுதல். ஆயினும், உனக்குப் பங்கா இழுப்பவன் இழுத்துக்கொண்டிருக்கிறானா இல்லையா என்று இரண்டு மூன்று தடவை எழுந்து வந்து பார்த்தேன்.

இந்தப் பிசாசுகள், பாபு கண் அயர்ந்தாரோ இல்லையோ, அவர்களும் தூங்க ஆரம்பித்து விடுகிறார்கள். போகட்டும், கொஞ்சம் சௌக்யம்தானே? இந்த வெய்யிலில் நீ வெளியே போனால் பிறகு சந்தேகம்தான் என்று நான் எண்ணினேன்!' என்றார்.

ஸுரேசன் பேசாமலிருந்தான். கேதார் பாபு, ஒவ்வொன்றாக அறையின் எல்லா ஜன்னல்களையும் திறந்து விட்டு, தாம் உட்காருவதற்கு ஒரு நாற்காலியை இழுத்து ஸுரேசனுக்கு அருகில் போட்டுக்கொண்டு உட்கார்ந்து, 'ஸுரேஷ், இனி யோசிக்கவேண்டிய அவசியமில்லை என்று எண்ணுகிறேன். வியக்தமாக மஹிமுக்கு ஒரு கடிதம் எழுதி விட வேண்டும். உன் அபிப்பிராயம் என்ன?' என்றார்.

இந்தக் கேள்வி ஸுரேசனின் முதுகில் சாட்டை கொண்டு அடிப்பது போல் இருந்தது. அவன் திடுக்கிட்டு நிமிர்ந்ததைக் கேதார் பாபு பார்த்துவிட்டு, 'ஸுரேஷ், கொடுமையான கடமையை எப்படிப் பூர்த்தி செய்வது என்ற பாடத்தை இத்தனை தினங்களுக்குப் பிறகு நீதான் எனக்கு அளித்தாய்! இப்பொழுது நீ பின்வாங்கினால் காரியம் நடவாது, அப்பா!' என்றார்.

ஸுரேசன் சிறிது நேரம் மௌனமாக இருந்துவிட்டு, 'விஷயம் என்னவோ சரிதான். ஆனால் தங்கள் பெண்ணிடமும் இது சம்பந்தமான அபிப்பிராயத்தை அறிவது உசிதம்' என்றான்.

கேதார் பாபு சற்று சிரித்துவிட்டு, 'ஆமாம், அது அவசியம்தான்!' என்றார்.

'அவள் வியக்தமாகக் கடிதம் எழுதிவிடும்படி சொன்னாளா?'

கேதார் பாபு இதற்குச் சரியான பதிலளிக்காமல், 'அநேகமாக அப்படியே எண்ணிக்கொள். இது விஷயமாக நேருக்கு

னோர் கேள்வி கேட்டுக்கொண் டிருப்பது எல்லோருக்குமே கொஞ்சம் கஷ்டம்தான். போதுமான பாடம் படித்தாய் விட்டது. இந்த விஷயங்களையெல்லாம் சமயம் இருக்கும் போது சரி செய்துவிடாவிட்டால், இந்தப் பைத்தியக்காரத் தனம் எவ்வளவு தூரம் போகுமென்பதை அவள் அறிந்தேயிருக்கிறாள். ஆகையால், இன்று இரவே இந்த விஷயத்தை நிச்சயம் செய்துவிடுவது என்று எண்ணியிருக்கிறேன்' என்றார்.

ஸுரேசன் வாட்டத்துடன், 'இவ்வளவு சீக்கிரமாக ஏன் செய்கிறீர்கள்? இரண்டொரு நாள் யோசித்துப் பார்ப்பது நல்லது' என்றான்.

'இதில் யோசனை செய்ய எங்கே அவகாச மிருக்கிறது? அவன் கையில் என் பெண்ணை ஒப்புவிக்க முடியாது. இது நிச்சயம். எனவே, எவ்வளவு சீக்கிரம் இந்த விஷயத்தை முடிவு செய்கிறோமோ அவ்வளவுக்கவ்வளவு நல்லதுதானே!'

'என்னைப் பற்றி விவரிக்க வேண்டியதுகூட அவசியமா?' என்றான் ஸுரேசன்.

கேதார் பாபு சிரித்துவிட்டு, 'கிழவனாகிவிட்டேன் என்பது வாஸ்தவம். ஆனால், அவ்வளவு கூட எனக்குத் தெரியாது என்று நீ நினைத்தாயா? உன் பெயரை யாரும் ஒரு நாளும் குறிக்கமாட்டார்கள்!' என்றார்.

ஸுரேசன் நிம்மதியான ஒரு பெருமூச்சு விட்டுக்கொண்டான். ஆனால் வாய்திறந்து ஒன்றும் சொல்லாமல் உட்கார்ந்திருந்தான். இது கேதார் பாபுவுக்குத் தெரியாமலில்லை. அவர் இதன் மத்தியில் ஸுரேசனின் நடவடிக்கைகளைப் பார்த்து மனத்திற்குள் ஓர் அநுமானம் செய்திருந்தார். இப்பொழுது அதன் உண்மை-பொய்களை அறிய, தம்முடைய அநுமானம் ஒருகால் சரியா யிருக்குமோ என்று பார்க்க, இருளில் ஒரு கல்லை வீசினார்.

'அப்பா, ஸுரேஷ்! நீ எங்களுக்குப் பெரிய உபகாரத்தைச் செய்தாய். ஆனால் அதைவிட மகத்தான உபகாரத்தையும் செய்வாய் என்று நாங்கள் எண்ணியிருக்கிறோம். நாங்கள் பிரம்ம சமாஜிகள்தான். ஆனாலும், என் பெண் என்னமோ அவள் தாயைப் போல மனத்திற்குள் ஹிந்துவாகவே இருந்து வருகிறாள். அவள் எங்களுடைய பிரம்ம சமாஜ முறைகளை முற்றிலும் விரும்புவதில்லை' என்றார்.

ஸுரேசன் ஆச்சரியமடைந்து நிமிர்ந்து அவர் பக்கம் பார்த்தான். ஸுரேசனுடைய மௌனமான இந்த உற்சாகத்தை ஒரு தினுசாக அறிந்துகொண்ட கேதார் பாபு, 'பெண்ணை நான் என்னமோ கன்னிகையாகவே வைத்திருக்க முடியாது. இந்த விஷயத்தில் நாங்கள் உங்களைப் போலவே ஹிந்து மதத்தை அவலம்பிப்பவர்கள்தான். உன்னாலே ஒரு சம்பந்தம் அறுபட்டது. அதைப் போல் மற்றொரு சம்பந்தத்தை நீதான், அப்பா, ஏற்பாடு செய்யவேண்டும்!' என்றார்.

'உத்தரவு, என்னால் முடிந்தவரை முயற்சிக்கிறேன்!' என்றான் ஸுரேசன்.

அவன் முக பாவத்தைப் படித்தறிந்து, கேதார் பாபு, சந்தேகமான குரலில், சமாஜத்தில் இது விஷயமாக ரொம்பக் களேபரம் நடப்பது எனக்கு நன்றாகத் தெரிகிறது. ஆனால், எவ்வளவு சீக்கிரம் முடியுமோ அவ்வளவு சீக்கிரம் அசலாவுக்கு விவாகம் செய்து இவைகளைத் தடுக்கவேண்டும். ஆனால், ஒரு கஷ்டமிருக்கிறது, ஸுரேஷ்!' என்று சொல்லி, அவர் ஒரு முறை வாசற்படிக்கு வெளியே எட்டிப் பார்த்துவிட்டு, இன்னும் சற்று அருகே வந்து, மெல்லிய குரலில், 'கஷ்டம் இதுதான், பையன் ரூபத்திலும், குணத்திலும் நன்றாயிருந்துவிட்டால் மட்டும் போதாது. ஹிந்து சமூகத்தைப் போலக் கையைப் பிடித்து விவாகம் செய்து கொடுத்துவிடுவது இங்கே கஷ்டம். பெண் எப்பொழுதும் கல்வி நாகரிகம்

இவைகளின் மத்தியில் வளர்ந்தவள். ஆகையால், அவள் அபிப்பிராயமில்லாமல் ஒன்றும் செய்ய முடியாது. ஆனால், அவளும் அபிப்பிராயம் கொடுக்கமாட்டாள். இருவரிடையே யும் — தெரிந்ததா இல்லையா, ஸுரேஷ்?' என்றார்.

இந்த வார்த்தைகளால் ஸுரேசன் சற்று மனம் கசந் தான். அந்தக் காதலின் செயல்கள் அவனை ஒரு தரம் புது முறையில் புண்படுத்திக் கலங்கச் செய்தன. மதியத்தில் நடந்த அந்தத் தாராளமான காதல் வழிபாட்டின் உத்வேக மான நடவடிக்கையை நினைத்து, வெட்கத்தால் அவன் முகம் வாடாமல் முற்றிலும் மலர்ந்தது. அதுவரை காலின் கீழே கிடந்த தினசரிப் பத்திரிகையைக் கையில் எடுத்து அதன் விளம்பரப் பக்கங்களைப் பார்க்கலானான்.

கேதார் பாபு இதைப் பார்த்தார். அகஸ்மாத்தான இந்த பாவ மாறுதலை முற்றிலும் எதிரிடையாக அர்த்தம் செய்துகொண்டு, மனத்திற்குள் மிக்க சந்தோஷத்துடன், சமயம் பார்த்து ஒரு போடு போட்டார்.

'ஒரு ஆச்சரியமான விஷயம் நானும் பார்த்துக்கொண்டு வருகிறேன், ஸுரேஷ்! ஒரு மனிதனுடன் ஜன்மம் பூராவும் இருந்தாலும் சற்றுக் கூட நம்பிக்கை ஏற்படுவதில்லை. ஆனால் மற்றொரு மனிதனிடம் இரண்டொரு மணி நேரம் பழகி னாலே, அவனிடம் தனது உயிரை ஒப்புவித்தால்கூட யாதொரு பயமும் இல்லை என்று தோன்றுகிறது. அவன் ஜன்ம ஜன்மாந்திரமாகப் பழகியவன் போல் தோன்றுகிறான். இரண்டொரு மணி நேரத்தியவனாகத் தோன்றுவதில்லை - உன்னைப் போல. நீ எவ்வளவு நேரப் பழக்கமுள்ளவன், சொல்லேன்!' என்றார்.

அப்பொழுது அசலா உள்ளே பிரவேசித்தாள். ஸுரே சன் ஒரு கணம் தலை நிமிர்ந்தான். பிறகு மீண்டும் பத்திரி கையைப் பார்ப்பதில் ஆழ்ந்தான்.

‘அப்பா, நீ இப்பொழுது டீ சாப்பிடப் போகிறாயா, கோக்கோவா?’ என்று கேட்டாள் அசலா.

‘நான் கோக்கோதான், அம்மா, சாப்பிடப்போகிறேன்.’

‘ஸுரேஷ் பாபு, தாங்கள் டீ சாப்பிடுவீர்கள் அல்லவா?’

ஸுரேசன் பத்திரிகையில்பார்வை செலுத்திக்கொண்டே விளக்கமில்லாத குரலில், ‘எனக்கு டீயே கொடுங்கள்!’ என்றான்.

‘தங்களுக்குச் சர்க்கரை குறைவாக வேண்டாமே?’

‘இல்லை, எல்லோரும் எப்படிச் சாப்பிடுகிறார்களோ அப்படியே நானும் சாப்பிடுகிறேன்.’

அசலா சென்றாள். கேதார் பாபு தம்முடைய விட்டுப் போன விஷயங்களைத் தொடர்ந்து, மெல்ல, ‘ஸுரேஷ், இப்பொழுது நீயே சொல், இந்தப் பெண்ணுக்காக நான் இந்தத் தள்ளாத வயதில் எப்படிப்பட்ட சங்கடத்தில் இருக்கிறேன் தெரியுமா? இதை நான் உன்னிடம் ஒளிக்க முடியவில்லை. எங்காவது தன்னுடைய துர்த்தசையின் விஷயத்தைச் சாதாரணமாக ஒருவர் மற்றொருவரிடம் சொல்லுவார்களா? எதை ஒருவர் மற்றொருவரிடம் சொல்லமாட்டார்களோ, அதை உன்னிடம் சொல்ல ஏன் எனக்கு சங்கோசம் ஏற்படவில்லை? இதற்கு ஏதாவது அந்தரங்கமான காரணம் இருக்கிறதா, நீ அறிவாயா?’ என்றார்.

ஸுரேசன் ஆச்சரியத்துடன் தலை நிமிர்ந்து பார்த்தான். கேதார் பாபு மீண்டும், ‘இது கடவுளின் நிர்ணயம். நான் ஒளிப்பதற்கு என்ன இருக்கிறது? நான் சொல்லியே ஆக வேண்டும்!’ என்று சொல்லி, நாற்காலியின் கைகளில் வேகமாக ஓர் அடி அடித்தார்.

ஆனால், அவருடைய விஸ்தாரமான முகவுரைக்குப் பின்பு கூட, அவருடைய துர்த்தசை அந்தப் பெண்ணின் காரணமாக எதுவரையில் சென்றிருக்கிறது என்பதை ஸுரேசனால் அளவிட முடியவில்லை. கேதார் பாபு விரிவாக

மகாமஹோபாத்தியாய

விஷயங்களை வர்ணிக்கலானார். அவருடைய சிறந்த ஆர்டர் சப்ளை வியாபாரம், மோசம், நன்றிகெட்ட செய்கைகளின் நெருப்பில் விழுந்து வியாபாரம் சாம்பலானது, ஆயினும் கூட அவர் சலிக்காமல் தைரியத்துடன் நின்றது, கடன் மேன் மேலும் பெருகிய போதிலும் தம் மகளின் படிப்புச் செலவில் சிறிது கூடக் குறைக்காம லிருந்தது -' ஆகியவைகளை யும், ஐந்தாறு டிக்ரிகள் பட்டுவாடாச் செய்யவேண்டிய பயத்தி னால் அவருக்கு ஆகாரம்கூட விஷமாகத் தோன்றி, கடன் தொல்லையால் வாழ்க்கையே பாரமாகத் தோன்றியது, கல்கத்தா நகரில் அவருடைய கடன் பூராவையும் தீர்க்கக்கூடிய நண்பர்கள் இருந்தும் அவர் யாரிடமும் ஒன்றும் சொல் லாம லிருந்தது—ஆகிய எல்லாவற்றையும் சொல்லி, சற்று நிறுத்தி ஏதோ யோசித்துவிட்டு, 'உன்னிடம் என்ன சொன் னேனோ இதில் எனக்குச் சற்றும் வருத்தமோ, சங்கோ சமோ ஏற்படவில்லை — இது கடவுளின் ஸ்பஷ்டமான கட் டளை அல்லவா?' என்று சொல்லிக்கொண்டே, அவர் பரம பக்தியுடன் தம் இரு கரங்களையும் சிரமேல் குவித்துப் பகவானுக்கு அஞ்சலி செய்தார்.

ஸுரேசனுக்குக் கடவுளிடம் நம்பிக்கை யில்லை. அவன் வயோதிகரின் உணர்ச்சிப் பெருக்கில் கலந்துகொள்ளவில்லை, தவிர அவன் மனம் சற்று சளைத்தது. அவன் தைரியத்துடன், 'தங்களுக்குக் கடன் எவ்வளவு இருக்கிறது?' என்றான்.

'கடனா? என்னுடைய தினசரி வியாபாரம் இருந்து வந்தால் இது ஒரு கடனோடு சேர்ந்ததா? ரொம்ப அதிக மானால் மூவாயிரம், நாலாயிரம் ரூபாயிருக்கும்!'

அவர் இன்னும்கூட ஏதோ சொல்ல விரும்பினார். ஆனால் அதற்குள், கையில் டீ சாமான்களுடன் வேலைக்கார னும், சிற்றுண்டித் தட்டுடன் அசலாவும், அறைக்குள் வந் தார்கள்.

கேதார் பாபு ஒரு வாய் கோக்கோ அருந்திவிட்டு, ஒரு வியக்தமற்ற களைப்புக் களைத்துக்கொண்டு, டம்ளரை மேஜையின்மேல் வைத்துவிட்டு, 'பார் ஸுரேஷ், நானும் பார்த்து வருகிறேன், கடவுள் என்பேரில் ஒரு ஆச்சரியமான அருள் பார்வை வைத்திருக்கிறார். ஒரு பொழுதும் நான் யார் முன்பும் லஜ்ஜைப்பட வேண்டி யிருந்ததில்லை. மஹிமிடம் இவற்றை ஏன் சொல்லத் தடை ஏற்பட்டது? ஏன் ஆண்டவர் என் வாயை மூடிவிடுகிறார் என்பது இவ்வளவு நாட்களுக்குப் பிறகு என் மனத்திற்கு விளங்குகிறது' என்று சொல்லி, சிரமேல் கரம் குவித்துக் கடவுளின் எல்லையற்ற கிருபைக்காக மறுபடியும் அஞ்சலி செய்தார்.

ஸுரேசன் தனது டம்ளரில் பார்வை செலுத்திக் கொண்டே, 'தங்களுக்கு எப்பொழுது ரூபாய் அவசியம்?' என்றான்.

கேதார் பாபு கையிலிருந்த கோக்கோ டம்ளரை மேஜையின் மேல் வைத்துக்கொண்டே, 'எனக்கு என்ன அவசியம், ஸுரேஷ்? அவசிய மெல்லாம் உங்களுக்குத்தான்!' என்று சொல்லி, சற்று உரத்த சிரிப்பு ஒன்று சிரித்தார்.

இந்தப் புதிர் விளங்காமல் ஸுரேசன் தலை நிமிர்ந்த பொழுது, அசலா ஆவல் நிறைந்த முகத்துடன் தந்தையைப் பார்த்துக்கொண் டிருப்பதைக் கண்டான். அவர் ஒரு முறை மகளின் முகத்தைப் பார்த்துவிட்டு, பிறகு ஸுரேசன் முகத்தைப் பார்த்து, 'இதன் தாத்பரியத்தை அறிவது கடினமல்ல. வீட்டை நான் கூடவா எடுத்துக்கொண்டு போகப் போகிறேன்? போனால் உங்களுடையதுதான் போகும். இருந்தால் உங்கள் இருவருக்கும் இருக்கும்' என்று சொல்லி மீண்டும் மெல்லிய புன்னகை புரிந்தார்.

இருவர் கண்களும் சந்தித்தன. கண்ணிமைப் பொழுதில் இருவருடைய வாடிய முகங்களும் கவிழ்ந்தன.

இரண்டு டம்ளர் கோக்கோவைக் குடித்து முடிந்த பிறகு கேதார் பாபுவுக்கு அவசியமான ஒரு கடிதம் எழுதவேண்டிய ஞாபகம் வந்தது. அவர் சட்டென்று எழுந்து, 'ஸுரேஷ், இன்று உனக்கு ஸ்நானம், சாப்பாட்டிற்கு ரொம்பவும் கஷ்டமாகிவிட்டது. நாளை மத்தியானமும் இங்கேயே சாப்பிட வேண்டும்!' என்று அழைப்புக் கொடுத்து விட்டு, மேலண்டைக் கதவைத் திறந்துகொண்டு தம் அறைக்குச் சென்றார்.

திறந்திருந்த கதவின் வழியாக அஸ்தமன சூரியனின் வர்ண ஒளியின் கதிர் ஒன்று ஸுரேசன் முகத்தில் விழுந்தது. தலையைத் திருப்பினதும் அசலா அவன் பக்கமே பார்த்துக்கொண்டு நிற்பதைக் கண்டான். அவள் பார்வையைக் கீழே தணித்துக்கொண்டாள். இரண்டு நிமிஷங்களுக்குப் பிறகு பெரிய கடிகாரத்தின் டக் டக் என்ற சத்தந்தான் கேட்டது. மற்றப்படி அறையில் நிசப்தம் நிலவியது.



# VIII

அறையின் நிசப்தத்தைக் குலைத்து, 'திடீரென்று ஒரு பிரமாதமான காரியத்தைச் செய்துவிட்டார்!' என்றான் ஸுரேசன்.

அசலா ஒன்றும் பேசவில்லை.

ஸுரேசன் மீண்டும், 'உங்களுக்கு நான் ஒரு ராட்சஸனைப் போலத் தோன்றுகிறேன். என்னுடன் தனியாக உட்கார உங்களுக்குத் தைரியம் வரவில்லை அல்லவா?' என்று சொல்லிப் பலமாகச் சிரிக்கலானான். அசலா அப்பொழுதும் தலை நிமிரவில்லை. ஆனால் தலை நிமிர்ந்திருந்தால், அந்தப் பெரு முயற்சியினால் ஸுரேசன் சிரிக்கும் சிரிப்பு; அவன் முகத்தையே திரும்பத் திரும்ப அவமானம் செய்து; வெட்கத்தால் குன்றச் செய்கிறது என்பதைப் பார்த்திருப்பாள்.

மீண்டும் அறை நிசப்தமாயிற்று; சுவரில் தொங்கிக்கொண்டிருந்த கடிகாரம் டக் டக் என்று சத்தமிட்டு அந்த நிசப்தத்தை அளந்துகொண்டிருந்தது. சிறிது நேரத்திற்குப் பிறகு இந்தக் கடினமான நிசப்தத்தை முற்றிலும் சகிக்க முடியாதவனாய், ஸுரேசன் தன்னுடைய சரீரத்தை நேராக நிமிர்த்திக்கொண்டு, 'பாருங்கள், எது நடந்ததோ அதன் பின் இப்பொழுது நம்முடைய கண் பார்வைக்கு ஒன்றும் இல்லை. பொழுது போகிறது. இப்பொழுது நான் போய் வருகிறேன். ஆனால், போகுமுன் இரண்டொரு வார்த்தை

களுக்குத் தங்களிடம் பதில் அறிய விரும்புகிறேன். சொல்லு வீர்களா?' என்றான்.

அசலா தலை நிமிர்ந்தாள். அவள் கண்கள் சோகத்தால் நிரம்பியிருந்தன.

'சொல்லுங்கள்!' என்றாள்.

ஸுரேசன் சற்று சும்மா யிருந்துவிட்டு, 'உங்களுடைய தந்தையின் கடனைத் தீர்ப்பதற்காக நான் நாளை அல்லது அடுத்த நாள் ஒரு முறை வருவேன்; ஆனால் அப்பொழுது தங்களைச் சந்திக்க வேண்டிய அவசியம் இருக்காது. நம் விஷய மாக அவருடைய அபிப்பிராயம் என்ன? உங்களுக்குத் தெரியுமா?' என்றான்.

'எனக்கு அவர் தெளிவாக ஒன்றையும் சொல்லவில்லை.'

'என்னிடமும் சொல்லவில்லை. ஆயினும் எனது நம்பிக்கை, அவர் என்னையே — ஆனால் நீங்கள் ஒருகால் ஒப்புக்கொள்ள மாட்டீர்களோ?'

'மாட்டேன்!'

'ஒரு பொழுதும் மாட்டீர்களா?'

அசலா கீழே பார்த்துக்கொண்டே, 'முடியாது!' என் றாள்.

'ஆனால், மஹிமிடம் நம்பிக்கை இல்லாவிட்டால்?'

அசலா திடமான குரலில், 'அந்த நம்பிக்கையைப் பற்றிப் பேச்சு இல்லவே இல்லையே!' என்றாள்.

'ஒருகால் அதுவும் இருக்காது?' என்றான் ஸுரேசன்.

அசலா தலை நிமிரவில்லை. ஆனால், முன்போலவே திட மான குரலில், 'இல்லை, அதுவும் இல்லை!' என்றாள்.

ஸுரேசன் நாற்காலியின் முதுகில் சாய்ந்து ஒரு நீண்ட பெருமூச்சு விட்டுக்கொண்டு, 'போகட்டும், ஒரு தரப்பி லிருந்து விஷயம் விளங்கிவிட்டது. உயிர் வந்தது!' என்று சொல்லிவிட்டு, சிறிது நேரம் பேசாமலிருந்து, மறுபடியும்

சரியாக உட்கார்ந்து, 'ஆனால் நான் ஒரு சிக்கலான விஷயத்தை யோசித்துக்கொண்டிருக்கிறேன்; பின் தங்களுடைய தந்தையின் கடன் எப்படித் தீரும்?' என்றான்.

அசலா பயந்துகொண்டே தலை நிமிர்ந்து, மிகுந்த சந்தோஷத்துடன், 'அப்படியானால் தாங்கள் கொடுக்க முடியாதா?' என்றாள்.

'கொடுக்க முடியாதா? ஏன்?' என்று கேட்டு, ஸுரேசன் ஆவல் நிறைந்த கூர்மையான பார்வையுடன் அவளைப் பார்த்தான். அந்தப் பார்வையின் முன் அசலா மீண்டும் தலை குனிந்தாள். சில நிமிஷம் பதிலை எதிர்பார்த்துவிட்டு ஸுரேசன் சிரித்தான். ஆனால் இந்தத் தடவை அவனுடைய சிரிப்பில் ஆனந்த மில்லாவிட்டாலும் விஷமமும் இல்லை.

'பாருங்கள், என்னுடன் பரிசயமேற்பட்ட பிறகு என்னுடைய நடத்தைகள் யாவும் கண்யமுள்ளவை என்று நீங்கள் சொல்ல முடியாது. அதை நானே அறிவேன். ஆனால் நான் அவ்வளவு மோசமானவனும் அல்ல. உங்கள் தந்தைக்கு நான் இந்த ரூபாயை வட்டிக்குக் கொடுக்க விரும்பவில்லை. அவருடைய ஆபத்தில் ஒத்தாசை செய்யவே விரும்பினேன். தங்கள் அபிப்பிராயத்தைப் பொறுத்து அல்ல நான் கொடுப்பது; அவர் ஏற்றுக்கொள்வதைப் பொறுத்திருக்கிறது. அவர் இப்பொழுது எப்படி வாங்கிக்கொள்வார்? அதைத்தான் நான் யோசிக்கிறேன். இதுதான் பாருங்கள். இது விஷயமாக நாம் சற்று யோசிப்போம்' என்றான் ஸுரேசன்.

அசலா தலைநிமிர்ந்து, 'சொல்லுங்கள்!' என்றாள்.

'அதிர்ஷ்டவசமாக நான் பெருத்த பணத்திற்கு எஜமானன். ஆயினும் பணம் காசைப் பற்றி எனக்கு ஒரு நாளும் கர்வம் ஏற்பட்டதில்லை. நாலாயிர ரூபாயை நான் வெகு சுலபமாகப் பிறர் கையில் ஒப்புவிக்க முடியும். தவிர, உங்கள் சுகத்துக்காக என்றால் இன்னும்கூட அதிகமாகக்

கொடுக்க முடியும். போகட்டும், விட்டுவிடுங்கள் அதை. இப்பொழுது விஷயம் இதுதான். இந்தக் கடனைத் தீர்க்க அவசிய மிருக்காது என்பதுதான் உங்கள் தந்தையின் அபிப்பிராயம். பார்க்கப் போனால் ஒரு விதமாகத் தீர்ந்துவிட்டதாகவே எண்ணுங்கள். என்ன தங்களுக்கு விளங்குகிறதா?' என்றான் ஸுரேசன்.

அசலா தலையை அசைத்து, விளக்கமற்ற குரலில், 'ஆமாம்' என்றாள்.

ஸுரேசன் மீண்டும், 'விஷயத்தை வியக்தமாகச் சொல்லுகிறேன். அதைப் பற்றி ஒன்றும் எண்ணிக்கொள்ளாதீர்கள். அவருக்கு ரூபாய் என்னமோ அவசியம் வேண்டும். தவிர, இவ்வளவு ரூபாயைக் கடன் வாங்கித் தீர்ப்பதற்கும் அவருக்கு வயதாகிவிட்டது என்று எண்ணுகிறேன். மேலும் என் தரப்பில் அதற்கு அவசியமுமில்லை. ஆனால் — சரி இதுதான் சுலபமாக ஆகுமே! நாளை நின்று மறுநாளுக்குள் தங்கள் மனோபாவத்தை அவரிடம் சொல்லிவிட்டால், பிறகு தகராறு ஒன்றுமே எழாது. என், செய்வீர்கள் அல்லவா?' என்றான்.

அசலா முன்போலவே தலைகுனிந்து அசையாமல் உட்கார்ந்திருந்தாள். ஸுரேசன் மீண்டும், 'பண ஆசையால் நீங்கள் அபிப்பிராயத்தை வெளியிடவில்லை. அதனால் தங்களிடம் எனக்கு மரியாதை அதிகரிக்கிறது; தவிர நீங்கள் உங்கள் அபிப்பிராயத்தைச் சொன்னால்கூட நானே கடைசியில் பயந்து பின்வாங்கிவிடுவேன். நான் செய்ய முடியாதது ஒன்றுமில்லை' என்று சொல்லி, எழுந்து நின்று கொஞ்சம் சிரித்துவிட்டு, மறுபடியும், 'இனி நான் சொல்லிக் கொள்வதற்கு ஒன்றுமில்லை. ஆயினும் போகும் போது ஒரு பிச்சை கேட்கிறேன் — என்னுடைய குற்றங்களை மறந்து விடுங்கள்!' என்று சொல்லிச் சற்று தயங்கி, 'நமஸ்காரம்.

கெட்ட காரியங்களைக் கப்பலேற்றிவிட்டு விடை பெற்றுக் கொள்ளுகிறேன். ஆனால் உண்மையில் நான் பைசாசனும் அல்ல. சரி, போகட்டும். நம்பிக்கை ஏற்படக்கூடிய வழி சற்றுக்கூடத் தென்படாதபோது நான் சொல்லுவதெல்லாம் வீண்தான்' என்று சொல்லி, தன் இரு கரங்களையும் எடுத்து நமஸ்காரம் செய்துகொண்டே ஸுரேசன் சட்டென்று வெளியே சென்றுவிட்டான்.

மெள்ள மெள்ள அவனுடைய காலடிச் சத்தம் படிகளில் கேட்டு மறைந்தது. அசலா அதைக் கேட்டாள். அதற்குப் பிறகு காரண மில்லாமல் அவள் கண்களில் கண்ணீர் பெருகலாயிற்று.

கேதார் பாபு அறையில் நுழைந்ததும், 'ஸுரேஷ்!' என்றார்.

அசலா சட்டென்று கண்களைத் துடைத்துக்கொண்டு, 'இப்பொழுதுதான் வெளியே சென்றார்' என்றாள்.

கேதார் பாபு ஆச்சரியத்துடன், 'அது ஏன்? என்னைச் சந்திக்காமலே சென்றுவிட்டானே! நாளை இங்கே சாப்பிடும் விஷயத்தைப் பற்றி அவன் போகும்போது நீ ஞாபகப்படுத்தினையா, இல்லையா?' என்றார்.

அசலா வெட்கமடைந்து, 'எனக்கு ஞாபகமில்லை, அப்பா!' என்றாள்.

'ஞாபகமில்லையா! பேஷ்!' என்று சொல்லி, கேதார் பாபு அருகேயிருந்த நாற்காலியில் செயலற்று உட்கார்ந்து விட்டார். பெண்ணின் அடங்கிய குரலால் அவர் மனத்தில் ஒருவிதமான சங்கை என்னமோ ஏற்பட்டது. ஆனால் மாலை நேர இருளில் அவளுடைய முகம் சரியாகத் தெரியாததால் அது நீடிக்கவில்லை.

'இந்த வயதான காலத்தில்கூட, எந்த வேலையை நானே செய்யவில்லையோ, அதில் ஒன்று இல்லாவிட்டால்

ஒன்று பிழை யிருந்தே தீரும். அந்த வேலையும் ஆகாது. போகிறேன், சமையற்காரனிடம் ஒரு கடிதம் எழுதி அனுப்புகிறேன். ஸுரேசன் வீட்டின் விலாசம் என்ன?' என்று சொல்லிக்கொண்டே அவர் எழுந்து நின்றார்.

'எனக்குத் தெரியாதே, அப்பா!' என்றாள் அசலா.

'அதுவும் தெரியாதா? என்ன சொல்லுகிறாய்!' என்று சொல்லிக்கொண்டே மறுபடியும் நாற்காலியில் உட்கார்ந்து விட்டார். ஆனால், அப்பொழுதே நிமிர்ந்து உட்கார்ந்து, வரண்ட குரலில், 'நீங்கள் என் கைகால்களை ஒடிக்கவேண்டு மென்றால் ஒடித்துவிடுங்கள், எனக்குத் தடுக்கவேண்டிய அவசியமில்லை. யாரொருவன் வார்த்தை அளவிலேயே இவ்வளவு ரூபாய் கொடுக்க ஒப்புக்கொண்டானே அவன் எந்த வகுப்பைச் சேர்ந்தவன் என்பதையாவது நீ யோசிக்க வேண்டும். அவனுடைய வீட்டு விலாசம்கூட நீ கேட்க வில்லையே? நீ எவ்வளவுக் கெவ்வளவு பெரியவளாகிக் கொண்டு வருகிறாயோ அவ்வளவுக் கவ்வளவு எப்படி மாறிக் வருகிறாய், அசலா!' என்று சொல்லி ஒரு பெருமூச்சு விட்டுக்கொண்டார்.

கடன் வலையில் சிக்கி, அதன் கஷ்டத்தால் தன் தந்தை தரித்திரத்துடன் நாட்களைக் கடத்திக்கொண்டு தன்னைக் காப் பாற்றிக்கொள்ள முயற்சி செய்துகொண்டிருக்கிற விஷயங்கள் யாவும் அசலாவுக்குத் தெரிந்துதான் இருந்தன. இந்த விஷயங்க ளெல்லாம் அவள் உள்ளத்தை வருத்திக்கொண் டிருந்தன. ஆனால் அவள் எல்லாவற்றையும் சகித்துக் கொண்டிருந்தாள். இப்பொழுதும், ஏதாவது சொல்லி அவருடைய கோபத்திற்கு எதிர்வாதம் செய்யவில்லை. ஆனால், அவள் மனத்தினுள் மிகுந்த லஜ்ஜையும், பச்சாத் தாபமும் அடைந்தாள். இதை அநுமானம் செய்து கேதார் பாபு சந்தோஷமடைந்தார்.

சமையற்காரன் விளக்கேற்றிவிட்டுச் சென்றான். கேதார் பாபு, 'மஹிமின் விஷயத்தில்கூட நீ ஒருநாளும் எந்த விஷயத்தையும் அறியவில்லை. சரி, அது நல்லதாயிற்று என்றே நினைத்துக்கொள். பகவான் எது செய்கிறாரோ அது நன்மைக்குத்தான். ஆனால், ஸுரேசன் சம்பந்தமாக அந்த விஷயங்களெல்லாம் ஒன்றுமில்லை. பாரேன், தெரியவில்லையா? கடவுளே கையைப் பிடித்து இவனைக் கொடுத்திருக்கிறார்!' என்றார்.

அசலா தலை நிமிர்ந்து, 'ஸுரேஷ் பாபுவிடம் நீங்கள் ரூபாய் கடன் வாங்க விரும்புகிறீர்களா, அப்பா?' என்றாள்.

கேதார் பாபுவின் பகவத் பக்தி சட்டென்று தடைபட்டுத் தயங்கி நின்றது. பெண்ணின் பக்கம் பார்த்து, 'ஆமாம் — இல்லாவிட்டால்,—கடன் மாதிரியல்ல; உனக்குத் தெரியாது அம்மா, ஸுரேசன் ரொம்ப நல்ல பையன். இந்தக் காலத்தில் இந்த மாதிரிப் பையன் லக்ஷத்தில் ஒருவன் தான் கிடைப்பான். கடனால் இந்த வீடு போய்விடக் கூடாது என்பது அவன் இச்சை. இருந்தால் உங்களுக்குத் தானே இருக்கப் போகிறது — நான் இன்னும் எவ்வளவு நாளைக்கு—தெரிந்ததா இல்லையா, அம்மா?' என்றார்.

அசலா பேசாமலிருந்தாள். கேதார் பாபு உற்சாகத்துடன், 'உனக்குத்தான் தெரியுமே, நான் எப்பொழுதும் வெளிப்படையாகப் பேசுகிறவன் என்பது. வாயில் ஒரு வார்த்தை, உள்ளே ஒரு வார்த்தை—இது என்னால் முடியாது. ஆகையால் இப்பொழுது விஷயமெல்லாம் தெரிந்த பிறகு, மஹிமின் கையில் பெண்ணை ஒப்புவிப்பதைவிட அவளைத் தண்ணீரில் தள்ளுவது மேல் என்று வெளிப்படையாகச் சொல்லிவிட்டேன். ஸுரேசனுக்கும் இதே அபிப்பிராயம் இருக்கும்பொழுது, அவனுடைய நண்பன் கலியாண விஷயம் வெகு தூரம் போய்விட்டது என்பதைச்

சொல்லியே தீரவேண்டும்; வெகு பேருக்குத் தெரிந்துவிட்டது. இந்த நிலைமையில் அந்தச் சம்பந்தத்தை அறுத்து விடுவதால் மாத்திரம் காரியம் முடிந்துவிடாது. மற்றொன்று செய்தே ஆகவேண்டும்; இல்லாவிட்டால் சமாஜத்தில் முகத்தைக் காட்டுவது கஷ்டமாகிவிடும். இல்லை, ஆனால் எதை வேண்டுமானாலும் சொல், பையன் என்னமோ ஸுரேசன்தான். இதற்காக அந்த மங்களமயனை கடவுளைப் பல தடவையும் நமஸ்காரம் செய்கிறேன்!' என்றார்.

தந்தையின் நமஸ்காரம் மீண்டும் ஒருமுறை தடையின்றி முடிந்த பிறகு, அசலா மெதுவாக, 'இவரிடம் இவ்வளவு ரூபாய் வாங்காமல் காரியம் நடக்காதா, அப்பா?' என்றாள்.

கேதார் பாபு சந்தேகத்தால் திடுக்கிட்டு, 'வாங்காமல் காரியம் நடக்காதா, இதன் அர்த்தம்? பேஷ்!' என்றார்.

'ஆனால், கடைசியில் நம்மால் தீர்க்க என்னமோ முடியாதே?'

'தீர்க்க வேண்டும் என்ற விஷயத்தை ஸுரேஷ்—' வயோதிகரான கேதார் பாபு தம் வார்த்தையை வருத்தத்தாலும், சம்சயத்தாலும், பூர்த்திசெய்ய முடியவில்லை. அவர் முகம் வெளுத்துவிட்டது. அசலா அந்த முகத்தைப் பார்த்து வருத்தமடைந்தாள். சட்டென்று, '"நாளை நின்று வந்து ரூபாய் கொடுத்துவிட்டுப் போகிறேன்" என்று அவன் சொல்லிவிட்டுப் போனான்' என்றார்.

'திருப்பிக் கொடுக்கும் விஷயம்—'

'இல்லை, அதொன்றையும் அவன் சொல்லவில்லை.'

'எழுதிக் கொடுக்கும் விவகாரம்?'

'இல்லை, இந்தப் பேச்சே இல்லை'!

'அதுதான் கேட்டேன்!'

'சரிதான்' என்று சொல்லி, அவர் சட்டென்று சந்தோஷத்தில் தடைபட்ட மூச்சை விடுத்து, நாற்காலியில் சாய்ந்து

கண்களை மூடி, காலைத் தூக்கி எதிரேயுள்ள மேஜையின்மீது போட்டுக்கொண்டார். ஆனந்தத்தாலும், நிம்மதியாலும் அவர் மனம் ஒரு கணத்திற்குள் சாந்தமடைந்தது. சிறிது நேரம் இம்மாதிரி இருந்துவிட்டுப் பிறகு காலை எடுத்து, ஆவலான குரலில், 'ஒருதரம் யோசித்துப் பாரம்மா! எங்கிருந்து, என்ன நடந்திருக்கிறது, பார்! இதில் அந்தச் சர்வ சக்திமானுன ஈச்வரனின் கை உனக்குத் தெளிவாகத் தெரியவில்லையா?' என்றார்.

அசலா பேசாமல் தந்தையின் முகத்தைப் பார்த்துக்கொண்டிருந்தாள். அவர் பதிலை எதிர்பாராமலே, 'நான் கண் முன்பு ஸ்பஷ்டமாகப் பார்க்கிறேன். அது அவருடைய கிருபைதான். உன்னிடம் நான் என்ன சொல்லுவேன் அம்மா! இரண்டு வருஷங்கள் ஆகின்றன — ஒரு நாள் கூட நான் நன்றாகத் தூங்கவில்லை. அவரைத்தான், அழைத்துக் கொண்டிருந்தேன். ஸுரேசனைக் கண்டதும், அவன் போன ஜன்மத்தில் என்னுடைய மகன் என்றே எனக்குத் தோன்றியது' என்றார்.

அசலா பேசாமல் உட்கார்ந்திருந்தாள். தந்தையின் குடும்பக் கஷ்ட நிலைமை அவளுக்குத் தெரிந்ததுதான். ஆனால் உள்ளுக்குள் அது இவ்வளவு தூரம் வரை சென்றுவிட்டதென்பது அவளுக்குத் தெரியாது. இரண்டு வருஷங்களுக்குப் பிறகு, இன்று, ஏகாக்கிர ஆராதனைக்குப் பின், தந்தையின் கஷ்டமான பிரச்னைகள் இவ்விதமாகக் கடவுளின் மங்களகரமான ஆசீர்வாதத்தால் திடீரென்று சற்று குறைந்துவிட்டன. ஆனால் அவளுக்குத் தன்னுடைய பிரச்னை ஒரேயடியாய் மிகுந்த சிடுக்குள்ளதாகக் காணப்பட்டது. ஸுரேசனிடமிருந்து ரூபாய் வாங்கும் விஷயமாக அப்பொழுது அவள் மனத்திற்குள் செய்த தீர்மானத்தை விட்டுவிட வேண்டியிருந்தது. தடைசெய்யும் விஷயத்தை அவளால் யோசிக்கக்

கூட முடியவில்லை. எது வேண்டுமானாலும் ஆகட்டும், தந்தை ரூபாய் வாங்கியே தீரவேண்டும்.

சாயங்கால உபாசனைக்காகக் கேதார் பாபு எழுந்து சென்றார். அசலா எல்லா விஷயங்களையும் ஆதியோடு அந்தமாக மனத்திற்குள் தெளிவாக ஆலோசனை செய்ய அங்கேயே உட்கார்ந்திருந்தாள்.

அன்று அகஸ்மாத்தாக அவளுடைய வாழ்க்கையின் சந்தி முனையில் அக்கம் பக்கமாக வந்து நிற்கும் இரு நண்பர்களில், ஒருவரைப் 'போ' என்று சொல்லி விடை கொடுத்தே தீர வேண்டும்,—இதில் சிறிதுகூடச் சந்தேகமில்லை. ஆனால், யாரை ? தன்னுடைய சந்தேகமற்ற நம்பிக்கையினால், எந்தக் கடமையின் ஆகர்ஷணத்தினாலோ சிந்தையற்று வருத்தமற்று உட்கார்ந்திருக்கும் மஹிமின் சாந்தமான முகத்தை நினைத்ததுமே, ஒரு பெரிய பெருமூச்சுடன் அசலாவின் கண்களும் கண்ணீரால் நிரம்பின. ஒரு நாளும் மஹிம் எந்த அபராதத்தையும் செய்யவில்லை. ஆயினும் 'போ' என்று சொன்னதுமே, அவன் பேசாமல் போய்விடுவான். இந்த வாழ்க்கையில் எந்தக் காரணத்தைக் கொண்டும் அவன் மறுபடி அவளுக்குக் குறுக்கே வரமாட்டான். எண்ண முடியாத அந்தக் கடைசி விடைகொடுக்கும் போதுகூட அவனுடைய காம்பீரியம் சிறிதுகூடக் கலங்காது. யாரையும் குற்றம் சொல்லமாட்டான், ஒரு சமயம் காரணம் கூட அறிய விரும்பமாட்டான். ரகசியமான ஆச்சரியத்தாலும் தீவிர வேதனையினாலும், ஸ்பஷ்டமற்ற ரேகைகள் அவன் முகத்தில் தென்படும் ; ஆனால் அவனைத் தவிர வேறு யாருக்கும் அவை கண்ணில் படா — என்பதை யெல்லாம் தெளிவாகத் தன் மனக் கண் முன் கண்டாள்.

அதன் பின் ஒரு நாள் ஸுரேசனுடன் அவளுக்கேற்படும் விவாக விஷயம் அவன் காதுவரை எட்டும். அந்தச்

சமயத்தில் தோன்றும் அதைரியம் க்ஷணத்தில் ஒரு பெரு மூச்சுடன் நின்றுவிடும்; இல்லாவிட்டால் ஒரு சிரிப்புடன் வேலையில் மனத்தை ஆழ்த்தும் — இவ் விஷயங்களைக் கற்பனை செய்ததும், அந்தத் தனி அறையில், அவளுடைய முகம் வெட்கத்தாலும் வெறுப்பினாலும் வாடியது.



# IX

**ப**த்துப் பதினைந்து தினங்கள் கழிந்தன. கேதார் பாபு இருந்த தினுசைப் பார்த்தால் அவருடைய வாலிப வயதில் கூட அவ்வளவு ஆனந்தம் இருந்திருக்காது. அன்று ஸினிமா பார்த்துவிட்டுத் திரும்பும் சமயம் வழியில் வட்டக் குளத்துக்கருகில் வந்ததும், அவர் வண்டியிலிருந்து இறங்கத் தயாராகிக்கொண்டு, 'ஸுரேஷ், நான் இங்கிருந்தே கால் நடையாக சமாஜத்திற்குச் செல்கிறேன். நீங்கள் வீட்டுக்குப் போங்கள்!' என்று சொல்லிக்கொண்டே, வண்டியிலிருந்து இறங்கி, கைத்தடியைச் சுழற்றிக்கொண்டே வேகமாகச் சென்றுவிட்டார்.

ஸுரேசன் அசலாவிடம், 'இப்பொழுதெல்லாம் உங்கள் அப்பா ரொம்ப சந்தோஷமாக இருக்கிறார்!' என்றான்.

அசலா அங்குமிங்கும் பார்த்துக்கொண்டிருந்தாள். 'ஆமாம், தங்கள் கிருபையால்' என்றாள்.

வண்டி தெருமுனை திரும்பியதும் அவர் காணப்படவில்லை. ஸுரேசன் அசலாவின் வலது கையைத் தன் கையில் எடுத்துக்கொண்டு, 'உனக்குத் தெரியாதா? இந்த வார்த்தைகளால் எனக்கு எவ்வளவு வேதனை ஏற்படுகிறது? இதற்காகத்தான் இப்படி அடிக்கடி சொல்லுகிறாயா, அசலா?' என்றான்.

அசலா ஒரு மெல்லிய சிரிப்புச் சிரித்துக்கொண்டு, 'இவ்வளவு பெரிய கிருபையை எப்பொழுதாவது மறப்பேனா? ஆகையால் அவ்வப்பொழுது ஞாபகப்படுத்து

கிறேன். தங்களுக்கு வேதனை உண்டாக்க வேண்டிச் சொல்லவில்லை!' என்றாள்.

ஸுரேசன் அவளது கையைச் சற்று கசக்கி, 'அதனால் தான் அந்த வேதனை என்னை அதிகம் புண்படுத்துகிறது' என்றான்.

'ஏன்?'

'இந்தக் கிருபையை ஞாபகப்படுத்தியதும் நீ உன் மனத்தில் பலம் அடைகிறாய் என்பதை நான் அறிவேன். இதைத் தவிர உன்னிடம் வேறு பற்றுதல்கள் ஒன்றுமில்லை. உண்மையாக இதுதானே? சொல்லேன்!' என்றான் ஸுரேசன்.

'சொல்லாவிட்டால்?'

'இஷ்டமில்லாவிட்டால் சொல்ல வேண்டாம். ஆனால் நீ என்னை "நீ" என்றுகூடச் சொல்ல முடியாதா?'

அசலாவின் முகம் வாடியது. தலை குனிந்தபடியே மெதுவாக, 'ஒரு நாள் சொல்லியே ஆகவேண்டும். அது தான் தங்களுக்குத் தெரியுமே!' என்றாள்.

அவளுடைய வாடிய முகத்தைக் கண்டு ஸுரேசன் ஒரு பெருமூச்சு விட்டுக்கொண்டு, 'அப்படித்தான் என்றால், இரண்டு நாள் முன்பே அம்மாதிரி சொல்வதில் என்ன தோஷம்?' என்றான்.

அசலா பதில் சொல்லவில்லை. எங்கோ கவனமாய் ரோட்டின் பக்கம் பார்த்துக்கொண்டிருந்தாள். ஒரு நிமிஷம் மௌனமாக இருந்துவிட்டு, ஸுரேசன் திடீரென்று, 'மஹிமுக்கு எல்லாம் தெரிந்துவிட்டதென்று நான் அறிகிறேன்' என்றான்.

அசலா திடுக்கிட்டு முகத்தைத் திருப்பினாள். அதுவரையில் ஸுரேசன் கையிலிருந்த தன் கையைச் சட்டென்று உருவிக்கொண்டு, 'தாங்கள் எப்படி அறிந்தீர்கள்?' என்றாள்.

அவளுடைய ஆத்திரமான குரல் ஸுரேசன் செவிக ளில் பளிச்சென்று கேட்டது. 'இல்லாவிட்டால், இவ் வளவு நாளாயிற்று, அவன் கட்டாயம் வந்திருப்பான். பதினைந்து பதினாறு தினங்கள் கழிந்துவிட்டனவே!' என்றான்.

அசலா தலையை யசைத்து, 'இன்றையும் சேர்த்துப் பத்தொன்பது நாளாகிறது. நல்லது, அப்பா அவருக்கு ஏதாவது கடிதம் எழுதியிருக்கிறாரா, தங்களுக்குத் தெரியுமா?' என்றாள்.

ஸுரேசன் சுருக்கமாக, 'இல்லை, எனக்குத் தெரியாது' என்றான்.

'அவர் ஊரிலிருந்து திரும்பி வந்துவிட்டாரா, இல்லையா, தங்களுக்குத் தெரியுமா?'

'இல்லை, அதுவும் தெரியாது.'

அசலா வண்டிக்கு வெளியே பார்த்துக்கொண்டே, மிருதுவான குரலில், 'அப்படியானால் விலாசம் கண்டு பிடித்து எல்லா விஷயங்களையும் பற்றி அப்பா அவருக்கு ஒரு கடிதம் எழுதிவிட வேண்டும். திடீரென்று ஒரு நாள் அவர் இங்கே வரவேண்டியதில்லை!' என்றாள்.

சிறிது நேரம்வரை இருவரும் மௌனமானார்கள். ஸுரேசன் மறுபடியும் ஒரு தரம் அவளுடைய மென் கரத்தைத் தன் கையில் எடுத்துக்கொண்டு, மெதுவாக, 'அசலா, நீ என்னிடம் ஒரு நாளும் சிரத்தை வைக்க முடி யாது என்பதை எண்ணும் பொழுதுதான் எனக்கு எல்லா வற்றையும்விடப் பெரும் துக்கம் ஏற்படுகிறது. நான் உன்னைப் பணத்தின் பலத்தினால் பிடுங்கிக்கொண்டதாகவே உனக்கு எப்பொழுதும் தோன்றும். என்னுடைய குற்றம்......'

அசலா சட்டென்று முகத்தைத் திருப்பி, அவனைத் தடுத்து, 'இம்மாதிரி வார்த்தைகளைச் சொல்லாதீர்கள்!

தங்கள் மேல் எந்த விதமான தோஷமும் கூற என்னால் முடியாது' என்று சொல்லி, சற்று நிறுத்தி மறுபடியும், 'பணத்தின் பலம் உலகத்தில் எங்கு மிருக்கிறது, இது தெரிந்த விஷயம் தான்; ஆனால் அந்த பலத்தினால் தாங்கள் காரியம் சாதித்துக் கொள்ளவில்லை. தந்தைக்குத் தெரியாமல் இருந்தாலும் இருக்கலாம்; ஆனால் நான் எல்லாவற்றையும் அறிந்தும்கூடத் தங்களுக்கு மரியாதை செய்யாவிட்டால் எனக்கு நரகத்தில் கூட இடம் கிடைக்காது!' என்றாள்.

எப்பொழுதுமே சாதாரண விஷயங்களில்கூட ஸுரேசன் மனம் உருகிவிடுவான். அசலாவின இந்தப் பிரியம் நிறைந்த வார்த்தைகளாலேயே அவன் கண்களில் கண்ணீர் வந்துவிட்டது. அந்தக் கண்ணீரை அவன் அசலாவின் இரு கரங்களையும் எடுத்தே துடைத்துக்கொண்டு, 'இந்த அபராதத்தின் - இந்த அநியாயத்தின் - பாரத்தை நான் அறிய வில்லை என்று நீ எண்ணவேண்டாம். ஆனால் நான் மனோதிடமற்றவன்! ரொம்ப மனோதிடமற்றவன்! இந்தத் துக்கத்தை மஹிம் சகித்துக்கொள்வான். ஆனால் என் உள்ளம் வெடித்து விடும்' என்று சொல்லிக்கொண் டிருக்கும்போதே, நடுவில் ஒரு கடினமான தாக்குதலைச் சமாளித்துக்கொண்டு, தழு தழுத்த குரலில், 'நீ என்னுடையவளாகமாட்டாய், வேறொருவ னுடையவ ளாவாய் என்பதை நான் நினைக்கவே முடியாது. உன்னை நான் அடையமாட்டேன் என்ற நினைவு வரும்போதே இந்த உலகம் எனக்குச் சுற்றுவது போலிருக்கிறது' என்றான்.

அப்பொழுதுதான் தெருவில் விளக்குகள் ஏற்றப்பட்டன. வண்டி தெருவில் நுழைந்ததும் விளக்கின் வெளிச்சம் ஸுரேசன் முகத்தில் விழுந்தது. அவனுடைய கண்களில் ஜ்வலிக்கும் கண்ணீரின்மேல் அசலாவின் பார்வை விழுந்தது. ஒரு நிமிஷக் கருணையினால் அவள் இதுவரை செய்யாத ஒரு காரியத்தைச் செய்தாள். குனிந்து ஸுரே

சன் கண்ணீரைத் துடைத்து, 'நான் தந்தையின் உத்தர வுக்கு மாருக நடக்கமாட்டேன். அவர் என்னைத் தங்களிடம் தானே ஒப்புவித்திருக்கிருர்!' என்ருள்.

ஸுரேசன் அசலாவின் கையைத் தன் கன்னத்துடன் சேர்த்து மாறி மாறி முத்தமிட்டுக்கொண்டே, 'இதுதான் எனக்குப் பெரிய வெகுமதி, அசலா! இதைவிட அதிகமாக நான் விரும்பவில்லை. ஆனுல் இதிலிருந்துகூட நீ என்னை ஏமாற்றிவிட வேண்டாம்!' என்ருன்.

வண்டி வீட்டு வாசலில் வந்து நின்றது. வண்டிக்காரன் கதவைத் திறந்துவிட்டு விலகி நின்ருன். ஸுரேசன் முதலில் இறங்கினுன். ஜாக்கிரதையாகக் கையைப் பிடித்து அசலாவை யும் இறக்கினுன். இறங்கியதுமே எதிரே மஹிம் நிற்பதை இருவரும் பார்த்தார்கள். பார்த்த கணமே இருவரும் கற் சிலை போல் அசைவற்று நின்ருர்கள்.

அடுத்த க்ஷணமே அசலா, விளங்காத ஒரு கூக்குர லுடன், ஏதோ ஒரு சத்தமிட்டுக்கொண்டு வேகமாகத் தன் கையை உருவிக்கொண்டு பின்னுல் நகர்ந்து நின்ருள்.

மஹிம் ஆச்சரியத்திஞல் பிரமை பிடித்தவனுய், 'ஸுரேஷ், நீ — இங்கே!' என்ருன்.

ஸுரேசன் வாயிலிருந்து முதலில் சத்தமே கிளம்ப வில்லை. அதன்பின் அவன், ஒரு தரம் மென்று விழுங்கிக் கொண்டு, தன்னுடைய வெளுத்த முகத்தில் ஒரு வரண்ட சிரிப்பை வரவழைத்துக்கொண்டு, 'பேஷ், மஹிம்! மறுபடி சந்திக்கவே யில்லை. என்ன விஷயம் சொல்லக்கூடாதா? எப்பொழுது வந்தாய்? வா, வா, மேலே போவோம்!' என்று சொல்லிக்கொண்டே அவன் அருகில் சென்று, அவன் கைகளை அசைத்துக்கொண்டே, வேடிக்கையாக, 'நல்ல வேடிக்கை செய் தார் இவள் தகப்பனுர்! அவர் போய்விட்டார் சமாஜத்திற்கு; இவளை வீட்டுக்குக் கொண்டு சேர்க்கும் பாரம் என்மேல்

விழுந்தது. போகட்டும் போ! ஒரு விதத்தில் நல்லதாகவே ஆய்விட்டது, இல்லாவிட்டால் மஹிமைச் சந்தித்திருக்கவே முடியாது. சொல், இவ்வளவு நாள் வீட்டில் என்ன செய்துகொண்டிருந்தாய்?' என்றான்.

'வேலை யிருந்தது' என்றான் மஹிம். ஆச்சரியத்தின் காரணமாக அசலாவுக்கு நமஸ்காரம் செய்யவேண்டும் என்ற ஞாபகம்கூட அவனுக்கு வரவில்லை.

ஸுரேசன் அவனை ஒரு தள்ளுத் தள்ளிக்கொண்டே, 'நல்ல ஆசாமிடா நீ! நாங்கள் கவலைப்பட்டுப் பட்டு ஓய்ந்து போனோம்! ஒரு கடிதங்கூடப் போடவில்லையே நீ? ஏன் நின்றுகொண்டிருக்கிறாய், மேலே வா!' என்று சொல்லி, அவனை ஒருவிதமாகப் பலவந்தமாகவே தள்ளிக்கொண்டு மேலே சென்றான். ஆனால் உட்காரும் அறையில் சென்று எல்லோரும் உட்கார்ந்த பொழுது அவன் திடீரென்று ஏற்படுத்திக்கொண்ட உற்சாகம்கூட ஒரேயடியாய்த் தடைப்பட்டது. விளக்கின் வெளிச்சத்தில் அவன் முகம் வாடியது நன்கு தெரிந்தது. இரண்டு மூன்று நிமிஷங்கள் வரையிலும் எதுவும் பேசவில்லை. மஹிம் ஒரு தடவை நண்பனின் பக்கமும், அசலாவின் பக்கமும் வெறித்த பார்வையுடன் பார்த்துவிட்டு, உலர்ந்த குரலில், 'மற்றப்படி எல்லாரும் சௌக்கியம் தானே?' என்றான்.

அசலா தலையை யசைத்துப் பதிலளித்தாள். ஆனால், நிமிர்ந்து அவன் பக்கம் பார்க்கவில்லை.

'நான் ரொம்ப ஆச்சரிய மடைந்துவிட்டேன். ஆனால் உங்களுக்கும் ஸுரேசனுக்கும் எப்படி அறிமுகம் ஏற்பட்டது?' என்றான் மஹிம்.

அசலா நிமிர்ந்து உயிரைக் கையில் பிடித்துக்கொண்டு, 'இவர் என்னுடைய தந்தையின் நாலாயிர ரூபாய்க் கடனைத் தீர்த்தார்' என்றாள்.

அவளுடைய முகத்தைப் பார்த்து, மஹிமின் வாயி லிருந்து, 'அப்புறம்?' என்ற வார்த்தைகள்தான் வெளி வந்தன.

'அப்புறம் நீங்கள் அப்பாவிடம் கேட்டுக்கொள்ளுங் கள்' என்று சொல்லி, சட்டென்று எழுந்து அசலா வெளியே சென்றுவிட்டாள்.

மஹிம் பிரமையடைந்து, சிறிது நேரம் உட்கார்ந் திருந்து, முடிவில் தனது நண்பனைப் பார்த்து, 'விஷயம் என்ன, ஸுரேஷ்?' என்றான்.

ஸுரேசன் உக்கிரமான பாவத்தில், 'உன்னைப் போல ரூபாயிலேயே எனக்கு உயிரில்லை. கண்யமுள்ள மனிதன் ஒருவன் ஆபத்தில் சிக்கி உதவி வேண்டினால் நான் என்ன செய்வேன் - போதும் இவ்வளவுதான் விஷயம். அவர் அதைத் தீர்க்க முடியாவிட்டாலும் அதில் குற்றம் ஒன்றுமில்லை என்று நான் எண்ணுகிறேன். ஆயினும் நீ என்னைக் குற்ற மிழைத்தவன் என்று எண்ணினால், ஒரு தரம் அல்ல, நூறு தரமும் எண்ணிக்கொள், எனக்கு ஒன்றும் தடையில்லை!' என்றான்.

நண்பனின் இந்தச் சம்பந்தமற்ற வர்ணனைகளையும் அவன் பேசும் விசித்திர முறையையும் கண்டு மஹிம் உண்மையில் ஊமை போல் பார்த்துக்கொண்டிருந்தான். கடைசியில், 'திடீரென்று நான் உன்னைக் குற்றவாளி என்று எண்ண என்ன இருக்கிறது? இதன் கருத்து ஒன்றும் எனக்கு விளங்க வில்லையே, ஸுரேஷ்! தயவு செய்து கொஞ்சம் விட்டுச் சொல் லேன். சொல்லாவிட்டால், என்னமோ என்றால் அறிந்து கொள்ள முடியாது' என்றான்.

ஸுரேசன் முன்போலவே வரண்ட குரலில், 'எதை விட்டுச் சொல்வேன்? சொல்வதற்குத்தான் இன்னும் என்ன இருக்கிறது?' என்றான்.

'அது சரிதான். நான் அன்று ஊருக்குப் போன பொழுது இவர்களை உனக்குத் தெரியாது. இதன் மத்தியில் எப்படி இவ்வளவு நெருங்கிய பழக்கம் ஏற்பட்டுவிட்டது? பிரம்ம சமாஜக் குடும்பத்தின் ஆபத்துக்கு நாலாயிர ரூபாய் கொடுக்கும் உதார குணம் உனக்கு எங்கிருந்து வந்தது? இவைகளை மாத்திரம் எனக்கு நீ விளக்கினால் நான் கிரு தார்த்தனாவேன், ஸுரேஷ்!' என்றான் மஹிம்.

'அது வாஸ்தவம். ஆனால் பேசிக்கொண்டிருக்க எனக்கு இப்பொழுது அவகாசமில்லை. நான் இப்பொழுதே போகவேண்டும். இதைத் தவிர கேதார் பாபுவிடமே கேட்டுக்கொள்வதுதானே, அவர் எல்லாவற்றையும் சொல்ல உன்னை எதிர்பார்த்துக்கொண் டிருக்கிறார்!' என்றான்.

'சரிதான்' என்று சொல்லி, மஹிம் எழுந்து நின்று, 'கேட்பதற்கு ரொம்ப ஆவலாக இருக்கிறது. ஆனால் அவருக் காக உட்கார்ந்து வழிபார்த்துக்கொண்டிருக்க எனக்கு இப் பொழுது சமயமில்லை. நான் போகிறேன்!' என்றான்.

ஸுரேசன் அசைவற்று உட்கார்ந்திருந்தான். ஒன்றும் பேசவில்லை.

மஹிம் வெளியே வந்தபோது, எதிரே உள்ள கைப் பிடியைப் பிடித்துக்கொண்டு தன் பக்கமே பார்த்துக்கொண்டு அசலா இருளில் நிற்பதைக் கண்டான். ஆனால் அவள் அருகே வந்து பேசச் சற்றும் முயற்சி செய்யாததைக் கண்ட பொழுது, அவனும் பேசாமல் மெள்ள மெள்ளப் படிகளி லிருந்து கீழே இறங்கினான்.

# X

முக்கியமான சில மருந்துகளை வாங்குவதற்காக மஹிம் கல்கத்தா வந்திருந்தான். ஆகையால் இரவு வண்டியிலேயே ஊருக்குச் சென்றுவிட்டான். ஸுரேசன் விடுதிக்குச் சென்று தேடினான். அவன் அங்கு வரவேயில்லை என்பதைத் தெரிந்து கொண்டான். நாலைந்து நாட்களுக்குப் பிறகு ஒரு நாள் மாலை கேதார் பாபுவின் அறையில் இதைப் பற்றிய சர்ச்சை தான் நடந்துகொண் டிருந்தது. கேதார் பாபுவுக்கு ஸினிமா பார்க்கவேண்டு மென்று இப்பொழுதெல்லாம் ஒரு புது உற்சாகம்; டீ அருந்திய பிறகு அவர்கள் உலாவப் போவார் கள். கீழே ஸுரேசன் வண்டி நின்றுகொண்டிருந்தது. அதற்குள் திடீரென்று அபசகுனம் போல மெள்ள மெள்ளக் கதவின் அருகில் வந்து நின்றான் மஹிம்.

எல்லோரும் தலைநிமிர்ந்து பார்த்தார்கள், எல்லோரு டைய முகபாவத்திலும் ஒருவிதமான மாறுதல் காணப் பட்டது.

கேதார் பாபு தம் வரண்ட முகத்தில் சிரிப்பை வர வழைத்துக்கொண்டு, அவனுக்கு வந்தனம் செய்து, 'வா, மஹிம்! எல்லாம் சௌக்கியம்தானே ?' என்றார்.

மஹிம் நமஸ்காரம் செய்து உள்ளே சென்று உட்கார்ந் தான். ஊரில் அவ்வளவு நாள் தங்கக் காரணம் என்ன என்று கேட்கப்பட்ட பொழுது, 'முக்கியமான வேலை இருந்தது' என்ற பதிலைத்தான் சொன்னான். ஸுரேசன் மேஜையின் மேலிருந்த அன்றைப் பத்திரிகையை எடுத்துப் படிக்க

லானுன். அசலா பக்கத்து நாற்காலியின் மேலிருந்த தன்னுடைய ஊசி, வர்ண நூல் இவைகளை எடுத்துக்கொண்டு, பூவேலை செய்யலானுள். ஆகையால் தனியாகக் கேதார் பாபுவிடம்தான் சம்பாஷணை நடக்கலாயிற்று.

சட்டென்று ஒருதரம் அசலா எழுந்து வெளியே சென்று ஒரு நிமிஷத்திற் கெல்லாம் திரும்பி வந்தாள். இதற்கு ஒரு கணத்திற்குப் பிறகு தலைக்கு மேலிருந்த பங்கா அசையலாயிற்று. திடீரென்று காற்று வரவே கேதார் பாபு சந்தோஷமடைந்து, 'பார், இவ்வளவு நேரத்திற்குப் பிறகு பங்கா இழுப்பவனுக்குத் தயவு வந்தது!' என்றூர்.

ஸுரேசன் கூர்மையும், வக்கிரமும் கொண்ட பார்வையுடன் பார்த்தான். மஹிமின் நெற்றியில் வியர்வைத் துளிகள் ஜ்வலித்தன. ஏன் அசலா எழுந்து சென்றுள், ஏன் திடீரென்று பங்கா இழுப்பவனுக்குத் தயவு வந்தது—இவைகளெல்லாம் அவன் மூளையில் மின்னல் போல் ஓடின. கேதார் பாபு சந்தோஷமடைந்த அதே காற்றினுல் அவன் உடல் எரியலாயிற்று. சட்டென்று அவன் கடிகாரத்தைப் பார்த்துவிட்டு, அவசரமான குரலில், 'மணி ஐந்து அடித்துவிட்டது. இனி தாமதம் செய்தால் ஒன்றும் நடக்காது, கேதார் பாபு!' என்றுன்.

சம்பாஷணையை நிறுத்தி, கேதார் பாபு டீ கொண்டுவரச் சத்தமிட்டதும், சமையற்காரன் எல்லாச் சாமான்களுடனும் தயாராக வந்தான். ஊசி நூல்களை வைத்துவிட்டு, அசலா இரண்டு கோப்பை டீ தயார்செய்து, ஸுரேசன் முன்பும், தந்தையின் முன்பும் வைத்தாள்.

'நீ சாப்பிடவில்லையா, அம்மா?' என்றூர் கேதார் பாபு.

அசலா தலையை அசைத்து, 'இல்லை அப்பா, ரொம்பச் சூடாக இருக்கிறது!' என்றுள்.

திடீரென்று அவர் பார்வை மஹிமின் பக்கம் சென்றது. அவர் ஆத்திரத்துடன், 'இதென்ன? மஹிமுக்குக் கொடுக்க வில்லையா? நீ டீ சாப்பிட மாட்டாயா, மஹிம்?' என்றார்.

அவன் பதில் சொல்லு முன்பே அசலா அவன் பக்கம் பார்த்து, சுபாவமான மிருதுவான குரலில், 'வேண்டாம், இவ்வளவு சூட்டில் நீங்கள் டீ குடிக்கவேண்டிய அவசிய மில்லை, தவிர இந்தச் சமயம் உங்களுக்கு டீயை சகிக்கவும் முடியாது!' என்றாள்.

தன் மார்பிலிருந்து சகிக்க முடியாத பாரமுள்ள ஒரு மலையை மந்திர சக்தியினால் யாரோ எடுத்தெறிந்ததைப் போன்ற உணர்ச்சி மஹிமுக்கு ஏற்பட்டது. அவனால் ஒன்றும் பேசமுடியவில்லை. புரியாத ஓர் ஆச்சரியத்துடனும் அசங்காத பார்வையுடனும் பார்த்துக்கொண்டிருந்தார் கேதார் பாபு.

'கொஞ்சம் இருங்கள், நான் எலுமிச்சம் பழம் எடுத்து வந்து ஷர்பத் செய்து தருகிறேன்' என்று சொல்லி, அசலா அவனுடைய சம்மதத்தை எதிர்பாராமலே, அறையி லிருந்து வெளியே சென்றாள். ஸுரேசன் மறுபக்கம் திரும்பி, பொம்மை போல் அமர்ந்து டீயை என்னமோ குடித் துக்கொண்டிருந்தான்; ஆனால் அதனுடைய ஒவ்வொரு துளியும் அவன் முகத்தில் பொறுக்க முடியாத ஒரு கசப்பை வெளியிட்டது.

டீ சாப்பிடுவதை முடித்துவிட்டு, கேதார் பாபு மளமள வென்று ஆடை அணிந்து, தயாராக வந்தார். அசலா தன் இடத்தில் அமர்ந்து ஏகாக்ர சித்தத்துடன் பூவேலை செய்து கொண்டிருந்தாள். அவர் ஆத்திரமும் ஆச்சரியமும் அடைந்து, 'இன்னும் உட்கார்ந்து பூப் போட்டுக்கொண் டிருக்கிறாயே, கிளம்பவில்லையா?' என்றார்.

அசலா தலைநிமிர்ந்து சாந்தமாக, 'நான் வரவில்லை, அப்பா!' என்றாள்.

'வரவில்லையா! இதென்ன இது?'

'இல்லை அப்பா, இன்று நீங்கள் போங்கள். எனக்குப் பிடிக்கவில்லை' என்று சொல்லி, சற்றே சிரித்தாள்.

ஸுரேசன் தன்னுடைய கர்வத்தையும், மறைமுகமான கோபத்தையும் அடக்கிக்கொண்டு, 'வாருங்கள்! கேதார் பாபு நாம் செல்வோம். அவர்களுக்குப் பிடிக்காவிட்டால் அதிக மாகச் சொல்லுவதற்கு என்ன அவசிய மிருக்கிறது?' என்றான்.

கேதார் பாபு அவன் பக்கம் பார்த்ததும், அவன் உள்ளே பொங்கும் கோபத்தை அறிந்துகொண்டார். பெண்ணிடம், 'உனக்கு என்ன உடம்பு ஏதாவது அசௌகரியமா?' என்று கேட்டார்.

'இல்லை அப்பா, உடம்புக்கு அசௌகரியம் ஏன் வர வேண்டும்? நான் நன்றாகத்தான் இருக்கிறேன்!' என்றாள் அசலா.

ஸுரேசன் மஹிமின் பக்கம் பாராமல் திரும்பி நின்றுகொண்டிருந்தான். அவனுடைய முக சலனத்தைப் பார்க்க முடியவில்லை. 'நாம் போகலாம் வாருங்கள், கேதார் பாபு! அவர்களுக்கு வீட்டில் ஏதாவது முக்கியமான வேலை யிருக்கும். கட்டாயமாக அழைத்துக்கொண்டு போகவேண் டிய அவசிய மென்ன?' என்றான்.

கேதார் பாபு கடுமையான குரலில், 'வீட்டில் உனக்கு வேலை இருக்கிறதா அசலா?' என்றார்.

அசலா தலையை அசைத்து, 'இல்லை!' என்றாள்.

கேதார் பாபு சட்டென்று இரைந்து, 'சொல்லுகிறேன், வா! சொல்வதைக் கேட்கமாட்டாயா பிடிவாதக்காரி!' என்றார்.

அசலாவின் கையிலிருந்த பூவேலை வட்டம் நழுவிக் கீழே விழுந்தது. அவள் வருத்தம் நிரம்பிய முகத்துடன், இரு கண்களையும் விழித்து, முதலில் ஸுரேசன் பக்கமும்,

பிறகு தந்தையின் பக்கமும் பார்த்துவிட்டு, சட்டென்று முகத்தைத் திருப்பிக்கொண்டு, வேகமாக எழுந்து வெளியே சென்றுவிட்டாள்.

ஸுரேசன் முகம் கறுத்தது. 'தாங்கள் ஒவ்வொரு விஷயத்திலும் பலவந்தப்படுத்துகிறீர்கள். ஆனால் என்னால் இப்பொழுது தாமதிக்க முடியாது. உத்தரவளித்தால் செல்லுகிறேன்!' என்றான்.

கேதார் பாபு தம்முடைய கண்யமற்ற நடத்தையால் மனத்திற்குள் வெட்கமடைந்திருந்தார். ஸுரேசன் வார்த்தைகளால் அவருக்குக் கோபம் வந்தது. ஆனால் கோபம் மஹிமின் தலையில் போய் விழுந்தது. அவன் மிக்க வருத்தத்துடன் கலங்கி எழுந்திருக்க விரும்பினான். இதற்குள் கேதார் பாபு, 'உனக்கு ஏதாவது அவசியமான வேலை இருக்கிறதா, மஹிம்?' என்றார்.

மஹிம் தன்னைச் சமாளித்துக்கொண்டு எழுந்து நின்று 'இல்லை!' என்றான்.

கேதார் பாபு புறப்படுவதற்குத் தயாராகி, 'அப்படியானால்—நாங்கள் கொஞ்சம் அவசரமாக இருக்கிறோம். இன்னொரு நாளைக்கு வந்தால்—' என்றார்.

'ஆஹா, வருகிறேன். ஆனால் வருவதற்கு ஏதாவது முக்கியமான அவசிய மிருக்கிறதா?' என்றான் மஹிம்.

கேதார் பாபு ஸுரேசனுக்குக் கேட்கும்படி, 'எனக்காக அவசியம் ஒன்றுமில்லை. ஆனால் — ஆமாம் — நீ அவசியமென்று நினைத்தால் வா, இரண்டொரு விஷயங்களைப் பற்றி ஆலோசிக்கலாம்' என்றார்.

மூவரும் வெளியே சென்றார்கள். கீழே வந்ததும், ஸுரேசன் சற்றும் கவனியாமல், கேதார் பாபுவை அழைத்துக்கொண்டு வண்டியில் சென்று அமர்ந்தான். வண்டிக்காரன் வண்டியை ஓட்டினான். மஹிம் சற்று தூரம் சென்

றுமே இல்லேயோ, பின்னுலிருந்து தன் பெயரைச் சொல்லி யாரோ கூப்பிடுவதைக் கேட்டு நின்று திரும்பிப் பார்த்தான். கேதார் பாபுவின் சமையற்காரன் நடுங்கிக்கொண்டே வந்து, ஒரு காகிதத் துண்டை அவன் கையில் கொடுத்தான். அதில் பென்சிலால் 'அசலா' என்றுதான் எழுதியிருந்தது. 'கூப்பிடுகிருர்கள்!' என்றுன் சமையற்காரன்.

திரும்பி வந்து படியில் கால் வைத்ததும் எதிரே அசலா நிற்பதைக் கண்டான் மஹிம். அவளுடைய கண்ணிமைகள் அப்பொழுதும் நனேந்தே யிருந்தன. அருகே வந்ததும் அவள், 'உங்களுடைய அந்தக் கசாப்புக்கடை நண்பர் என் கழுத்தை அறுக்க விட்டுவிடப் போகிறீர்களா நீங்கள்? உங்களிடம் இவ்வளவு நன்றிகெட்டதனமாக நடக்கும் அவர் கையில், என்ன எண்ணிக்கொண்டு என்னே ஒப்புவிக்கிறீர்கள்?' என்ற போதே, அவள் கண்களில் கண்ணீர் பொங்கியது.

மஹிம் பிரமித்து நின்றுகொண்டிருந்தான். இரண்டொரு நிமிஷத்திற்குப் பிறகு அசலா கண்ணீரைத் துடைத்துக்கொண்டு, 'வெட்கப்படுவதற்கு எனக்கு இது சமயமில்லே. பார்க்கலாம் உங்களுடைய வலது கையை!' என்று சொல்லிக்கொண்டே, அவளே மஹிமின் வலது கையைத் தன் பக்கம் இழுத்து, தன் விரலிலிருந்த பொன் மோதிரத்தைக் கழற்றி அவன் விரலில் அணிவித்துக்கொண்டே, 'இனி என்னுல் யோசிக்க முடியாது. இனி நீங்கள் என்ன செய்ய வேண்டுமோ செய்துகொள்ளுங்கள்!' என்று மஹிமுக்கு நமஸ்காரம் செய்தாள். பிறகு எழுந்து தன் அறைக்குச் சென்றுள்.

மஹிம் நல்லது கெட்டது ஒன்றும் சொல்லவில்லே. வெகுநேரம் வரை அப்படியே பேசாமல் நின்றிருந்தான். பிறகு மெள்ள இறங்கி வெளியே சென்றுன்.

## XI

சாயங்காலம் தலை குனிந்துகொண்டு தன் விடுதியை நோக்கி மெல்லச் சென்றுகொண் டிருக்கும் மஹ்மின் முகத்தைப் பார்த்தவர்கள், அப்பொழுது அவனுடைய உயிர் துன்பத்தினால் வெளியே செல்ல அவன் ஹிருதயச் சுவரில் துவாரம் செய்வதில் முனைந்திருந்தது என்று சொல்லி விட முடியாது. ஸுரேசன் எப்படி இங்கே வந்தான், எப்படி இவ்வளவு நெருங்கிய பழக்கம் ஏற்பட்டது,-இந்தச் சிறிய பெரிய விஷயங்களை என்னமோ அவன் அறிய முடியவில்லை. ஆனால் உண்மை விஷயம் அவனுக்கு விளங்காமலில்லை. கேதார் பாபுவை அவன் அறிவான். எங்கிருந்து அவருக்கு ரூபாயின் வாடை வருகிறதோ அங்கிருந்து அவர் முகம் திருப்பமாட்டார் என்ற விஷயத்தில் அவனுக்குச் சற்றும் சந்தேகமில்லை. ஸுரேசனையும் அவன் சிறு வயதிலிருந்தே பல விதத்திலும் பார்த்து வந்திருக்கிறான். தெய்வ வசமாகத் தான் விரும்புவதை அடைய அவன் எதைக் கொடுக்க முடியாது என்பதைக் கற்பனை செய்வதுகூடக் கடினம் இல்லை. ரூபாய் ஒரு பெரிய விஷயமல்ல — எப்பொழுதுமே அவனுக்கு அது துச்சம் தான். ஒரு நாள் மஹிமைக் காப்பாற்றுவதற்கு முங்கேரின் கங்கையில் தன்னுடைய உயிரைக்கூடப் பொருட்படுத்தாது இறங்கினான். அவன் இன்று, வேறொரு காதலின் பலமான மோகத்தினால், அதே மஹிமின் பக்கம் முகம் நிமிர்ந்து

பார்க்காவிட்டால் தான் அவன்மீது என்ன குற்றம் சொல்ல முடியும்? ஆகையால் இந்தச் சம்பவத்தை, உள்ளத்தைக் குத்தும் துக்க சம்பவமாக எண்ணுவதைத் தவிர, வேறு யார் பேரிலும் அவன் குற்றம் சுமத்தவில்லை. ஆனால் இவ்வளவு எதிர்ப்பும் பலமான சக்திகளும் மூண்டு எழுந்திருப்பதை உடைத்துக்கொண்டு, அசலா தன்னிடம் வருவாள் என்று அவனுக்கு நம்பிக்கையில்லை. ஆகையால் அவளுடைய கடைசி வார்த்தையும், கடைசிச் செய்கையும் கண நேரம் சஞ்சலப்படுத்தியதைத் தவிர மஹிமுக்கு மற்றப்படி உண்மையாக யாதொரு நம்பிக்கையையும் ஏற்படுத்தவில்லை. அந்த மோதிரத்தை அடிக்கடி பார்த்தும்கூட அவனுக்குச் சற்றும் நிம்மதி ஏற்படவில்லை. ஆயினும் இதற்கு ஒரு முடிவு ஏற்பட வேண்டியது ரொம்ப அவசியம். இம்மாதிரி அவர்கள் தன்னை ஏமாற்றிக் கொண்டே இனி ஒரு க்ஷணம் கூடக் கழிக்க முடியாது. எது ஆனாலும் ஆகட்டும். இதற்கு ஒரு முடிவை அவன் செய்யவே வேண்டும். இந்தத் தீர்மானத்தை உறுதிப் படுத்திக்கொண்டே, அன்றிரவு எட்டு மணிக்குத் தன்னுடைய தரித்திர விடுதிக்கு வந்து சேர்ந்தான்.

மறுநாள் பிற்பகல் கேதார் பாபுவின் வீட்டுக்குச் சென்ற பொழுது, எல்லோரும் அப்பொழுதுதான் வெளியே சென்றார்கள், ஏதோ ஓர் அழைப்பு-என்று கேள்விப் பட்டான். அதற்கு மறுநாள் மறுபடியும் போனான். அப் பொழுதும் சந்திக்க முடியவில்லை. 'எல்லோரும் ஸினிமா பார்க்கப் போயிருக்கிறார்கள்; திரும்பி வர இரவு வெகு நேரமாகும்' என்றான் சமையற்காரன். 'எல்லோரும்' என்பதில் யார் யார் என்பது கேட்காமலேயே அவனுக்கு விளங்கிவிட்டது. அவமானமும், கர்வமும் எவ்வளவு பெரியவைகளாக வேண்டுமானாலும் இருக்கட்டும். தொடர்ந் தாற்போல் இரண்டு நாள் திரும்பி வருவதே அவன் போன்ற

மனிதர்களுக்குப் போதுமானது; ஆனால், கையிலிருந்த மோதிரம் அவனை அவனுடைய விடுதியில் தங்க விடவில்லை. மூன்றும் நாள் அவனை நெட்டித் தள்ளி அனுப்பியது. அன்று, 'பாபு வீட்டில் இருக்கிறார். மேல் அறையில் டீ அருந்திக் கொண்டிருக்கிறார்' என்று கேள்விப்பட்டான்.

மஹிமை வாசற்படி அருகே கண்டதும், கேதார் பாபு முகம் நிமிர்ந்து கம்பீரமான குரலில், 'வா, மஹிம்!' என்று மாத்திரம் சொன்னார்.

மஹிம் கையெடுத்து மௌனமாக நமஸ்காரம் செய்தான்.

தூரத்தில் திறந்திருந்த ஜன்னலருகில் ஒரு சோபாவில் அடுத்தடுத்து ஸுரேசனும் அசலாவும் அமர்ந்திருந்தார்கள். அசலாவின் மடியில் படங்கள் நிறைந்த பெரிய புஸ்தகம் ஒன்றிருந்தது. இருவரும் சேர்ந்து படம் பார்த்துக்கொண்டிருந்தார்கள். ஸுரேசன் ஒரு கணம் தலையெடுத்துப் பார்த்துவிட்டு மீண்டும் படம் பார்ப்பதில் ஈடுபட்டான்; ஆனால், அசலா தலை நிமிர்ந்து பார்க்கவே யில்லை. அவளுடைய குனிந்திருந்த முகம் தெரியாதது மாத்திரமல்ல. அவள் ஒரே ஆழ்ந்த கவனத்துடன் புஸ்தகத்தின் பக்கமாய்க் குனிந்திருந்ததில், தந்தையின் குரலும், வந்தவனுடைய காலடிச் சத்தமும் அவள் காதிலேயே விழவில்லையோ என்று யாராவது எண்ணினால், அதில் ஆச்சரியம் ஒன்றுமில்லை.

மஹிம் அறையில் நுழைந்து ஒரு நாற்காலியை இழுத்துப் போட்டுக்கொண்டு அமர்ந்தான். கேதார் பாபு வெகு நேரம் வரை வேறொன்றும் பேசவில்லை. அவர் கொஞ்சம் கொஞ்சமாக டீ குடித்துக்கொண்டிருந்தார். கோப்பை காலியானதும் மேற்கொண்டு அவர் சும்மாயிருப்பது அசந்தர்ப்பமாகப் போய்விட்டது. அப்பொழுது அவர் கோப்பையைக் கீழே வைத்துவிட்டு, 'இப்பொழுது நீ என்ன செய்துகொண்டிருக்கிறாய்? உன்னுடைய சட்டப் பரீட்சையின் "ரிசல்ட்"

வர இன்னும் ஒரு மாதம்தான் இருக்கிறது போல் தெரிகிறது' என்றார்.

'ஆமாம்' என்று மாத்திரம் சொன்னான் மஹிம்.

'"பாஸ்" ஆகிவிட்டதாக வைத்துக்கொள். நீ தேறி விடுவாய், அதில் சந்தேகமில்லை. ஆனால் கொஞ்ச நாள் "ப்ராக்டீஸ்" செய்து கையில் கொஞ்சம் ரூபாய் சேர்த்துக் கொள்ளாமல் வேறு பக்கம் கவனம் செலுத்த முடியாது. ஏன், ஸுரேஷ், மஹிமின் குடும்ப நிலைமை அவ்வளவு சௌகரியமில்லை என்று கேள்விப்பட்டோம் அல்லவா?' என்றார்.

ஸுரேசன் பேசவில்லை. மஹிம் சற்று சிரித்துக் கொண்டே, மெதுவாக, '"ப்ராக்டீஸ்" செய்ததுமே கையில் ரூபாய் வந்துவிடும் என்றும் நிச்சயமில்லை!' என்றான்.

கேதார் பாபு தலை அசைத்துக்கொண்டே, 'இல்லை, அது ஒன்றுமில்லை, கடவுள் சித்தம். ஆனால் முயற்சி செய்தால் எந்த வேலையும் அசாத்தியமானதல்ல. நம்முடைய சாஸ்திரக் காரர்கள் "புருஷ சிம்மம்" என்று சொல்லியிருக்கிறார்கள்; நீ அதே மாதிரி புருஷ சிம்மம் ஆகவேண்டும். வேறு எந்தப் பக்கமும் கவனம் செலுத்த வேண்டாம். அதற்குப் பிறகு சம்ஸார தர்மம்—இல்லாவிட்டால் அது மஹா பாபம்!' என்று ஸுரேசன் பக்கம் பார்த்து, 'என்ன ஸுரேஷ், குழந்தைகளுக்கு நல்ல சிட்சை அளிக்க முடிவதில்லை. அவை களைப் போஷிக்க முடிவதில்லை. இதனால்தானே ஹிந்துக்கள் அதோகதி அடைந்து வருகிறார்கள்? பிரம்ம சமாஜிகளான நாம் நல்ல திருஷ்டாந்தங்கள் காட்டாவிட்டால், நாகரிக உலகத் தில் நாம் யார் முன்பும் முகம் காட்ட முடியாது. சரிதானா, இல்லையா? என்ன சொல்லுகிறாய், ஸுரேஷ், நீ?' என்றார்.

ஸுரேசன் முன்போலவே மௌனமாக இருந்தான். மஹிம் உள்ளுக்குள் நிலைமையைச் சகிக்க முடியாதவனாய்,

'தங்கள் உபதேசங்களை ஞாபகத்தில் வைத்துக்கொள்ளு கிறேன். ஆனால் இதைச் சொல்லுவதற்குத்தான் என்னைக் கூப்பிட்டிருந்தீர்களா?' என்றான்.

கேதார் பாபு அவனுடைய மனோபாவத்தை அறிந்து கொண்டு, 'இல்லை, இதற்கு மாத்திரமல்ல, இன்னும் கூட விஷயங்கள் இருக்கின்றன, ஆனால் — ' என்று சொல்லி எதிரேயுள்ள சோபாவின் பக்கம் பார்த்தார்.

ஸுரேசன் எழுந்து நின்று, 'நாங்கள் சற்று நேரம் அடுத்த அறையில் இருக்கிறோம்' என்று சொல்லி, சற்று குனிந்து அசலாவின் மடியிலிருந்த புஸ்தகத்தை எடுத்துக் கொண்டான். ஆனால் அவனுடைய சைகை அசலாவின் தரப்பில் பலனற்றுப் போயிற்று. அவள் எப்படி உட்கார்ந் திருந்தாளோ அப்படியே உட்கார்ந்திருந்தாள். எழுந்திருப்ப தற்குத் துளிகூட முயற்சிக்கவில்லை. கேதார் பாபு அசலாவின் பக்கம் பார்த்து, 'நீங்கள் இருவரும் சற்று நேரம் அந்த அறையில் இருங்கள். நான் மஹிமிடம் கொஞ்சம் பேச வேண்டும்' என்றார்.

அசலா நிமிர்ந்து தந்தையின் முகத்தைப் பார்த்து, 'நான் இருப்பேன், அப்பா!' என்றாள்.

'நல்லது, சரிதான், நான் போகிறேன்' என்று சொல்லி, ஸுரேசன், ஒரு தினுசாகக் கோபித்துக்கொண்டு, கையிலிருந்த புஸ்தகத்தை அசலாவின் மடியில் போட்டு விட்டு, படபடப்புடன் அறையினின்றும் வெளியே சென் றான்.

பெண்ணின் இந்த மாதிரியான பிடிவாதத்தால் கேதார் பாபு சந்தோஷமடையவில்லை என்பதை அவர் தன்னுடைய முகபாவத்தால் நன்கு வெளிக்காட்டினார்; ஆனால் பிடிவாதம் செய்யவில்லை. சிறிது நேரம் விறைத்த முகத்துடன் உட்கார்ந் திருந்துவிட்டு, பிறகு, 'மஹிம், நான் உன்னிடம் கோபமாக

இருப்பதாக நீ எண்ண வேண்டாம். உன்னிடம் எனக்குப் போதுமான சிரத்தை இருக்கிறது. அதனால் நட்பின் முறைமையில் உபதேசம் செய்கிறேன். இந்தச் சமயம் எந்த விதமான பொறுப்பையும் தலைமேல் ஏற்றுக்கொண்டு நீ உன்னைக் கையால் ஆகாதவனாகச் செய்துகொள்ள வேண்டாம். உன்னை மேன்மை செய்துகொள்; உன்னைச் சாமர்த்தியமுள்ளவனாகச் செய்துகொள். அதன் பிறகு பொறுப்புக்களை ஏற்கப் போதுமான அவகாச மிருக்கிறது' என்றார்.

மஹிம் முகத்தைத் திருப்பி ஒரு தரம் அசலாவின் பக்கம் பார்த்தான். கண்கள் சந்தித்ததும் அவள் முகம் கவிழ்ந்தாள். அப்பொழுது மஹிம் அவள் தந்தையின் பக்கம் பார்த்து, 'தங்கள் ஆக்கினையை என் சிரமேல் தரிக்கிறேன்; ஆனால் தங்கள் பெண்ணுக்கும் இதே விருப்பம்தானா?' என்றான்.

கேதார் பாபு அந்த க்ஷணமே, 'நிச்சயம், நிச்சயம்!' என்று கூறி ஒரு கணம் பொறுத்து, பிறகு, 'குறைந்த பக்ஷம் இது என்னமோ நிச்சயம். எல்லாம் தெரிந்திருந்தும் உன் கையில் என் பெண்ணைப் பறிகொடுக்க முடியாது' என்றார்.

மஹிம் சாந்தமான குரலுடன், 'ஆங்கிலேயர்களிடம் ஒரு வழக்கம் இருக்கிறது - இம்மாதிரி நிலைமையில் அவர்கள் பரஸ்பரம் ஒருவர் மற்றொருவருக்காக எதிர்பார்த்துக்கொண்டிருப்பார்கள். தங்களுடைய அபிப்பிராயமும் இதேதான் என்று எண்ணலாமா?' என்றான்.

கேதார் பாபு சட்டென்று ஆத்திரமடைந்து, 'இங்கே பார், மஹிம், நான் உன்னிடம் சபதம் செய்துகொள்வதற்காக உன்னை இங்கே கூப்பிடவில்லை. நீ எங்களிடம் செய்திருக்கும் காரியத்திற்கு, வேறொரு தந்தையாக இருந்திருந்தால், இதற்குள் மஹாபாரதம் ஒன்று நடந்திருக்கும். நான் சாந்தமானமனிதன், சண்டை சச்சரவுகளை விரும்புகிறவன் அல்ல.

ஆகையால் முடிந்தவரை நல்ல வார்த்தைகளால் என் மனோ பாவத்தைச் சொன்னேன். அதற்குமேல், நீ எதிர்பார்த்துக் கொண்டிருப்பாயா, இல்லையா என்பதையும், ஆங்கிலேயர்கள் என்ன செய்கிறார்கள், என்ன செய்யவில்லை என்பதையும் வர்ணிப்பது அவசியம் என்று எனக்குத் தோன்றவில்லை. மேலும் நாம் ஆங்கிலேயர்கள் அல்ல. நாம் இந்தியர்கள். நம்மிடம் பெண் பெரியவளாகிவிட்டால் தாய் தந்தையருக்குத் தூக்கம் வருவது கிடையாது. வாய்க்குச் சோறு ருசிப்பதில்லை. ஏன், இதெல்லாம் நீ அறிந்த விஷயம்தானே?" என்றார்.

மஹிமின் முகம் கணத்திற்குள் வாடியது. அவன் தன்னைச் சமாளித்துக்கொண்டு தைரியத்துடன், 'நான் என்ன காரியம் செய்தேன், அதனால் மஹாபாரதம் நடப்பதற்கு? இந்தக் கேள்வியை நான் தங்களிடம் கேட்க விரும்பவில்லை. தங்கள் பெண்ணின் வாயிலாக, அவளுக்கும் இதே அபிப்பிராயம்தானா இல்லையா என்பதை ஒரு முறை கேட்க விரும்புகிறேன்' என்று சொல்லி, அவன் எழுந்து அசலாவின் முன்னால் போய் நின்று, 'ஏன், இதெல்லாம் சரிதானே?' என்று கேட்டான்.

அசலா தலை நிமிரவும் இல்லை, பேசவும் இல்லை.

பொங்கி எழும் ஆத்திரத்தைச் சட்டென்று அடக்கிக் கொண்டு மஹிம் மீண்டும், 'உன்னுடைய மனத்திலிருப்பதைத் தனியாகக் கேட்கவும், கேட்காமல் அறியவும், எனக்குச் சந்தர்ப்பம் கிடைக்கவில்லை. இதற்காக நான் மன்னிப்புக் கோருகிறேன். அன்று மாலை ஆவேசத்தின் பேரில் நீ என்ன காரியம் செய்தாயோ அதற்கு நீ பதில் ஒன்றும் சொல்ல வேண்டியே இருக்காது. ஒரே ஒரு தரம் மாத்திரம் சொல்லிவிடு, அந்த மோதிரத்தைத் திருப்பிப் பெற விரும்புகிறாயா, இல்லையா?' என்றான்.

ஸுரேசன் புயலைப் போல அறையில் நுழைந்து, 'என்னை மன்னித்துக்கொள்ளுங்கள், கேதார் பாபு, இனி ஒரு நிமிஷம் கூட என்னால் இங்கு இருக்க முடியாது!' என்றான்.

இருந்தவர்கள் எல்லோரும் மௌனமாக ஆச்சரியத்துடன் தலை நிமிர்ந்து பார்த்தார்கள்.

'ஏன்?' என்றார் கேதார் பாபு.

ஸுரேசன், அபிநயம் காட்டுவதைப் போல இரு கைகளையும் விரித்து, 'இல்லை, இல்லை, இந்தப் பிழைக்கு எனக்கு மன்னிப்புக் கிடைக்காது. என்னுடைய அந்தரங்க நண்பன் இன்று பிளேக்கினால் இறந்துகொண்டிருக்கிறான். அதை எல்லாவற்றையும் மறந்து நான் என் பொழுதை விருதாவாக இங்கு வீணாக்கிக்கொண் டிருக்கிறேன்!' என்றான்.

கேதார் பாபு பயத்துடன், 'என்ன சொல்லிக்கொண் டிருக்கிறாய், ஸுரேஷ்? பிளேக்! போவாயா நீ அங்கே?' என்றார்.

ஸுரேசன் சற்றே சிரித்துவிட்டு, 'அவசியம், முன்பே நான் அங்கே போயிருக்க வேண்டும்!' என்றான்.

கேதார் பாபு மிக்க சங்கையுடன், 'ஆனால் பிளேக்கிலா? அவர்கள் யார் அப்படி உனக்கு ரொம்ப ஆத்மார்த்தமான—' என்று இழுத்தார்.

'ஆத்மார்த்தமானவர்களா? அவர்களைவிட இன்னும் மேலானவர்கள், கேதார் பாபு!' என்று சொல்லி, மஹிமின் பக்கம் பார்த்து, முதல் முதலாக, 'மஹிம், நம்ம நிசிதுக்கு நேற்று இரவிலிருந்து பிளேக் கண்டிருக்கிறது. பிழைப்பான் என்பது நம்பிக்கையில்லை. எனக்கு உன்னிடமும் ஒரு தரம் சொல்லவேண்டும் என்று எண்ணம். நீயும் பார்க்க வருகிறாயா?' என்றான்.

மஹிமனால் நிசிதை அறிந்துகொள்ள முடியவில்லை. 'எந்த நிசிது?' என்றான் அவன்.

'எந்த நிசிதா! என்ன சொல்லுகிறாய் நீ? முழுக்க முழுக்க "செகண்ட் ஈயர்" பூராவும் யார் கூடப் படித்தாயோ அந்த நம் நிசிதை இதற்குள்ளேயே மறந்துவிட்டாயா? இவ்வளவு பெரிய ஆபத்துக் காலத்தில் அவனுடைய ஞாபகம்கூட வரவில்லையா?' என்று சொல்லி, அசலாவின் பக்கம் பார்த்து, இன்னும் வருத்தமான குரலில், 'நல்லது, இப்பொழுது ஏன் ஞாபகம் வரப்போகிறது? பிளேக் அல்லவா!' என்றான் ஸுரேசன்.

இந்தப் பார்வையைப் பேசாமல் சகித்துக்கொண்டு, 'அவன் யார், அந்த — பவானிபுரத்திலிருந்து வருவானே அவனா?' என்றான் மஹிம்.

ஸுரேசன் கேலியாக, 'ஆமாம் ஐயா, நிசிது நம் மூன்று நான்கு பேர்களுக்குள் ஒருவன் அல்லவா? இத்தனை நாழிகைவரை ஞாபகம் கூட வரவில்லையா! வருகிறாயா என்று கேட்கிறேன்!' என்றான்.

மஹிம் அவனை அறிந்துகொண்ட பிறகு, 'நிசிது இப்பொழுது எங்கே இருக்கிறான்?' என்று கேட்டான்.

'வேறெங்கு இருப்பான்? அவன் வீடு பவானி புரத்தில்தானே இருக்கிறது. இந்தச் சமயம் அவனைச் சந்திப்பது கடமை என்று உனக்குத் தோன்றவில்லையா? நான் டாக்டர், நான் சென்றே தீரவேண்டும்; இவ்வளவு பெரிய நட்பை மறக்க முடியாவிட்டால் நீயும் என்னுடன் வர முடியும். கேதார் பாபு, உங்கள் பேச்சு அநேகமாக முடிந்து போயிருக்கும். சிறிது நேரத்திற்காவது இவனுக்கு விடுதலை அளிக்க முடியும் என்று எண்ணுகிறேன்' என்றான்.

இந்த ஜாடை எதன்பேரில் நடந்தது என்பதை கேதார் பாபு சரியாக அறிந்துகொள்ள முடியவில்லை. வருத்தம் நிறைந்த முகத்துடன், மஹிமை ஒரு தடவையும், தம் மகளை ஒரு தடவையும் பார்த்தார். தம்முடைய எதிர் காலத்து

மருமகனுன இந்தப் பெரிய மனிதனின் மான அவமானம் எங்கெந்த விஷயங்களில் இருக்கிறது, எங்கெந்த விஷயங்களால் அவன் கோபமடைகிறுன் என்பவற்றை யெல்லாம் கேதார் பாபு இதுவரை சரியாக அறியவில்லை. அவர் வாயினின்றும் யாதொரு வார்த்தையும் வெளிவரவில்லை. மஹிமும், ஒன்றும் தோன்ருதவனுய், பேசாமல் விழித்துக்கொண்டு உட்கார்ந்திருந்தான்.

பார்த்துக்கொண்டிருக்கும் போதே அசலாவின் முகம் முழுவதும் ஒரு வாட்டம் அடைந்தது. அவள் மெதுவாக எழுந்து, கையிலிருந்த புஸ்தகத்தை எதிரேயுள்ள மேஜை மீது வைத்துவிட்டு, அவ்வளவு நேரத்திற்குப் பிறகு, ' நீங்கள் டாக்டர், நீங்கள் போகவே வேண்டும். ஆனுல், இவருடைய சட்ட புஸ்தகத்தில் பிளேக்கைப் பற்றிய சிகிச்சை ஒன்றும் எழுதியிருக்கவில்லையே! பின் இவர் எதற்காக அங்கே வர வேண்டும்?' என்ருள்.

அசலாவின் வாயிலிருந்து இம்மாதிரி எதிரிடையான பதிலைக் கேட்டு ஸுரேசன் குன்றிப்போனுன். ஆனுல் அடுத்த க்ஷணமே, ' நான் அங்கே வைத்தியம் செய்யப் போகவில்லை. அங்கே டாக்டருக்குக் குறைவு ஒன்றுமில்லை. நான் நண்பனுக்குச் சேவை செய்யவே போகிறேன். நட்பை நான் என்னுடைய உயிரினும் மேலாக மதிக்கிறேன்' என்ருன்.

ஒரு கடுமையான சிரிப்பின் ரேகை அசலாவின் உதடுகளில் தவழ்ந்தது. ' எல்லோருமே உங்களைப் போல மகான்களாக ஆகிவிடுவார்களா? அதல்ல விஷயம். மேலும் இவ்வளவு மகத்தான மித்திர பாவம் இவரிடம் இல்லாவிட்டால் அதை நான் வெட்கப்படக் கூடிய விஷயமாக நினைக்கமாட்டேன். எப்படியாவது இருக்கட்டும். எந்த நிலைமையிலும் இவர் அங்கே போக முடியாது!' என்ருள்.

ஸுரேசன் முகம் கறுத்தது. கேதார் பாபு சங்கை யடைந்தார். பயந்துகொண்டே, 'என்ன சொல்லிக்கொண்டிருக்கிறாய் அசலா? ஸுரேசனைப் போல—உண்மைதான்—மிசித் பாபுவைப் போல—' என்று ஏதோ ஆரம்பித்தார்.

அசலா நடுவிலேயே, 'மிசித் பாபுவை முதலில் இவர் அறிந்துகொள்ளவே யில்லை. அதைத் தவிர அவர் டாக்டர், அவர் போக முடியும். ஆனால் மற்றொருவரை ஆபத்தில் எதற்காக இழுத்துச் செல்லவேண்டும்?' என்றாள்.

சொல்லம்புகள் பட்டதும் ஸுரேசனுக்கு எதுவும் ஞாபகமில்லை. அவன் மேஜையின்மீது பலமாக ஓர் அடி அடித்துவிட்டு, மனத்தில் தோன்றியதை எல்லாம் பிதற்றலானான். 'நான் கோழையில்லை. உயிரைப்பற்றி எனக்குப் பயமில்லை' என்று சொல்லி, மஹிமின் பக்கம் சுட்டிக்காட்டி, 'இந்த நன்றிகெட்டவனிடம் கேட்டுப் பார், நான் இவனை மரணத்தினின்றும் தப்புவித்தேனா இல்லையா என்பதை!' என்றான்.

அசலா கர்வமான குரலில், 'நன்றி கெட்டவரா இவர்! சரிதான். ஒரு சமயம் காப்பாற்ற ஏற்பட்ட ஒருவரை, மனம் விரும்பினால், கொன்றுவிடக்கூட முடியுமா?' என்றாள்.

கேதார் பாபு பித்தம் பிடித்தவரைப் போல, 'சும்மா இரேன் அசலா! — போகட்டும், ஸுரேஷ், விட்டுவிடு. இதெல்லாம் என்ன, கொஞ்சம் சொல்லேன்?' என்றார்.

ஸுரேசன் வரண்ட கண்களுடன் கேதார் பாபுவின் பக்கம் பார்த்து, 'நான் பிளேக் இருக்குமிடம் போக முடியும்; இதில் ஒன்றும் ஆபத்தில்லை. மஹிமின் உயிர்தான் உயிர்! என் உயிருக்கு விலை மதிப்பு ஒன்றும் கிடையாது! பார்த்தீர்கள் அல்லவா தாங்கள்?' என்றான்.

வெட்கத்தாலும் கோபத்தாலும் அசலா அழுதுவிட்டாள். அழுத குரலுடன் மறுபடியும், 'இவருடைய உயிரை இவர் கொடுக்க முடியும். நான் தடை செய்ய முடியாது. ஆனால், எங்கே எனக்குத் தடை செய்ய அதிகாரம் இருக்கிறதோ, அங்கே நான் தடை செய்தே தீருவேன். நான் அம் மாதிரி இடத்திற்கு இவரை அனுப்ப முடியாது!' என்று சொல்லி, அவள் புறப்பட ஆரம்பித்ததும், கேதார் பாபு உரத்த குரலில், 'எங்கே போகிறாய், அசலா?' என்றார்.

அசலா தயங்கி நின்று, 'இல்லை அப்பா, இரவு பகல் என்றால் இந்த உபத்திரவத்தைச் சகிக்க முடியாது. முடியாததை — என் உயிர் இருக்கும் பொழுது ஒப்புக் கொள்ள முடியாத அந்த விஷயத்தை — எடுத்துக்கொண்டு, இரவு பகல் என்னை வதைக்கிறீர்கள்!' என்று சொல்லிக் கொண்டே, பொங்கி வரும் தன் அழுகையை அடக்கிக் கொண்டு வேகமாகச் சென்றுவிட்டாள். விருத்தர் கேதார் பாபு பிரமை பிடித்தவர் போலச் சிறிது நேரம் பார்த்துக் கொண்டிருந்தார். கடைசியில், 'சிறு பிள்ளைத்தனம் எவ்வளவு இருக்கிறது பார் — இதுகூட ஒரு பேச்சா, சொல்லேன்!' என்று கூறலானார்.



# XII

ஒரு மாதம் கழிந்தது. கேதார் பாபு ஒப்புக்கொண்டுவிட்டார். மஹிமுக்கும், அசலாவுக்கும் அடுத்த ஞாயிற்றுக்கிழமை விவாகம் செய்ய நிச்சியமாகிவிட்டது. அன்று தினம் ஸுரேசன் போட்டுவிட்டுப் போன சண்டை கேதார் பாபுவின் மனத்தில் குத்தியது. ஆனால், அந்த அவமானத்தின் ஆழத்தை அளந்தே மஹிமின்மேல் சந்தோஷ மடைந்து சம்மத மளித்தாரோ என்றால், அதல்ல விஷயம். ஸுரேசனே எங்கோ தகவல் இல்லாமல் போய்விட்டான். இதுவரை அவனைப் பற்றி ஒரு தகவலும் அறிய முடியவில்லை. விசாரித்ததில் அன்று இரவே அவன் பசாஹின் பக்கம் சென்றான் என்று தெரிந்தது. எப்பொழுது வருவான் என்பதையும் யாரும் சொல்ல முடியவில்லை.

அன்று அழுகையை அடக்குவதற்காக அசலா அறையை விட்டு வெளியே சென்றபொழுது, மூவரும் முகம் கவிழ்ந்து உட்கார்ந்திருந்தார்கள். கடைசியில் ஸுரேசன் தான் முதன் முதலில் பேசினான். கேதார் பாபுவின் முகத்தைப் பார்த்து, 'தங்களுக்கு யாதொரு விதமான தடையும் இல்லாம லிருந்தால், தங்கள் முன்னிலையிலேயே தங்கள் பெண்ணிடம் சில வார்த்தைகள் பேச விரும்புகிறேன்' என்றான்.

கேதார் பாபு வருத்த மடைந்து, 'ரொம்பக் கஷ்டம்! நீ பேசப் போகிறாய்; இதில் தடை என்ன இருக்கிறது, ஸுரேஷ்? இன்னும் நீங்கள் சிறுவர்கள்தானே!' என்றார்.

'ஒரு தரம் கூப்பிடுங்கள், எனக்கு அதிக நேரமில்லை!'

அவனுடைய முகத்தையும் குரலில் தோன்றும் சுபாவ மற்ற கம்பீரத்தையும் கண்டு, கேதார் பாபுவுக்கு மனத்திற்குள் சந்தேகம் ஏற்படலாயிற்று. ஆனால் பலவந்தமாகச் சற்று சிரித்துக்கொண்டு, மறுபடியும், 'எவ்வளவுதான் பாரேன், எல்லாம் சிறுபிள்ளைத்தனம்' என்று சொல்லி, மீண்டும், 'சற்று அவள் தன்னைத்தானே சமாளித்துக்கொள்ளட்டும்,—இல்லை, நீ அறியவில்லை, ஸுரேஷ்! பிளேக் என்ற வார்த்தையைக் கேட்டாலே,—கடைசியில் இந்தப் பெண்களின் மனம் தெரியாதா?—ஒருமுறை பெயரைக் கேட்டாலே பயத்தினால் — தன்மை — தெரிந்ததா அப்பா?' என்றெல்லாம் சொல்லலானார்.

ஸுரேசன் மானசிக நிலைமை எந்த விதத்திலும் கவனம் செலுத்த முடியாதபடி இருந்தது. அவன் அதைரியமடைந்து, 'உண்மையில், கேதார் பாபு, வழி பார்த்திருக்க எனக்கு நேரமில்லை!' என்றான்.

'அது சரி! அது சரி—யாரடா அங்கே?' என்று கூப்பிட்டுக்கொண்டே கேதார் பாபு மஹிமின் பக்கம் கடும் பார்வையுடன் பார்த்தார். மஹிம் எழுந்து நின்று நமஸ்காரம் செய்துவிட்டுப் பேசாமல் வெளியே சென்றான்.

கேதார் பாபு தாமே சென்று அசலாவை அழைத்து வந்தபோது மாலைக் கதிரவனின் ரத்த வர்ணமான ஒளி, மேலண்டை ஜன்னலிலும், வாசற்படியிலும் பரவி யிருந்தது. அந்தப் பிரகாசத்தினால் ஜ்வலித்துக்கொண்டிருக்கும் அந்தத் தருணியின் மெல்லிய தேகத்தின் பக்கம் பார்த்து, ஸுரேசனுடைய சஞ்சலமடைந்த மனத்தில் ஒருவிதமான மோகமும், புளகாங்கிதத்தின் ஸ்பரிசமும் விளையாடலாயின. ஆனால், நிலைத்து நிற்கவில்லை. அவளுடைய பார்வை பட்டதுமே அவனுடைய அந்த பாவம் கண்ணிமைப் பொழுதில் அணைந்

தது. ஆனால் பிறகுங்கூட அவன் அங்கிருந்து தன் பார்வையைத் திருப்ப முடியவில்லை. ஒரேயடியாய் அவள் பக்கம் பார்த்துக்கொண்டே பேசாமல் உட்கார்ந்திருந்தான். அசலாவின் முகத்தில் ஆகாசத்தின் வெளிச்சம் விழவில்லை என்பதென்னமோ சரிதான். ஆனால் எதிரேயுள்ள சுவரில் பிரதிபலித்த பிரகாசத்தின் ரத்த வர்ண ரேகைகளால் அவளுடைய சரீரம் முழுவதும் ஸுரேசன் பார்வைக்கு ஸ்வர்ணத்தால் வார்த்த விக்கிரகம் போலத் தென்பட்டது. ஏதோ ஒரு வெறுப்பு, அந்தப் பெண்ணின் மதுரத்தையும், மென்மையையும் திருடிக்கொண்டு, முகத்தின் ஒவ்வொரு ரேகையையும் கலங்காத திடத்துடன் பொன்னைப் போலக் கடினமாக்கி விட்டதென்பது அவனுக்கு நன்றாகப் பட்டது. திடீரென்று கேதார் பாபு மூச்சுவிடுவதைக் கேட்டு ஸுரேசன் கவனம் கலைந்தது. அவன் சரியாக உட்கார்ந்தான்.

கேதார் பாபு மறுபடியும் ஒரு தரம் தம் பழைய பல்லவியைத் திருப்பிக்கொண்டே, 'எவ்வளவுதான் பாரேன், எல்லாம் பைத்தியக்காரத்தனம்,—யாரிடம் என்ன சொல்வேன் ? எனக்கு ஒன்றும் புரியவில்லை' என்றார்.

ஸுரேசன் அசலாவைப் பார்த்து மிக்க கம்பீரமான குரலுடன், 'தாங்கள் செய்துவிட்டுப் போனீர்களே, அது சரிதானா ?' என்று கேட்டான்.

அசலா தலை அசைத்து, 'ஆமாம்!' என்றாள்.

'அதில் இப்பொழுது வேறு மாறுதல் ஒன்றும் ஏற்பட முடியாதா ?'

அசலா முன்போலவே தலை அசைத்து, 'முடியாது!' என்றாள்.

ரத்தத்தின் ஓர் எழுச்சி நெருப்பின் தணல் போல ஸுரேசன் முகத்தைப் பிரகாசிக்கச்|செய்தது. ஆனால், அவன் தன்னுடைய குரலைச் சாந்தமாக வைத்துக்கொண்டு, 'எப்

பொழுது என்னுடைய உயிருக்கே ஒரு விலையும் இல்லையோ, அப்பொழுதே நான் எல்லாவற்றையும் அறிந்துகொண்டேன்!' என்றான். அவன் உள்ளத்தில் அந்தச் சமயம் நெருப்பு எரிந்துகொண்டிருந்தது. சிறிது பொறுத்து, 'சரி, நான் ஒரு வார்த்தை கேட்கிறேன், நான்தான் உங்களுடைய முதல் வேட்டையா அல்லது இம்மாதிரி பலர் இந்த வலையில் விழுந்து தலை மொட்டை யானார்களா?' என்று கேட்டான்.

சகிக்க முடியாத ஆச்சரியத்தினால் அசலா விழித்து விழித்துப் பார்த்துக்கொண்டிருந்தாள். ஸுரேசன் கேதார் பாபுவின் பக்கம் பார்த்து, 'தந்தையும் மகளும் சேர்ந்து சூழ்ச்சி செய்து வேட்டையாடுவது சீமையில்தான் என்று கேட்டிருந்தேன், புதிதல்ல; ஆனால் கேதார் பாபு, தங்களிடம் இதையும் சொல்லுகிறேன். ஒருநாள் இல்லாவிட்டால் ஒரு நாள் நீங்கள் அவசியம் ஜெயிலுக்குப் போய் ஆக வேண்டும்!' என்றான்.

கேதார் பாபு உரக்கச் சத்தமிட்டு, 'இதெல்லாம் என்ன, ஸுரேஷ்?' என்றார்.

ஸுரேசன் கலங்காத குரலில், 'போதும் கேதார் பாபு, சும்மா யிருங்கள்! நாடகத்தின் நடிப்பு வெகு நாட்களாக நடந்து வருகின்றது. இது பழசு ஆகிவிட்டது. இனிமேல் இது என்னிடம் பலிக்காது. என்னுடைய ரூபாய் போனது என்னமோ போய்விட்டது,—அதற்குப் பதிலாகக் குறைவான பாடம் ஒன்றும் கிடைக்கவில்லை; ஆனால் இப்பொழுது இங்கேயே இது முடிவடைந்துவிட வேண்டும்' என்றான்.

அசலா அழுதாள். 'நீ ஏன் அப்பா, இவர் ரூபாயை வாங்கினாய்?' என்றாள்.

கேதார் பாபு, பைத்தியம் பிடித்தவரைப் போல, ஒரு வெள்ளைக் கடிதத் துண்டைக் கையில் எடுத்து இங்கும்

அங்கும் ஆட்டிக்கொண்டு, கடைசியில் எங்கிருந்தோ ஒரு பழைய தினசரிப் பத்திரிகையை எடுத்து வந்து, உரத்த குரலில், 'நான் இப்பொழுதே கை லெட்டர் எழுதிக் கொடுக்கிறேன்!' என்றார்.

'இருக்கட்டும், இருக்கட்டும். இப்பொழுது எழுதுவதற்கு ஒன்றும் அவசியமில்லை! தாங்கள் கொடுத்துவிட்டீர்கள், நான் வாங்கிக்கொண்டேன்! நான் அந்தக் கொஞ்ச ரூபாய்க்காகப் பிராது செய்து தங்களுடன் கோர்ட்டுக்குப் போக மாட்டேன்!' என்றான்.

பதில் சொல்வதற்காகக் கேதார் பாபுவின் உதடுகள் மாறி மாறி அசைந்தன. ஆனால் தொண்டையிலிருந்து ஒரு வார்த்தைகூட வெளியே வரவில்லை.

ஸுரேசன் அசலாவின் பக்கம் பார்த்துக்கொண்டிருந்தான். அவளுடைய வெளுத்த முகத்தையும், கலங்கிய கண்களையும் பார்த்தும்கூட அவனுக்குச் சற்றும் தயை ஏற்படவில்லை. அதற்குப் பதிலாக உள்ளிருக்கும் ஜ்வாலை பல மடங்கு அதிகரித்தது. அவன் பிசாசைப் போன்ற கொடுமையுடன், 'கர்வப்பட்டுக்கொள்ள உன்னிடம் என்ன இருக்கிறது, அசலா? இந்தக் குரூபமான ஒட்டிய முகம், கம்பைப் போல் உலர்ந்த தேகம், ஒரு நிமிஷம்கூட நான் உன் ரூபத்தில் மயங்கிவிடவில்லை. ஒருபொழுதும் அம்மாதிரி நினைத்து விடாதே!' என்றான்.

தந்தையின் முன் இம்மாதிரி லஜ்ஜை யில்லாமல் அவன் பேசினதைக் கேட்டு, அசலா அவமானத்தாலும், துக்கத்தாலும், வெறுப்பினாலும் துடித்து, தன் இரு கரங்களாலும் முகத்தை மூடிக்கொண்டு, சோபாவில் கவிழ்ந்து விழுந்தாள்.

ஸுரேசன் எழுந்து நின்று, 'பிரம்ம சமாஜிகள் முகத்தில்கூட நான் விழிப்பதில்லை. அவர்கள் நிழல் பட்டாலே எனக்கு வெறுப்புண்டாகும்; அவர்கள் வீட்டில் நுழை

யும்போதே எப்பொழுது நான் பிறந்தது முதல் கொண்ட சம்ஸ்காரம், நீண்ட நாள் துவேஷம், இவை ஒரு க்ஷணத்தில் மறைந்ததோ, அப்பொழுதே இவை மந்திர வேலைகள் என்று நான் சந்தேகித்திருக்க வேண்டும்! எனக்கு என்ன ஆகவேண்டுமோ ஆகிவிட்டது; ஆனால் போகும் பொழுது உங்களுக்குக் கோடித் தடவைகள் நன்றி கூறாமல் போக முடியாது. எனது நன்றிகளை ஏற்றுக்கொள், அசலா!' என்றான்.

அசலா முகத்தை எடுக்காமலே, தேம்பிய குரலுடன், 'அப்பா, இவரை நீ சும்மாயிருக்கச் சொல். நாம் தெருத் தெருவாகத் திரிவோம், அது நல்லது. ஆனால் இவரிடம் நீ வாங்கியதை எல்லாவற்றையும் திருப்பிக் கொடுத்துவிடு!' என்றாள்.

ஸுரேசன் மீண்டும் எழுந்து நின்று, 'தெருத் தெருவாக! ஒரு நாள் அதுகூட உங்களுக்கு உண்டு. நான் சொல்லிவிட்டுப் போகிறேன். ஆனால் அன்றைய தினம் என்னை நினைத்துக்கொள்ளுங்கள்!' என்று சொல்லி, பதிலை எதிர்பாராமலே வேகமாக வெளியே சென்றுவிட்டான்.

கேதார் பாபு சிறிது நேரம்வரை பேசாமல் உட்கார்ந்திருந்தார். கடைசியில் ஒரு நீண்ட பெருமூச்சு விட்டுக் கொண்டு, 'ஆஹா, எப்படிப்பட்ட பயங்கரமான மனிதன்! இம்மாதிரி தெரிந்திருந்தால் நான் அவனை வீட்டுக்குள் நுழைய விட்டிருப்பேனா?' என்றார்.

தந்தையின் வார்த்தைகள் அசலாவின் காதில் விழுந்தன. ஆனால் அவள் ஒன்றும் பேசவில்லை. கவிழ்ந்து படுத்து அழுதுகொண்டிருந்தவள், அப்படியே வெகு நேரம்வரை பேசாமல் கண்ணீரினால் மார்பை நனைத்துக் கொண்டிருந்தாள். அருகேயே நாற்காலியில் அமர்ந்து, கேதார் பாபு எல்லாவற்றையும் பார்த்துக்கொண்டிருந்தார்; ஆனால் சாந்தப்படுத்தும் ஒரு வார்த்தையைக் கூறக்கூட

அவருக்குத் தைரியம் வரவில்லை. சாயங்காலமாகிவிட்டது. சமையற்காரன் வந்து விளக்கேற்ற ஏற்பாடு செய்யலானான்; அசலா பேசாமல் எழுந்து, தன் அறைக்குள் சென்று விட்டாள்.

ஆனால் மஹிமுக்கு இந்த விஷயம் ஒன்றும் தெரியாது. கேதார் பாபு சுபாவமான சரளத்துடன் தம் பெண்ணை அவனுக்கு மணம் செய்துகொடுக்க ஒப்புக்கொண்ட தினம் மாத்திரம் சிறிது நேரம் வருத்தம் அடைந்தவனைப் போல அவர் முகத்தைப் பார்த்துக்கொண்டிருந்தான். அநேக விதமான விஷயங்கள், அநேக சம்சயங்கள் மட்டும் அவன் மனத்தில் எழுந்தன. ஆனால் அவனுடைய இந்த சௌபாக்கியத்திற்கு ஸுரேசன்தான் மூலகாரணம் என்பது அவனுடைய தூரத்துக் கற்பனையில்கூட உதிக்கவில்லை. அசலாவிடம் அன்பாலும், காதலாலும், நன்றியாலும் அவனுடைய ஹிருதயம் நிறைந்தது. எப்பொழுதுமே அவன் அமரிக்கையான மனிதன். உணர்ச்சிப்பெருக்கையோ, படபடப்பையோ அவன் எப்பொழுதும் வெளியிட்டதில்லை. அப்படி வெளியிட்டாலும் கூட, ஜனங்களின் கண்முன் அது அவன் முகத்தில் ஒரு சுபாவமற்ற தன்மை என்று தோன்றிவிடும். தவிர, அன்று மாலை அவன் கேதார் பாபுவிடம் இரண்டொரு வார்த்தைகள் பேசிவிட்டுத் தனியாக விடுதிக்குத் திரும்பும்பொழுது, மற்ற தினங்களைப் போல அசலாவைச் சந்தித்து, அவளுக்கு ஒரு சாதாரண நமஸ்காரம்கூடச் செய்துவிட்டு வரவில்லை. விஷயத்தைக் கேதார் பாபுதான் ஆரம்பித்தார். பேச்சு ஆரம்பமானதிலிருந்து, சம்மதம் தந்து நாள் நிர்ணயம் செய்யும்வரை, அவரே எல்லாவற்றையும் செய்தார். முகத்தில் திருப்தியையோ ஆனந்தத்தையோ துளிகூடக் காட்டவில்லை. ஆயினும் நாட்கள் கழியலாயின. விவாக தினமும் நெருங்கியது.

நாளைக் கழித்து அடுத்த நாள் விவாகம். ஆனால் பெண்ணின் விவாகத்தை எந்த விதமான ஆடம்பரத்துடனும் செய்வதில்லை என்று நிச்சயம் செய்துகொண்டார் கேதார் பாபு. ஆகையால் வரப்போகும் விவாகத்தின் ஏற்பாடுகள் எவ்வளவு வரையில் முடியுமோ அவ்வளவு செய்வதில் அவர்கள் பின் வாங்கவில்லை.

அன்று சாயங்காலமும் ஏற்பட்ட வேளையில் அவர்கள் டீ சாப்பிட உட்கார்ந்தார்கள். கையில் பூ வேலை சாமான்களுடன் அசலா அருகே யிருந்த நாற்காலியில் உட்கார்ந்திருந்தாள். வெகு நாட்களுக்குப் பிறகு, அநேக துக்ககரமான நாட்களைக் கழித்த பிறகு, இப்பொழுது சில தினங்களாக அவள் மனத்தில் சிறிதளவு சாந்தி ஏற்பட்டிருந்தது. அதனுடைய தன்மையால், அவளுடைய வெளுத்த முகம், மங்கிய சந்திரனைப் போல, ஓர் அன்புப் பொலிவுடன் காணப்பட்டது. டீ சாப்பிட்டுக்கொண்டே, கேதார் பாபு அதைத்தான் பார்த்துக்கொண்டிருந்தார். ஸுரேசன் கலகம் செய்துகொண்டு போனதிலிருந்து இதுவரை அவர் மனக் கசப்புடனே நாட்களைக் கழித்தார். அவன் திரும்பி வந்து என்ன செய்வான், என்ன செய்யமாட்டான்—இந்தக் கவலை ஒரு புறம்; அதைத் தவிர, அந்த விஷயத்தில் அவருடைய கடமை என்ன?—கை லெட்டர் எழுதிக் கொடுப்பதா, அல்லது கடனைத் தீர்க்க வேறு எங்காவது கடன் வாங்க முயற்சிப்பதா, இல்லை மஹிமிடமே எல்லாப் பொறுப்புக்களையும் விட்டுவிடுவதா?— என்ன செய்வது என்பதை யோசித்து யோசித்து, அதற்கு ஒரு கரைகாண அவரால் முடியவில்லை. மேலும், ஏதாவதோர் ஏற்பாடு செய்யவேண்டியது மிக்க அவசியமாகிவிட்டது. ஸுரேசன் ஆள் தகவலில்லை என்ற நம்பிக்கையினால், எப்பொழுதுக்குமே விடுமுறை கிடைத்துவிடுமா, அல்லது பெண்ணைப் போலத் தம் ஞாபகத்

திலேயே மூழ்கி, கண்ணை மூடிக்கொண்டிருந்தால் விபத்து அகன்றுவிடுமா? விடாது. இந்த விஷயத்தை அவர் ஆழ்ந்து ஆராய்ந்திருந்தார். நிராசை யடைந்த காதலும் ஒரு நாள் இல்லாவிட்டால் ஒரு நாள் பலமடைந்துவிடும். அப்பொழுது அவன் திரும்பி வந்து, நாலா பக்கமும் கெட்ட பெயரை உண்டாக்கிச் சச்சரவுகளை மூட்டுவான்;— அவன் செக்கைக் கிழித்து ரூபாய் கொடுத்திருக்கிறான்; இதனால் எழுத்து விவகாரங்கள் ஒன்று மில்லாவிட்டாலும் கூட, கோர்ட்டில் அதை மறுத்துவிட முடியாது,—இந்த விஷயங்களை அவர் யோசித்து யோசித்துச் சந்தேக மற்றவரானார். பெண்ணிடமும் இவ்விஷயமாக யோசிப்பதற்கு ஓர் உபாயமும் இல்லை. ஸுரேசன் என்ற பெயரைக் கேட்டாலே அவருக்குப் பயம் உண்டாயிற்று. இப்பொழுது அசலாவின் சாந்த முகத்தைக் கண்டு, அவர் உள்ளத்தில் இந்தப் பெண் தானே தன்னுடைய சகல துக்கங்களுக்கும் வேர் என்ற எண்ணமே மாறி மாறி எழுந்தது. அம்மாதிரி பார்க்கப் போனால், எவ்வளவு நல்ல ஏற்பாடுகள் நடந்துவிட்டன, நெருங்கிய எதிர்காலத்தில் என்ன நடக்கப் போகின்றதோ!

வயோதிகரான தந்தை பல தடவை தடுத்துங்கூட, அவருடைய சுக துக்கத்தைச் சற்றும் கவனிக்காமல், எல்லாக் காரியங்களையும் வீணாக்கின அந்தத் தன்னலமுள்ள பெண்ணைப்பற்றி அவர் மனத்தி லடங்கியிருந்த கோபம், சாபத்தைப் போல, ஒவ்வொரு சமயமும், ‘இவள் இதனுடைய பலனை அநுபவிக்கவேண்டும். ஒரு நாள் அழுதுகொண்டே, “அப்பா, உன்னுடைய பேச்சைக் கேட்காததின் தண்டனையை நான் அநுபவித்துக்கொண்டிருக்கிறேன்” என்று சொல்லவேண்டி வரும்’ என்ற எண்ணமே அவர் மனத்தில் எழுந்தது. பாத்திரத்தை ஒப்பிட்டுப் பார்த்தால் ஸுரேசன் மஹிமைவிடப் பல மடங்கு சிறந்தவன் என்ற எண்ணம் அவர்

மனத்தில் எழுந்தது; அவனுடன் சம்பந்தம் செய்துகொள்ளாமல் போனது ஒரு பெரும் துர்ப்பாக்கியம் என்றே அவர் கருதினார். மனத்தில் அவன் பேரில் அவருக்குக் கோபமில்லை. இவ்வளவெல்லாம் ஆன பிறகும்கூட, ஒருகால் இன்று அவனை அடைய ஏதாவது வழியிருந்தால், இந்தக் கலியாணத்தை ரத்துச் செய்வதில் அவருக்குத் துளிகூடச் சங்கடம் ஏற்படாது. ஆனால் ஒரு வழியுமில்லை, ஓர் உபாயமு மில்லை. அசலாவிடம் அந்த விஷயத்தைச் சொல்வதே கஷ்டம்.

பூ வேலை செய்துகொண்டே அவள், தலை நிமிர்ந்து, 'அப்பா, ஸுரேஷ் பாபுவின் சமாசாரத்தைப் படித்தீர்களா?' என்றாள்.

அசலாவின் வாயிலிருந்து ஸுரேசன் பெயர்! கேதார் பாபு திடுக்கிட்டு அவள் பக்கம் பார்த்தார். தம்முடைய காதுகளிடம் அவருக்கு நம்பிக்கை ஏற்படவில்லை. காலைப் பத்திரிகை மேஜையின் மேல் கிடந்தது; அசலா அதை எடுத்து மீண்டும் அதே வார்த்தையைச் சொன்னாள். கேதார் பாபு காலைப் பத்திரிகையை மேலெழுந்த வாரியாகப் பார்த்துவிட்டார். ஆனால், மற்ற சமாசாரங்களைத் தேடிப் படிக்கும்படியான மன நிலைமை அவருக்கில்லை. அவர், 'எந்த ஸுரேஷ்?' என்றார்.

அசலா பத்திரிகையில் அந்தச் சமாசாரத்தைத் தேடிக்கொண்டே, 'ஒருகால் நம்ம ஸுரேஷ் பாபுவாகத்தான் இருப்பார்!' என்றாள்.

கேதார் பாபு ஆச்சரியத்துடன் கண்கள் மிரள, 'நம்ம ஸுரேஷ் பாபுவா, என்ன செய்தான் அவன், எங்கே இருக்கிறான்?' என்றார்.

அசலா எழுந்திருந்து, பத்திரிகையில் அந்தச் சமாசாரம் இருந்த இடத்தைத் தந்தைக்குக் காட்டி, அவர் கையில் பத்திரிகையைக் கொடுத்து, 'இதைப் படித்துப் பாருங்கள்!' என்றாள்.

கேதார் பாபு மூக்குக் கண்ணாடிக்காகப் பையைத் தடவிக்கொண்டே, 'கண்ணாடியை அந்த அறையில் வைத்து விட்டு வந்துவிட்டேன் போலிருக்கிறது. நீயே படித்துச் சொல். என்ன எழுதியிருக்கிறது, கேட்போம்!' என்றார்.

அசலா படித்துக் காண்பித்தாள். பைஜாபாத்திலிருந்து ஒரு நிருபர் அதை எழுதியிருந்தார்: 'அன்று நகரத்தில் ஏழைகள் வசிக்குமிடம் ஒன்றில் பயங்கரமான தீ விபத்து ஏற்பட்டது. ஒரு புறம் பிளேக், மறுபுறம் இந்தச் சம்பவம்! ஏழைகளின் கஷ்டத்திற்கு ஓர் எல்லை யில்லை. சில தினங்களாக ஸுரேஷ் பாபு என்ற பெயருள்ள ஒரு கனவான் இங்கு வந்திருக்கிறார். அவர் பணம், காசு, மருந்து, சிகிச்சை முதலியவைகளுடன், தம் உயிரைக்கூடப் பொருட்படுத்தாமல், நோயாளிகளுக்குச் சேவை செய்து வருகிறார். இந்த விபத்தின் பொழுது அவர் அங்கு வந்ததும், நோயாளி ஸ்திரீ ஒருத்தி படுத்த படுக்கையாக எரிகிற வீட்டுக்குள் இருந்தாள். அவளை வெளியே கொண்டு வருகிறவர்கள் யாருமில்லை என்று கேள்விப்பட்ட பொழுது, அந்தத் தைரியமுள்ள இளைஞர், தம் உயிரைச் சற்றும் பொருட்படுத்தாமல், சட்டென்று எரிகிற வீட்டுக்குள் புகுந்தார்—' இத்யாதி, இத்யாதி.

படித்து முடிந்ததும், கேதார் பாபு வெகுநேரம் வரை பேசாமல் உட்கார்ந்திருந்தார்; பிறகு ஒரு பெருமூச்சு விட்டுக்கொண்டு, 'ஆனால், இவன் நம்முடைய ஸுரேஷ்தான் என்று தோன்றுகிறதா?' என்றார்.

அசலா சாந்தமாக, 'ஆமாம் அப்பா, நிச்சயம் இவர் நம்ம ஸுரேஷாகத்தான் இருப்பார்!' என்றாள்.

கேதார் பாபு மறுபடியும் ஒரு முறை பிரமித்தார். ஒருகால் தெரியாமல் அசலாவின் வாயிலிருந்து 'நம்ம' என்ற வார்த்தை வந்திருக்கும். ஒரு நம்பிக்கை ஏற்படுத்துவ

தற்காகவும் அது இருக்கலாம். ஆனால் கேதார் பாபுவின் உள்ளத்தில் அது வேறு விதமாகச் சப்தித்தது; மூழ்கிக் கொண்டிருக்கும் மனிதன் எப்படித் துரும்பையும் சகாயமாகக் கைப்பற்றுகிறானோ, அதேபோல, விருத்தரான தந்தை, தம் பெண்ணின் வாயிலிருந்து வந்த அந்த வார்த்தையை மிக்க ஆவலுடன் தம் உள்ளத்தில் ஒளித்துக்கொண்டார். இந்த ஒரு சத்தமே அவர் மனத்தில் கணத்திற்குள் எத்தனையோ நடக்கக்கூடாத சம்பவங்களின் வாசலைத் திறந்தது! அவருடைய முகம் இத்தனை நாட்களுக்குப் பிறகு நம்பிக்கையின் ஆனந்தத்தால் பிரகாசித்தது. ‘சரி அம்மா, உனக்கு அம்மாதிரி தோன்ற......’

தந்தை திடீரென்று தயங்குவதைக் கண்ட அசலா, அவர் முகத்தைப் பார்த்து, ‘என்ன தோன்றவில்லை, அப்பா?’ என்றாள்.

கேதார் பாபு, ஜாக்கிரதையாக முன்னேறும் எண்ணத்துடன், தம் வார்த்தையை அடக்கிக்கொண்டு, ‘ஸுரேஷ் நம்மிடம் அந்த மாதிரி நடந்துகொண்டு போனதற்கு அவன் இப்பொழுது மனத்திற்குள் பச்சாத்தாபப்படுவான் என்று உனக்குத் தோன்றவில்லையா?’ என்றார்.

அசலா உடனே அவர் சொன்னதற்கு ஏற்ப, ‘நிச்சயம் எனக்கும் அப்படித்தான் அப்பா தோன்றுகிறது!’ என்றாள்.

கேதார் பாபு வேகமாகத் தலையை ஆட்டிக்கொண்டு, ‘நிச்சயம்! நிச்சயம்! நூறு தடவையும்! இல்லாவிட்டால் அவன் இப்படி ஓடமாட்டான். யாரோ, எவ்விடத்திய எந்த ஸ்திரீயோ! அவளுக்காக அவன் இம்மாதிரி நெருப்பில் குதித்திருக்க வேண்டியிருக்காது! அவன் பச்சாத்தாபத்தினால் மனம் வருந்தியே தன் உயிரை விட அங்கே சென்றான் என்பது எனக்கு நிச்சயமாகத் தோன்றுகிறது. உண்மையா, இல்லையா, சொல்லம்மா?’ என்றார்.

அசலா தந்தையின் கேள்வியைத் தட்டிக் கழித்துக் கொண்டே, 'பிறரைக் காப்பாற்ற இம்மாதிரி முன்பு இரண்டொரு தடவைகள்கூட அவர் தம் உயிரை ஆபத்திற்குள்ளாக்கிக்கொண் டிருக்கிறார்' என்றாள்.

இந்த வார்த்தை கேதார் பாபுவுக்கு அவ்வளவாகப் பிடிக்கவில்லை. அவர், 'அது வேறு விஷயம், அசலா! ஆனால் இது, நெருப்பில் குதிப்பது! இது நிச்சயமாக அறிந்தே மரணத்தை ஆலிங்கனம் செய்துகொள்வது! இரண்டுக்கும் உள்ள வித்தியாசம் உனக்கு விளங்கவில்லையா?' என்றார்.

அசலா மறுபடி எதிர்வாதம் ஒன்றும் செய்யாமல், 'அது தான் இருக்கவே யிருக்கிறதே! ஆனால் மகான்களாக இருப்பவர்கள் எந்த நிலைமையிலும் பிறர் விபத்திலிருக்கும் பொழுது தம் விபத்தை நினைக்க மாட்டார்கள்' என்றாள்.

கேதார் பாபு உற்சாகத்தினால் துள்ளி எழுந்தார். வேகத்துடன், 'சரியான பேச்சு! நன்றாகச் சொன்னாய்! இதனால்தான் அசலா, நான் உன்னிடம் சொல்லுகிறேன். அவன் ஒரு மகா புருஷன். மகத்தான ஹிருதய முள்ளவன்! அவனுடன் யாரையாவது ஒப்பிட முடியுமா? எத்தனையோ பேர் இருக்கிறார்கள், ஆனால் யார் பேச்சுவாக்கில் ஐயாயிரம் ரூபாய் எடுத்துக் கொடுப்பார்கள், சொல்லேன்? அவன் எது வேண்டுமானாலும் செய்திருக்கட்டும், ரொம்பத் துக்கத்தினால்தான் செய்திருக்கிறான். இதை நான் உன்னிடம் சபத பூர்வமாகச் சொல்லுகிறேன்' என்றார்.

ஆனால் சபதத்திற்கு அவசியமே யில்லை. அந்த உண்மையை அசலா எவ்வளவு அறிவாளோ, அதில் நூறில் ஒரு பங்குகூட இவர் அறியமாட்டார். ஆனால் அவள் பதிலொன்றும் சொல்லவில்லை. ஒரு கணம்வரை, தன் முகத்தில் நிலவிய வெட்கம் வெளிவந்துவிடப் போகிறதே என்ற பயத்தினால், அவள் சட்டென்று தலை குனிந்து மௌன

மானாள். ஆனால் விருத்தரின் பார்வையில் அது படாமலில்லை. அவர் புளகிதமான மனத்துடன், 'மனிதன் தேவதையல்ல — கடைசியில் அவன் மனிதன்தானே! அவன் உடலும் குற்றத்தோடும் குணத்தோடும்தான் போராடுகிறது. தன்னுடைய பலவீனமான நிலைமையில் அவன் காட்டிய ஆத்திரம் தான் அவனுடைய சுபாவமாக இருக்குமென்பது இதன் அர்த்தமல்ல. வெளியே இருப்பவர்கள் எது வேண்டுமானாலும் சொல்லட்டும், அசலா! ஆனால், நாம்கூட இந்த விஷயத்தில் அவன்மீது குற்றமாக எண்ணினால், மற்றவர்களுக்கும் நமக்கும் என்ன வித்தியாசம், சொல்லேன்? பெரிய மனிதர்கள் என்னமோ அநேகர் இருக்கிறார்கள். ஆனால் இம்மாதிரி யாருக்குக் கொடுக்கத் தெரியும்? என்ன எழுதியிருக்கிறது அதில்? இன்னொரு தரம் படி, அம்மா! நெருப்பின் உள்ளேயிருந்து அவனைக் காப்பாற்றிக்கொண்டு வந்தானா? ஆஹா, எவ்வளவு உயர்ந்த ஆத்மா! தேவதை என்று யாரைச் சொல்லுகிறோம்!' என்று சொல்லி, ஒரு பெருமூச்சு விட்டார்.

அசலா முன் போலவே பதில் சொல்லாமல் தலை குனிந்துகொண்டு உட்கார்ந்திருந்தாள்.

கேதார் பாபு ஒரு நிமிஷம் சும்மா யிருந்துவிட்டுப் பிறகு சட்டென்று, 'சரி, நாம் ஒரு தந்தி கொடுத்து அவன் விஷயத்தைத் தெரிந்துகொள்ள வேண்டாமா? அவனுடைய இந்த ஆபத்துக் காலத்தில் கூட நாம் கோபமாக இருப்பது நன்றாக இருக்குமா?' என்றார்.

இந்தத் தடவை அசலா முகம் நிமிர்ந்து, 'ஆனால் நமக்கு அவருடைய விலாசமே தெரியாதே, அப்பா!' என்றாள்.

'விலாசமா? பைஜாபாத் நகரில் நம்ம ஸுரேசனைத் தெரியாதவர்கள் யார் இருக்கிறார்கள்? அவனிடம் எனக்குக் கோபம் என்னமோ ரொம்ப வந்தது, ஆனால் இப்பொழுது

என் மனத்தில் ஒன்றும் இல்லை. ஒரு தந்தி எழுதி இப்பொழுதே அனுப்பம்மா, நான் அவனுடைய சமாசாரத்தை அறிவதற்காக ரொம்ப ஆவலுடையவனாக இருக்கிறேன்' என்றார்.

'இப்பொழுதே அனுப்புகிறேன், அப்பா!' என்று சொல்லி, அவள் தந்தி பாரம் எடுக்க அறைக்கு வெளியே வந்தாளோ இல்லையோ, எதிரே ஸுரேசன் நின்றுகொண்டிருந்தான்.

உள்ளத்தின் ஆழ்ந்த துக்கத்தைச் சகித்துக்கொள்ளும் சிரமம், மனிதன் முகத்தை வெகு சீக்கிரமாக வாட்டி இந்த மாதிரி சோபை யில்லாமல் செய்துவிடுவதை, அசலா தன் வாழ்க்கையில் அப்பொழுதுதான் முதல் முதலாகப் பார்த்தாள்; பார்த்ததும் திடுக்கிட்டுவிட்டாள். சிறிது நேரம்வரை இருவர் வாயிலிருந்தும் வார்த்தை ஒன்றும் வரவில்லை. அதற்குப் பிறகு அவளே பேசினாள். 'அப்பா உட்கார்ந்திருக்கிறார்; வாருங்கள், உள்ளே வாருங்கள்! பைஜாபாத்திலிருந்து எப்பொழுது வந்தீர்கள்? சௌக்கியந்தானே?' என்றாள்.

அறியாமல் அவளுடைய குரலில் அன்பின் வேதனை எவ்வளவு வெளிப்பட்ட தென்பதை அவளால் உணர முடியவில்லை; ஆனால் ஸுரேசன் முற்றிலும் ஒடிந்து விழுபவனைப் போலாகிவிட்டான். ஆயினும்கூட, அன்று அவன் சென்ற சில தினங்களின் கடினமான படிப்பினையை வீண்போக விடவில்லை. அன்று, அவன் அசலாவின் வர்ணப் பாதங்களின் முன்பு மண்டியிட்டுக் குனிந்து தன்னுடைய ஆழ்ந்த கொடும் செயலுக்கு மன்னிப்புக் கோரும்படி முடிவு செய்யத் தூண்டிய அடக்கொணாத தன் அபிலாஷைகளை முற்றிலும் அடக்கிக்கொண்டு, செருக்குடன், 'நான் பைஜாபாத் சென்ற விஷயம் தங்களுக்கு எப்படித் தெரிந்தது?' என்றான்.

அசலா அதே போல அன்பினால் தோய்ந்த குரலில், 'இப்பொழுதுதான் பத்திரிகையில் படித்து, அப்பா என்னைத் தங்களுக்குத் தந்தி கொடுக்கச் சொன்னார். தங்களுக்காக அவர் ரொம்பவும் கவலைப்பட்டுக்கொண் டிருக்கிறார். வாருங் கள், ஒரு தரம் அவரைச் சந்தியுங்கள்!' என்று சொல்லி, அசலா திரும்பும் பொழுது, ஸுரேசன், 'அவர் ஒருகால் என்னை மன்னிக்க முடியும்; ஆனால் நீ என்னை எப்படி மன்னித்தாய், அசலா?' என்றான்.

அசலாவின் இதழ்களில் சிரிப்பின் சின்னம் சற்றே தோன்றியது. அவள், 'மன்னிப்பிற்கு அவசியமே ஏற் படவில்லை. நான் ஒரு நாளும் தங்களிடம் கோபித்துக் கொள்ளவில்லை. வாருங்கள், உள்ளே வாருங்கள்!' என்றாள்.



# XIII

'மஹிமின் கடிதத்தின் மூலம் கலியாணத் தகவல் தெரிந்து சீக்கிரமாக இங்கு வந்தேன்' என்று ஸுரேசன் சொன்ன பொழுது, கேதார் பாபு வெட்கத்தால் சஞ்சலமடைந்தார். ஆனால் அசலாவின் முக பாவத்தில் ஒன்றும் வெளிப்படவில்லை.

'மஹிமின் கலியாணத்திற்கு நான் வரவேண்டியே இருந்தது, இல்லாவிட்டால் இன்னும் சில நாள் ஆஸ்பத்திரியில் இருந்து வருவதே நல்லதாகும்' என்றான் ஸுரேசன்.

கேதார் பாபு மிக்க ஆத்திரத்துடன், 'ஆஸ்பத்திரியில் ஏன், ஸுரேஷ்? அம்மாதிரி ஒன்றும்......' என்றார்.

'இல்லை, அம்மாதிரி ஒன்றுமில்லை—ஆனால், ஆமாம், உடம்பு சற்று சரியில்லை.'

கேதார் பாபு திடமடைந்து, 'இதற்காகக் கடவுளுக்குக் கோடி நமஸ்காரம். அசலா எப்பொழுது பத்திரிகையைப் படித்து உன்னுடைய மகத்தான கதையைச் சொன்னாளோ, ஸுரேஷ், உன்னிடம் நான் என்ன சொல்வேன்,—ஆனந்தத்தாலும், கர்வத்தாலும் என் கண்களில் கண்ணீர் பெருகலாயிற்று!' என்று சொல்லி, மனத்திற்குள், 'கடவுளே, நான் தன்யன்! இம்மாதிரி மனிதனுடைய நண்பன்' என்று சொல்லிக்கொண்டே இரு கரங்களையும் சிரமேற் குவித்தார். சிறிது பொறுத்து மீண்டும், 'ஆனால் ஒன்று நான் சொல்ல முடியும். உன் உயிரை அடிக்கடி இம்

மாதிரி ஆபத்திற் குள்ளாக்குவது உசிதமா? ஒரு சாதாரண ஸ்திரீயின் உயிரைக் காப்பாற்றுவதில் இவ்வளவு பெரிய மகத்தான ஆத்மா ஒன்று போய்விட்டால் உலகத்திற்கு ஒரு பெரிய நஷ்டம் ஏற்பட்டு விடாதா?' என்றார்.

'என்ன நஷ்டம் ஏற்பட்டுவிடப் போகிறது?' என்று சொல்லி, ஸுரேசன் வெட்கத்துடன் ஒரு சிரிப்புச் சிரித்துக் கொண்டே, முகம் திருப்பினானோ இல்லையோ, அசலா அசையாத பார்வையுடன் தன் பக்கமே பார்த்துக்கொண் டிருப்பதையும், அப்பொழுதுதான் அவள் தலை குனிந்து கொண்டதையும் கண்டான்.

கேதார் பாபு திரும்பத் திரும்ப, 'அம்மாதிரி வார்த்தையை வாயினால் சொல்வதுகூட உசிதமல்ல! காரணம், உன் மனிதர்களுக்கு இதனால் எவ்வளவு வருத்தம் உண்டாகிறது என்பதற்கு ஓர் அளவில்லை' என்று சொல்லிக் கொண்டிருந்தார்.

ஸுரேசன் சிரித்துக்கொண்டே, 'என் மனிதர் என்று எனக்கு யாரும் இல்லையே, கேதார் பாபு. ஒரு அத்தை இருக்கிறாள். நான் போனால் அவளுக்குத்தான் கொஞ்சம் துக்கம் உண்டாகும்' என்றான்.

அவன் முகத்தில் சிரிப்பைக் கண்டும், அவன் வாயிலிருந்து தனக்கு ஒருவருமில்லை என்று கேட்டபொழுதும், கேதார் பாபுவின் உலர்ந்த கண்கள் கண்ணீரால் நிறைந்தன.

'ஒரு அத்தைக்கு மாத்திரம்தான் துக்கம் ஏற்படுமா, ஸுரேஷ்? அந்த மாதிரி சொல்லாதே, அப்பா, இந்தக் கிழவனுக்குக்கூட மட்டான துக்கமா உண்டாகும்? எப்படியாவது இருக்கட்டும், நான் எத்தனை நாள் இருக்கிறேனோ அத்தனை நாள் வரையிலாவது நீ உன் சரீரத்தை நன்றாக வைத்துக்கொள், இதுதான் என்னுடைய வற்புறுத்தல்!' என்றார்.

கடிகாரத்தில் பத்து மணி யடித்தது. வீட்டுக்குப் போவதற்குத் தயாராக, ஸுரேசன், சட்டென்று இரு கைகளையும் குவித்து, 'கேதார் பாபு, என்னுடைய ஒரு பிரார்த்தனை, மஹிமின் விவாகம் எங்கள் வீட்டிலேயே நடக்க நிச்சயமாகியிருக்கிறது; ஆனால் அது நாளைய மறுதினம் நடக்கும். ஆகையால் நாளை இரவே தாங்கள் இந்த அதமனின் வீட்டுக்கு எழுந்தருளவேண்டும். இல்லாவிட்டால் தாங்கள் என்னை மன்னித்துவிட்டீர்கள் என்ற நம்பிக்கை எனக்கு ஏற்படாது. சொல்லுங்கள், இந்தப் பிக்ஷையை அளிப்பீர்களா?' என்று சொல்லி, அவன் சட்டென்று குனிந்து, கேதார் பாபுவின் பாதங்களைத் தொட விரும்பினான். இதற்குள், கேதார் பாபு வருத்தத்துடன் அவனைத் தடுப்பதற்காக எழுந்தாரோ என்னமோ, அவனுடைய விளக்கமற்ற வேதனை நிறைந்த குரலைக் கேட்டுத் துடித்தெழுந்துவிட்டார். அவன் முதுகில் நெருப்புக் காயங்கள் காரணமாக கட்டுக் கட்டியிருந்தது. அதுவரை அவன் அதை மேல்வேஷ்டியால் மறைத்திருந்தான். அது தெரியாத காரணத்தால், கேதார் பாபுவின் கை அங்கே பட்டதும் கட்டு நழுவிவிட்டது. அப்பொழுது மறைந்திருந்த காயங்களில் அவர் பார்வை விழுந்ததும் அலறிவிட்டார். மின்னல் வெட்டியதைப் போல அசலா எழுந்து, கட்டைப் பிடித்துக்கொண்டு, 'பயப்பட வேண்டியதில்லை, நான் சரிசெய்துவிடுகிறேன்!' என்று சொல்லி, ஸுரேசனை அங்கிருந்த சோபாவில் உட்கார வைத்து, கட்டை முடிந்தவரை சரியாகக் கட்டலானாள்.

கேதார் பாபு தம் நாற்காலியில் கண்ணை மூடிக்கொண்டு உட்கார்ந்திருந்தார். சிறிது நேரம்வரை அவர் வாயிலிருந்து வார்த்தை ஒன்றும் வெளிவரவில்லை. சோபாவின் முதுகில் இரு முழங்கைகளையும் வைத்துக்கொண்டு, பின்னால் நின்றுகொண்டு, பேசாமல் அசலா கட்டு கட்டிக்

கொண்டிருந்தாள். பார்த்துக்கொண் டிருக்கும்போதே அவள் இரு கண்களிலும் கண்ணீர் வந்துவிட்டது. சிறிது நேரத்திற்குப் பிறகு, முத்தைப் போல ஒன்றுக்குப் பின் ஒன்றாகத் துளிகள் உதிரலாயின. ஸுரேசனுக்கு இதொன்றும் தெரியவில்லை. அவனுடைய நினைவும் இங்கு இல்லை. அவன் பேசாமல் கண்ணை மூடிக்கொண்டு உட்கார்ந்து, தன்னுடைய ஹிருதயத்தில் தன்னுடைய பிரேம பாத்திரத்தின் இனிய கையின் ஸ்பரிசத்தை அநுபவித்துக்கொண்டிருந்தான்.

ஒருவிதமாகக் கண்ணீரைத் துடைத்துக்கொண்டு, சும்மாவாவது, 'தாங்கள் இன்று என் முன் ஒரு பிரதிக்கினை செய்யவேண்டும்!' என்றாள்.

ஸுரேசன் திடுக்கிட்டுக் கவனம் கலைந்தான். ஆயினும் முன்போல மிருதுவான குரலில், 'என்ன பிரதிக்கினை?' என்றான்.

'இம்மாதிரி இனிமேல் தாங்கள் தங்கள் உயிரை ஆபத்துக் குள்ளாக்கிக்கொள்ளக் கூடாது!'

'ஆனால் நான் அறிந்துகொண்டே உயிரை நஷ்டம் செய்துகொள்ள விரும்பவில்லை. பிறர் ஆபத்திலிருக்கும் போது, எனக்கு என்னுடைய நன்மை தீமையின் ஞாபகம் இருப்பதில்லை. இது என்னுடைய சிறு வயது முதல் வந்த சுபாவம்!'

அசலா இதற்குப் பதில் வாதம் ஒன்றும் செய்யவில்லை. ஆனால், உடனே அவள் ஒரு நீண்ட பெருமூச்சு விட்டுக் கொண்டாள். ஸுரேசன் அதை அறிந்துகொண்டான். கட்டுக் கட்டி முடிந்ததும், ஸுரேசன் எழுந்திருந்து மெதுவாக, 'ஆனால் நாளை இந்த ஏழையின் வீட்டுக்கு எழுந்தருள வேண்டும்' என்று சொல்லிக்கொண்டிருக்கும்போதே, அவன் கண்களில் கண்ணீர் வந்துவிட்டது. ஆனால் அவன் குரலில் வியாகூலம் வெளிப்படவில்லை.

அசலா கீழே பார்த்துக்கொண்டே தலை யசைத்து, ‘ சரி ’ என்றாள்.

ஸுரேசன் கேதார் பாபுவுக்கு நமஸ்காரம் செய்து சிரித்துக்கொண்டே, ‘ பார்க்கலாம், என்னை ஏமாற்றி விடா தீர்கள் !’ என்று சொல்லி, அசலாவின் பக்கம் பார்த்துக் கொண்டே, மறுபடியும் ஒரு மௌன வேண்டுகோள் விடுத்து விட்டு, மெள்ள வெளியே சென்றான்.

மறுநாள் குறிப்பிட்ட சமயத்திற்கு ஸுரேசனின் வண்டி வந்தது. கேதார் பாபு தயாராகவே இருந்தார். தம் பெண்ணைக் கூட அழைத்துக்கொண்டு ஸுரேசன் வீட்டுக் குச் சென்றார்.

ஸுரேசன் வீட்டு கேட்டில் நுழைந்ததும், கேதார் பாபு பிரமித்துப் போனார். அவன் பெரிய மனிதன் என்பது அவருக்குத் தெரியும். ஆனால் எவ்வளவு பெரிய மனிதன் என்பதை அளவிடுவது கடினமாக இருந்தது ; ஆனால் இன்று இந்த விஷயம் முற்றிலும் சந்தேகமறத் தெரிந்து விட்டதால், அவருக்கு நிம்மதி ஏற்பட்டது.

ஸுரேசன் வந்து இருவரையும் வரவேற்று, சிரித்துக் கொண்டே, ‘ கேதார் பாபு, மஹிமின் பிடிவாதத்தை இன்று கூடச் சிதைக்க முடியவில்லை. நாளை மத்தியானத்திற்கு முன்பு இந்த வீட்டில் நுழைய எவ்விதத்திலும் அவன் ஒப்புக் கொள்ளவில்லை ’ என்றான்.

கேதார் பாபு அவன் வார்த்தைகளுக்குப் பதில் ஒன்றும் சொல்லவில்லை. மூவரும் சென்று ஹாலில் அமர்ந்ததும், சற்று வயதான ஸ்திரீ ஒருத்தி கதவின் மறைவிலிருந்து வெளிவந்து, அசலாவின் கைகளைப் பிடித்து அவளை உள்ளே அழைத்துச் சென்றாள். அவளுடைய அறையில் ஒரு சமுக்காளம் விரிக் கப்பட்டிருந்தது. அதில் அசலாவை மரியாதையுடன் உட் காரவைத்து, அவள் தன்னை அறிமுகப் படுத்திக்கொண்டாள்.

'நான் உறவில் உனக்கு மாமியார் ஆகவேண்டும், நான் மஹூ மின் அத்தை!' என்முள்.

அசலா நமஸ்காரம் செய்து, அவள் பாததூளியைச் சிரமேல் தரித்துக்கொண்டே, ஆச்சரியத்துடன், 'தாங்கள் இங்கு எப்பொழுது வந்தீர்கள்?' என்முள்.

மஹூமுக்கு அத்தை இருக்கிருள் என்ற விஷயம் அசலாவுக்குத் தெரியாது. அவளுடைய ஆச்சரியத்தை அநுமானம் செய்துகொண்டு, அந்த ஸ்திரீ, 'நான் இங்கேயேதான் இருக்கிறேன், நான் ஸுரேசனின் அத்தை; ஆனல் மஹூமும் அந்நியன் அல்லவே! ஆகையால் அவனுக்கும் நான் அத்தை முறை ஆகிறேன், அம்மா!' என்முள்.

அவளுடைய சுபாவமான இனிய குரலில் அந்தரங்கமான ஓர் அன்பு வெளிப்பட்டது. ஒரே கணத்தில் அசலாவின் ஹிருதயம் ஒரு கலக்கத்தை அடைந்தது. அவளுக்குத் தாயில்லை, அந்த இடத்தைப் பூர்த்தி செய்து தன்னுடையவள் என்று எண்ணிக்கொள்ள ஏற்ற ஸ்திரீகள் யாரும் வீட்டில் இருந்ததில்லை. அவளுக்கு நினைவு வந்ததிலிருந்து தன் தந்தையின் அன்பிலேதான் இவ்வளவு பெரியவளானுள். ஆனல் அந்த அன்பு அவள் ஹிருதயத்தில் எவ்வளவு இடத்தைக் காலியாக வைத்திருந்தது என்பது, இன்று ஒரே கணத்தில் வெளிப்பட்டுவிட்டது. இன்று பிறர் வீட்டில், வேருெருவருடைய அத்தை, 'நாட்டுப் பெண்' என்று சொல்லி, அன்புடனும், ஆதரவுடனும் அவளைத் தன் அருகில் உட்கார வைத்துக்கொண்டாள். முதலில் என்னமோ இந்தப் புதிய அழைப்பினுல் அவளுக்குச் சற்று வெட்கம் ஏற்பட்டது; ஆனல் பின்னல் அதனுடைய மாதுரியமும் கௌரவமும் அவள் உள்ளத்தில் சென்று வெகு நேரம்வரை ஒலித்துக்கொண்டிருந்தன.

பார்த்துக்கொண்டு இருக்கும் போதே இருவரிடையே யும் பேச்சு வார்த்தைகள் ஆரம்பமாயின. அசலா வெட்கம் தவழும் முகத்துடன், 'சரி, அத்தை! தாங்கள் என்னைச் சட்டென்று தங்கள் அருகில் உட்கார வைத்துக்கொண்டீர்கள், நாங்கள் பிரம்ம சமாஜிகள் ஆயிற்றே! என்னிடம் உங்களுக்கு வெறுப்பாக இல்லையா?' என்றாள்.

அத்தை சட்டென்று அவள் முகவாய்க் கட்டையைத் தன் விரல்களால் தொட்டு முத்தமிட்டுக்கொண்டு, 'உன்னிடம் ஏன் அம்மா வெறுப்படைய வேண்டும்?' என்று சொல்லிச் சற்று சிரித்துவிட்டு, 'ஹிந்துக்கள் வீட்டு ஸ்திரீகள் அவ்வளவு முட்டாள்களா? நாட்டுப் பெண்ணின் தர்மம் வேறானதாலேயே உன்னைப் போன்ற பெண்களைப் பக்கத்தில் உட்கார வைத்துக்கொள்ள சங்கோசப்பட அவ்வளவு கீழானவர்களா? பிறகு வெறுப்பைப்பற்றி என்ன பேச்சு இருக்கிறது, அம்மா!' என்றாள்.

அசலா மிக்க வெட்க மடைந்தவளாய், 'அத்தை, என்னை மன்னித்துக் கொள்ளுங்கள், எனக்குத் தெரியாது. எங்கள் சமாஜத்தைவிட்டு வெளியேயுள்ள ஸ்திரீகளிடம் சேர்ந்து பழக எனக்குச் சந்தர்ப்பம் வாய்க்கவில்லை; அவர்கள் எங்கள்மேல் வெறுப்பாக இருக்கிறார்கள், ஒரு முறை அருகில் உட்கார்ந்து எழுந்தால் கூட அதற்காக ஸ்நானம் செய்ய வேண்டியிருக்கிறது என்று கேள்விப்பட் டிருக்கிறேன்' என்றாள்.

'வெறுப்பல்ல, அம்மா! அது ஒரு ஆசாரம். எங்களுடைய வெளி நடவடிக்கைகளைப் பார்த்து உங்களுக்கு விசேஷமாக அப்படித்தான் தோன்றலாம்; ஆனால் உண்மையாகச் சொல்கிறேன், யாரிடமும் நாங்கள் உண்மையாக வெறுப்புக் கொள்வதில்லை. எங்கள் ஊரில் வீட்டில் இன்றுவரை "பாக்தி" ஜாதியைச் சேர்ந்த கிழவி ஒருத்தி இருக்கிறாள்.

எனக்கு அவளிடம் எவ்வளவு அன்பு என்பதைச் சொல்லவே முடியாது !' என்று சொல்லிச் சற்று நிறுத்தி, மறுபடியும், 'சரி, உன்னிடம் ஒன்று கேட்கிறேன். உனக்கு இந்த எண்ணம் எப்படி வந்தது ? ஸுரேஷ் வாயினின்றும் கேட்டா, அல்லது என்னைப் பார்த்தா ?' என்றாள்.

ஸுரேசனைப்பற்றிப் பேசியதால் அசலா மனத்திற்குள் வெட்கமடைந்து, 'வெகு நாளைக்கு முன் அவரும் ஒரு தரம் சொல்லியிருக்கிறார் ' என்றாள்.

' அது அவன் சுபாவம். ஏதாவது ஒரு விஷயம் மனத்தில் தோன்றினால், பிறகு கேட்க வேண்டாம், அதை நாலா பக்கமும் சொல்லிக்கொண்டு திரிவான். பிரம்ம சமாஜிகளுடன் ஒருநாள் கூடச் சேர்ந்து பழகாமலே அவர்களிடம் அவன் ரொம்ப வெறுப்புக் கொள்வதாக நினைத்துக்கொண்டிருந்தான். இந்த விஷயமாக மஹிமுடன் அவன் எத்தனையோ தடவை சச்சரவிட்டிருக்கிறான். ஆனால், நான்தானே அம்மா, அவனை ஒருவிதமாக எடுத்து வளர்த்தவள், எனக்குத் தெரியும், அவன் யாரிடமும் வெறுப்புக் கொள்ள மாட்டான், அவனிடம் வெறுப்பு கொள்ளும் சக்தியும் இல்லை. உங்கள் விஷயத்தில்தான் பார்க்கக் கூடாதா, அம்மா ? என்றைய தினம் உங்களைப் பார்த்தானோ அன்றைய தினத்திலிருந்து— ' என்றாள்.

ஆனால், அவள் தன்னுடைய வார்த்தையைப் பூர்த்தி செய்ய முடியவில்லை. அசலாவின் முகத்தில் பார்வை விழுந்ததுமே திடீரென்று நடுவிலேயே அது தடைபட்டுவிட்டது. தங்களைப்பற்றி இவளுக்கு எவ்வளவு தூரம் தெரியும் என்பதை அசலாவினால் அறியமுடியா விட்டாலும், அத்தைக்கு என்னமோ கொஞ்சம் கொஞ்சம் தெரிந்தே யிருக்கவேண்டும் என்ற சந்தேகம் அவளுக்கு ஏற்பட்டது. ஒரு நிமிஷம் இருவரும் மௌனமாக இருந்தார்கள். கடைசியில் அசலா தன்

வெட்கத்தை ஒரு மாதிரி அடக்கிக்கொண்டு பேசலானாள். 'அத்தை, அப்படியானால் ஸுரேஷ் பாபுவைத் தாங்கள்தான் வளர்த்தீர்களா?' என்று கேட்டாள்.

அத்தை உணர்ச்சி பொங்கியவளாய், 'ஆமாம் அம்மா, நானேதான் அவனை வளர்த்தேன். இரண்டு வயதில் அவனுடைய தாய் தந்தையர்கள் இறந்துபோனார்கள். இன்னமும் என் காரியம் பூர்த்தியாகவில்லை. இன்னும் என் தலையிலிருந்து பாரம் இறங்கவில்லை. பிறருடைய துக்கம், கஷ்டம், ஆபத்து, விபத்துக்களை அவனால் சகிக்க முடிவதில்லை; தன்னுடைய உயிரின்மேல் உள்ள ஆசையை விட்டு, அவன் ஆபத்தில் குதித்துவிடுகிறான். இரவு பகல் பயந்து பயந்து எப்படி நாள் கழிக்கிறேன் என்பதை நான் உன்னிடம் எப்படிச் சொல்லப் போகிறேன்!' என்றாள்.

அசலா மெதுவாக, 'பைஜாபாத் சம்பவத்தைத் தாங்களும் கேட்டிருப்பீர்கள்!' என்றாள்.

அத்தை தலை அசைத்துக்கொண்டு, 'ஆஹா, கேட்காமல் என்ன! ஆகையால்தான் பகவானை எப்பொழுதும் பிரார்த்திக்கிறேன்: "பகவானே, நான் உயிரோடு இருக்கும் பொழுது என்னைத், தலையிலடித்துப் பாதாளத்திற்குத் தள்ளும் எந்த விஷயத்தையும் எனக்குக் காட்டாதே! இதை என்னால் ஒருபொழுதும் சகிக்க முடியாது!"' என்று சொல்லிக்கொண்டிருக்கும்போதே அவளுடைய குரல் தழுதழுத்தது. அவளுடைய தாயன்பு மண்டிய வாயினின்றும் வெளிவந்த பிரார்த்தனையைக் கேட்டு, அசலாவின் கண்களிலும் கண்ணீர் வந்துவிட்டது. அவள் கருணை நிறைந்த குரலுடன், 'நீங்கள் ஏன் அத்தை அவரைத் தடுக்கக் கூடாது?' என்று கேட்டாள்.

அத்தை கண்ணீருக் கிடையில் சற்று சிரித்து, 'தடையா? நான் தடுத்து என்னம்மா ஆகும்? யாருடைய

தடை உண்மையாகச் சற்று பலன் அளிக்குமோ, அவளைப் பல வருஷங்களாக நான் தேடிக்கொண் டிருக்கிறேன். ஆனால் அவனைக் கட்டுப்படுத்துவது என்றால் ஒவ்வொரு பெண்ணாலும் முடியுமா? அம்மா,திரிப் பெண்ணைக் கடவுளே கொடுக்காவிட்டால், நான் எங்கிருந்து அம்மா, பெற முடியும்?' என்றாள்.

அசலா சிறிது நேரம் பேசாம லிருந்துவிட்டு, மெதுவாக, 'தங்கள் மனம் நாடும் பெண் எங்கும் கிடைக்க வில்லையா?' என்றாள்.

'உன்னிடம் சொல்ல வில்லையா, அம்மா, பகவான் கொடுக்காமல் யாருக்கும், எப்பொழுதும், எதுவும் கிடைப்பதில்லை. இந்த விஷயங்களில் கவனமே செலுத்தாத ஸுரேசனே என்னிடம் வந்து, "அத்தை, இப்பொழுது உனக்கு ஒரு பணிப் பெண் கொண்டுவரப் போகிறேன்" என்று சொன்ன போது, எனக்கு ஏற்பட்ட ஆனந்தத்தை வாயால் சொல்லி முடியாது. மனத்திற்குள் நான் ஆசீர்வாதம் அளித்து, "உன் வாய்க்குச் சர்க்கரைதான் அப்பா, போட வேண்டும்! உன் வார்த்தை உண்மையாகட்டும். பிள்ளையும் நாட்டுப் பெண்ணும் மணமாகி வீட்டிற்கு அழைத்து வரப்படும் நாளை என்று காண்பேன்!" என்று சொல்லிக்கொண்டேன். "எனக்கு ஒரு தரம் கொண்டு காட்டு!" என்று ஸுரேசனிடம் எத்தனையோ தடவை கேட்டேன். ஆனால் அவன் ஒப்புக் கொள்ளவில்லை. சிரித்துக்கொண்டே, "அத்தை, ஆசீர் வாதத்தன்று ஒரே தடவையாகப் பார்த்துவிட்டு நாள் நிச்சயம் செய்துகொண்டு வரலாம்" என்று சொல்லிவிட் டான். அதற்குப் பிறகு திடீரென்று ஒரு நாள் வந்து, "அத்தை, உபாயம் ஒன்றும் பலிக்கவில்லை. நான் ராத்திரி வண்டியில் மேற்குப் பக்கம் பிரயாணம் போகிறேன்" என்றான். "என்ன விஷயம், திறந்து சொல்லு?" என்று நான்

எத்தனையோ தடவை கேட்டேன். ஆனால் அவன் பதிலே சொல்லவில்லை; அன்றிரவே போய்விட்டான். நான் மனத்திற்குள், "என் குழந்தையின் இச்சையினால் மாத்திரம் அது ஆகிவிடாது. அந்தப் பெண்ணும் ஜன்ம ஜன்மாந்தரமாகத் தவம் செய்திருக்க வேண்டாமா?" என்று எண்ணினேன். ஏன், சரிதானே அம்மா?' என்றாள் அத்தை.

அசலா பேசாமல் தலையை அசைத்தாள். அத்தைக்குத் தெரியாத அந்தப் பெண் யார் என்பது அவளுக்கு விளங்கியது. அவள் உள்ளத்திலிருந்த பாறை ஒன்று இறங்கியதைப் போன்று என்னவோ ஒரு முறை தோன்றியது. ஆனால் அடுத்த க்ஷணமே அந்தப் பாறை சுலபமாக அகன்றுவிடவில்லை, அவளுடைய ஹிருதயத்தின் சில இடங்களையும் தன்னுடன் பிய்த்துக்கொண்டு சென்றது என்பதையும் உணர்ந்தாள்.

சாப்பாடு தயாரான பிறகு அத்தை அசலாவைத் தனியாக உட்காரவைத்துப் போஜனம் செய்வித்தாள். பிறகு அவளைத் தன்னுடன் அழைத்துக்கொண்டு வீட்டின் ஒவ்வொரு அறை, சாமான்கள் யாவற்றையும் சுற்றிக் காட்டலானாள். காட்டிக்கொண்டே ஒரு பெருமூச்சு விட்டுக்கொண்டு, 'பகவான் கிருபையினால் ஒன்றுக்கும் குறைவில்லை, அம்மா! ஆனால் இவைகளெல்லாம் லக்ஷ்மி இல்லாத வைகுண்டம் போல்தான் தோன்றுகிறது! சிற்சில சமயம் கண்களின் கண்ணீரைத் தடுக்க முடியவில்லை, அம்மா!' என்றாள்.

வேலைக்காரன் வந்து, வெளியே கேதார் பாபு புறப்படத் தயாராக இருப்பதாகச் சொன்னான். அசலா நமஸ்காரம் செய்து பாத தூளியைச் சிரமேல் தரித்துக்கொண்டதும், அத்தை அவளுடைய ஒரு கையைப் பிடித்துக்கொண்டு சற்று தயக்கத்துடன், 'நீ ஒன்றும் நினைத்துக்கொள்ளா விட்

டால், நான் உன்னிடம் ஒன்று கேட்க விரும்புகிறேன்' என்று சுபாவமாகக் கேட்டாள்.

அசலா அவள் முகத்தைப் பார்த்து சற்றே சிரித்தாள்.

'ஸுரேசன் வாயிலாக உன்னைப் பற்றியும், மஹிமைப் பற்றியும் எல்லாவற்றையும் கேள்விப்பட்டேன்: அவன் மூலமாகவே இதையும் கேள்விப்பட்டேன். மஹிம் ஏழை, அதன் காரணமாக உன் தந்தைக்கு இஷ்டமில்லை; உன் காரணமாகவேதான்—' என்றாள்.

அசலா தலை குனிந்து மிருதுவான குரலில், 'உண்மைதான், அத்தே!' என்றாள்.

அத்தை, திடீரென்று பெருத்த ஆவேகத்துடன், அசலாவின் இரு கரங்களையும் அழுத்தி, 'அப்படித்தான் அம்மா இருக்கவேண்டும்! யாரிடம் பிரியம் ஏற்பட்டுவிட்டதோ, அவன் முன் பணம், காசு, மற்ற செல்வங்கள் — இவை யெல்லாம் ஒரு பொருளா? மனத்தில் எந்த விதமான வருத்தமும் வைத்துக்கொள்ளாதே, அம்மா! நான் மஹிமை நன்றாக அறிவேன். அவன் அப்படிப்பட்ட பையன்தான்; அவனுக்காக நீ எவ்வளவு துக்கத்தைச் சகிக்க நேர்ந்தாலும், ஒரு நாள் இல்லாவிட்டால் ஒரு நாள், அது பலன் கொடுத்தே தீரும். பகவான் இவ்வளவு ஆழ்ந்த அன்பைக் கவனிக்காமலிருக்க முடியாது. இதை நான் உன்னிடம் நிச்சயமாகச் சொல்லி வைக்கிறேன்' என்றாள்.

அசலா மறுபடியும் ஒரு முறை குனிந்து அவள் பாதங்களைத் தொட்டாள்.

அத்தை அவளுடைய முகவாய்க் கட்டையைத் தொட்டுத் தன் கைகளை முத்தமிட்டுக்கொண்டு, மிருதுவான குரலில், 'ஆஹா, இம்மாதிரி ஒரு நாட்டுப் பெண்ணை அடைந்து நானும் குடும்பம் நடத்த முடியுமானால்........!' என்றாள்.

ஸுரேசன் வந்து, இருவரையும் வண்டியில் அமர்த்தி, பேசாமல் நமஸ்காரம் செய்து திரும்பினான். போகும் பொழுது லாந்தரின் வெளிச்சத்தில் ஒரு கணம் அவனுடைய முகம் அசலாவின் பார்வையைக் கவர்ந்தது. அந்த முகத்தில் என்ன இருந்தது என்பதைக் கடவுள்தான் அறிவார்; ஆனால் அடக்க முடியாத ஒரு நெகிழ்ச்சி அவள் கண்டம் வரை வந்து வெளிப்பட முயற்சித்தது. வண்டி வேகமாகச் சாலைக்கு வந்தது. சாலையில் கூட்டம் அப்பொழுது குறைந்துவிட்டது. அங்கே பார்த்ததும் திடீரென்று அவளுக்குத் தான் அதுவரை கனவு கண்டுகொண்டிருந்ததாகத் தோன்றியது. அது சுகத்தினுடையதா, துக்கத்தினுடையதா என்பதைச் சொல்ல முடியாது. கேதார் பாபு அதுவரை சும்மா உட்கார்ந்திருந்தார், ஒருகால் ஸுரேசனுடைய ஐசுவரியத்தின் பிரபாவம் அவர் மூளையில் சுழன்றுகொண்டிருந்ததோ என்னமோ? திடீரென்று ஒரு பெருமூச்சு விட்டுக்கொண்டு, 'ஆமாம் பெரிய மனிதன்தான்!' என்று சொன்னார்.

ஆனால் பெண்ணின் தரப்பிலிருந்து யாதொரு பதிலும் வரவில்லை. உற்சாகக் குறைவினால் பாக்கி வழியை அவர் பேசாமலே கடந்தார். வண்டி அவர் வீட்டு வாசலில் வந்து நின்றது. வண்டிக்காரன் கதவைத் திறந்துவிட்டு நின்ற பொழுது மீண்டும் அவருக்கு நினைவு வந்தது; அவர் ஒரு நீண்ட பெருமூச்சுடன், மனத்திற்குள், 'ஸுரேசனை நாம் யாரும் அறியவில்லை!' என்று சொல்லிக்கொண்டார்.

## XIV

அன்று அசலாவுக்குக் கலியாணம். கலியாணப் பந்தலில் ஸுரேசன் ஒரு கணம்தான் காணப்பட்டான். அதன் பிறகு அவன் எங்கேயோ மறைந்து போனான். ராத்திரி வரை கேதார் பாபுவின் வீட்டில் அவன் தகவலே இல்லை.

கலியாணமாகி இரண்டொரு நாள்வரை அசலாவின் மனம் கொந்தளித்துக்கொண் டிருந்தது. அன்று ஒருநாள் தான் விருந்துக்கு வந்திருந்த பொழுது ஸுரேசன் அத்தை சொன்ன வார்த்தைகளை அவள் மறக்கவில்லை; இன்று அதனால் அவளுக்கு விடுதலை கிடைத்துவிட்டது.

மஹிமின் அசையாத கம்பீரம் இன்றும் அப்படியேதான் இருந்தது. ஆனந்தம், நிரானந்தம் இவைகளின் வெளிப் பிரகாசம் சற்றுக்கூட அவன் முகத்தில் தென்படவில்லை. ஆயினும் 'சுப திருஷ்டி'யின் போது அந்த முகத்தைப் பார்த்ததும், அசலாவின் உள்ளம் முழுமையும் ஆனந்தத்தாலும், மாதுரியத்தாலும் நிறைந்தது. மனத்திற்குள் கணவனின் சரணங்களைச் சிரமேல் வைத்து, அந்தக்கரண சுத்தமாக, 'பிரபு! இனி எனக்கு ஒரு பயமுமில்லை. உங்களுடன் எங்கு எந்த நிலைமையில் இருந்தாலும் அதுவே எனக்கு சுவர்க்கம்; இன்று முதல் வாழ்க்கையில் உங்களுடைய குடிசையே எனக்கு அரண்மனை' என்று சொல்லிக்கொண்டாள்.

அசலாவின் மாமியார் வீட்டுக்காரர்கள் விடைபெற்றுக் கொண்ட அன்று, கேதார் பாபு தம் சட்டைத் தலைப்பினால்

கண்ணீரைத் துடைத்துக்கொண்டே, ‘ அம்மா அசலா, என்னுடைய ஆசீர்வாதம். கணவனுடன் துக்கம் தரித்திரங்களை அங்கீகாரம் செய்துகொண்டு வாழ்க்கை வழியில் — கடமைப் பாதையில் — விக்கினமின்றி முன்னேறிக்கொண்டு போ! பகவான் உங்களுக்கு நன்மை செய்வார்!’ என்று சொல்லி, பக்கத்து அறைக்குச் சென்றுவிட்டார்.

அதற்குப் பிறகு, ஆவணி மாதத்தில், மங்கிய பகலில், மழையின்றி மேகங்களால் சூழப்பட்ட ஆகாயத்தின் கீழே, சேறும் சகதியும் நிறைந்த ஒரு நெருக்கமான கிராம வழியாகப் பல்லக்கில் ஏறிக்கொண்டு அசலா ஒரு நாள் தன் கணவன் வீடு வந்து சேர்ந்தாள். ஆனால் இந்த வழியிலேயே அவளுடைய கலியாணத்தின் பாதி சௌந்தரியம் போய்விட்டது போலிருந்தது.

பட்டிக்காட்டுப் பிராந்தியத்தைப் பற்றிய பரிசயம் அவளுக்குப் புஸ்தகத்தின் மூலமாகத்தான் ஏற்பட்டிருந்தது. அந்த விவரத்தில் தரித்திரம் துக்கம் இவைகளைப் பற்றி ஆயிரம் தான் எழுதியிருந்தாலும் அந்த வரிகளில் கவிதை இருந்தது. கற்பனையின் நறுமணம் இருந்தது. பல்லக்கிலிருந்து இறங்கி வீட்டிற்குள் சென்று நாற்புறமும் பார்க்கலானாள்; ஆனால் எந்தப் பக்கத்திலும் கவித்துவத்தின் யாதொரு சின்னமும் அவள் உள்ளத்தில் படியவில்லை. அவளுடைய கற்பனைக் கிராமம் உண்மைப் பார்வையில் அப்படி ஆனந்தமற்றிருந்தது. நிர்ஜனமான மண் வீடு. அதிலோ அந்த மாதிரி ஈரமும், இருட்டும் — கதவும், ஜன்னலும் எவ்வளவு சிறியவை — மேலே வைக்கோலாலும், விழலினாலும் ஆன கூரை — இவைகளை அவள் கனவில் கூடக் கற்பனை செய்யவில்லை. இந்த மாதிரியான ஒரு விகாரமான வீட்டில் தன் வாழ்நாளைக் கழிக்கவேண்டும் என்பதை எண்ணியதும் அவள் ஹிருதயம் உடைந்ததைப் போலாகிவிட்டது. கணவனின் சுகம்,

கலியாணத்தின் ஆனந்தம், யாவும் ஒரே நிமிஷத்தில் கானல் நீரைப் போல அவள் உள்ளத்தினின்றும் மறைந்தன. வீட்டில் மாமனார், மாமியார், நாத்தனார், மதனி ஒருவருமில்லை; தூரத்து உறவினளான ஒரு பாட்டி இருந்தாள். அவள் மற்றொரு தெருவிலிருந்து வதூவரர்களைக் கிருகப்பிரவேசம் செய்விக்க வந்திருந்தாள். ஆனால் விவாகத்தைப் பற்றிய விஷயம், துணி மணி, சீர்செனத்தி, இவைகளொன்றும் இல்லாததைக் கண்டு, விளங்காத ஓர் ஆச்சரியத்துடன், நின்றவள் அப்படியே நின்றுவிட்டாள். கடைசியில் அவள் நாட்டுப் பெண்ணின் கையைப் பிடித்து அவளை உள்ளே அழைத்துக் கொண்டு போய் உட்கார வைத்தாள். தெருவிலிருந்து புது நாட்டுப் பெண்ணைப் பார்க்க வந்திருந்த ஸ்திரீகள், அசலாவின் வயதை மதிப்பிட்டு, ஒருவர் முகத்தை ஒருவர் பார்ப்பதும், ஒருவர் மற்றொருவர் தேகத்தைத் தொட்டு ஜாடை காட்டுவதுமாகப் பேசலாயினர். கடைசியில் அவர்கள் திரும்பும் பொழுது, தெளிவாகக் கேட்காத அவர்கள் குரலிலிருந்து, 'பிரம்ம சமாஜிகள், மிலேச்சர்கள்!' என்ற இரண்டோர் இனிய வார்த்தைகள் கேட்டன! அவை அசலாவின் காதிற்கும் எட்டின.

மஹிம் ஒரு மிலேச்சப் பெண்ணை மணந்துகொண்டிருப்பது உண்மைதான் என்ற விஷயம் கிராமத்தில் வெகு சீக்கிரத்தில் பரவிவிட்டது. விவாகத்திற்கு முன் இம்மாதிரி ஒரு வம்பு கிளம்பியது. அதன்பேரில் சில இயக்கங்களும், ஆலோசனைகளும் நடந்திருந்தன. இப்பொழுது நாட்டுப் பெண்ணைப் பார்த்ததும் முன்பு பரவியிருந்த வதந்தி முற்றிலும் உண்மை என்பதில் யாருக்கும் சந்தேகமில்லை.

அண்டை வீட்டுக்காரர்கள் சென்ற பிறகு, ஜக பாட்டி வந்து, 'நாட்டுப் பெண்ணே, நான் இப்பொழுது போய் வருகிறேன். கொஞ்ச தூரம் போகவேண்டும். வீட்டுக்குப்

போகாமல் காரியம் நடவாது. சின்ன நாத்தனார்தான் இருக்கிறாளே!' என்று சொல்லிக்கொண்டே, பிரார்த்தனைக்கும் வற்புறுத்தலுக்கும் சந்தர்ப்பமளிக்காமலே சென்றுவிட்டாள். இதுவரை அவள் மனத்திற்குள் புழுங்கிக்கொண்டிருந்த விஷயம் இதுதான், இதனால்தான் அவள் தன்னுடைய உறவை வெளியிட விரும்பவில்லை என்பதை அசலா அறிந்துகொண்டாள். உண்மையில் இதில் ஜக பாட்டியின் குற்றம் ஒன்றுமில்லை. வாஸ்தவத்தில் என்ன செய்திகள் கிளம்பி யிருந்தனவோ அவை உண்மைதான் என்ற விஷயம் அவளுக்குத் தெரிந்திருந்தால் அவள் இந்த வீட்டில் கால் எடுத்துக்கூட வைத்திருக்க மாட்டாள். காரணம், பட்டிக்காட்டில் இருந்துகொண்டு இவ் விஷயங்களுக்குப் பயப்படாவிட்டால், யாருக்கும் கிராம சரித்திரத்தில் இவ்வளவு மதிப்பு ஏற்படுவது துர்லபம்.

ஜக பாட்டி சென்ற பிறகு, யது என்ற வேலைக்காரனும், ஓர் உடியா சமையற்காரனும், கல்கத்தாவிலிருந்து வந்திருந்த அசலாவின் தாய் வீட்டு வேலைக்காரியான ஹரியா என்பவளும் தவிர வீட்டில் யாருமில்லை. ஆகையால் வீடு வெறிச்சென்றிருந்தது. சிறிது நேரமாக மழை குறைந்திருந்தது. அப்பொழுது மறுபடியும் பலமாக ஆரம்பமாயிற்று. ஹரியா அசலாவிடம் வந்து, மெதுவாக, 'இம்மாதிரி வீட்டையே நான் பார்த்ததில்லை, அம்மா! எங்கும் யாரையுமே காணவில்லையே!' என்றாள்.

அசலா முகம் கவிழ்ந்து பேசாமல் உட்கார்ந்திருந்தவள், சலிப்புடன், 'ஹூம்' என்று சொல்லிவிட்டுப் பேசாமலிருந்தாள்.

ஹரியா மறுபடியும் வந்து, 'மாப்பிள்ளை பாபுவைக்கூடக் காணவில்லையே! அப்பொழுது ஒரு தரம் தென்பட்டார். பிறகு எங்கே போனாரோ, தெரியவில்லை!' என்றாள்.

அசலா இந்தத் தடவையும் ஒரு பதிலும் சொல்ல வில்லை.

ஆனால் வனம் சூழ்ந்தது போன்ற அந்தச் சூனியபுரியில் ஹரியாவுக்கு மனம் எவ்வளவுதான் குழம்பியிருந்த போதி லும், அசலாவை அவள் குழந்தையிலிருந்து எடுத்து வளர்த் தவளாகையால், அவள் அசலாவைச் சற்று ஆசுவாசப் படுத்து வதற்காக, 'பயம் எதற்கு? உண்மையில் நாம் என்ன தண்ணீ ரிலா வந்து விழுந்துவிட்டோம்! மாப்பிள்ளை பாபு வந்ததும் எல்லாம் சரியாகிவிடும். அதற்குள் நீ இந்த உடைகளை மாற் றிக்கொள். நான் பெட்டியைத் திறந்து புடவை எடுத்துத் தருகிறேன்!' என்றாள்.

'இருக்கட்டும்' என்று சொல்லி, அசலா முன்போலவே தலைகுனிந்து உட்கார்ந்திருந்தாள். அவளுடைய வாழ்க்கை யின் இன்பம் ஆனந்தம் எல்லாம் போய்க்கொண்டிருந்தது.

பலமான மழை வந்தது. வேகமாக அடிக்கும் மழைச் சாரலில் பகலின் மங்கிய பிரகாசம் எப்பொழுது அணைந்தது, ஆவணி மாதத்து மேகம் படர்ந்த வானத்தைக் கிழித்துக் கொண்டு மலினமடைந்த அந்தக் கிராம வீட்டில் சந்தியா எப்பொழுது இறங்கி வந்தாள்?—இவை ஒன்றுமே தெரிய வில்லை. வீட்டின் ஒவ்வொரு மூலை முடுக்கிலும் இருள் வந்து குவிந்தது. யது வந்து ஹரிகேன் லாந்தரை ஏற்றி வீட்டின் மத்தியில் வைத்தான்.

'மாப்பிள்ளை பாபு எங்கே?' என்று கேட்டாள் ஹரியா.

'எனக்கென்ன தெரியும்?' என்று சொல்லி யது செல்ல லானான். சுருக்கமும் கோரமுமான அவனுடைய பதிலைக் கேட்டதும், ஹரியாவுக்குச் சற்று சந்தேகம் ஏற்பட்டது. அவள், 'என்ன தெரியும் என்றால் என்ன அர்த்தம், அவர் இல்லையா?' என்றாள்.

'இல்லை' என்று சொல்லி, யது சென்றுவிட்டான். வந்திருந்தவர்களிடம் அவனுக்குத் திருப்தியில்லை என்பது நன்றாக விளங்கியது. ஹரியா உடனே மிக்க பயமடைந்தவளாய், அசலாவிடம் வந்து, பயமும் கவலையும் நிறைந்த குரலில், 'இங்கிருக்கும் நிலைமை எனக்குச் சிறிதும் பிடிக்கவில்லையே, அம்மா! கதவைத் தாளிட்டுவிட்டு வரட்டுமா?' என்று கேட்டாள்.

அசலா ஆச்சரியத்துடன், 'எதற்காகத் தாளிடப்போகிறாய்?' என்றாள்.

ஹரியா சிறு வயதிலேயே ஊரைவிட்டுக் கல்கத்தாவுக்கு வந்தவள். பிறகு அவள் கிராமத்திற்கே போகவில்லை. கிராமங்களின் திருடர்கள், கொள்ளைக்காரர்கள் இவர்களைப் பற்றிய ஞாபகத்தைத் தவிர பாக்கி எல்லா நினைவுகளும் அவளுக்கு மறந்தே போய்விட்டன. அவள் வெளியே யுள்ள இருட்டின் பக்கம் பயந்த பார்வையுடன் ஒரு தரம் பார்த்துவிட்டு, அசலாவின் உடம்புடன் ஒட்டிக்கொண்டு நின்று, மெதுவாக, 'பட்டிக்காடு, ஒன்றும் சொல்ல முடியாது, அம்மா!' என்று சொல்லும்போதே அவளுக்கு மயிர்க்கூச் செறிந்தது.

அதேசமயம் கூடத்தில், 'மன்னி, எங்கே யிருக்கிறாய்?' என்று குரல் கொடுத்துக்கொண்டே இருபது இருபத்தொரு வயதுள்ள மெலிந்த தேகமுள்ள பெண்ணொருத்தி, மழையில் நனைந்துகொண்டே, கதவருகில் வந்து நின்றாள்.

'முதலில் நமஸ்காரம் செய்கிறேன், மன்னி! பிறகு ஆடையை மாற்றிக்கொள்கிறேன்!' என்று சொல்லிக்கொண்டே, அவள் அசலாவின் காலருகில் சிரம் வைத்து நமஸ்காரம் செய்தாள்; பிறகு லாந்தரை எடுத்து அசலாவின் முகத்தருகில் கொண்டுபோய், சிறிது நேரம்வரை ஒரே பார்வையாக அவளைப் பார்த்துவிட்டு, 'அண்ணா! ஏ, அண்ணா!' என்று கத்தினாள்.

மஹிம் எல்லோரையும் வீடு கொண்டுவந்து சேர்த்து விட்டு, இந்தப் பெண்ணை அழைத்து வருவதற்காக அடுத்த கிராமத்திற்குச் சென்றிருந்தான். அடுத்த அறையிலிருந்து அவன், 'என்ன மிருணாளினி?' என்றான்.

'இங்கே வாயேன், சொல்லுகிறேன்!'

மஹிம் வாசற்படி அருகே வந்து, 'என்ன?' என்றான்.

மிருணாளினி லாந்தர் வெளிச்சத்தில் மறுபடியும் ஒரு தரம் அசலாவின் முகத்தைப் பார்த்துவிட்டு, 'இருக்கட்டும், நீயே ஜயித்தவனாக இரு, அண்ணா! என்னைக் கலியாணம் செய்துகொள்ளாமல் ஏமாற்றிவிட்டாய்!' என்றாள்.

மஹிம் வெளியே இருந்துகொண்டே, 'நீ என் வார்த்தையைக் கேட்கமாட்டாய், இல்லையா, மிருணாளினி? திரும்பியும் அதே வேடிக்கைதானா? கேட்க மாட்டாயா?' என்றான்.

'பேஷ், வேடிக்கையா செய்துகொண்டிருக்கிறேன் நான்!' என்று சொல்லி, அசலாவின் பக்கம் பார்த்துப் புன்சிரிப்புடன், 'சத்தியம் செய்து சொல்லுகிறேன், வேடிக்கையல்ல. சரி, நீ உன் புருஷனிடமே கேட்டுப் பார்; ஒரு காலத்தில் நான் அவனுக்குப் பிடித்தமாக இருந்தேனா இல்லையா என்பதை?' என்றாள்.

'அப்படியானால் நீ சொல்லிக்கொண்டே இரு. நான் வெளியே போகிறேன்!' என்றான் மஹிம்.

'போயேன்! உன்னை யார் பிடித்து வைத்திருக்கிறார்கள்?' என்று, அசலாவின் முகவாய்க் கட்டையை மிக்க அன்புடன் அசைத்துக்கொண்டே, 'சரி மன்னி! நீயே சொல்லேன், எனக்கு வருத்தமாக இருக்குமா இருக்காதா? இந்த வீட்டுக்கு என்னமோ நான்தான் எஜமானி ஆகவேண்டியவள்! ஆனால், என் தாய்—அந்த நாசமாய்ப்போகிறவள்—என்ன மந்திரத்தை என் அண்ணா காதில் ஓதினாளோ, நான் அவன் கண்ணுக்கு முள்ளாகப் போய்விட்டேன். இல்லாவிட்டால்—

அடே யது! கோஷால் மஹாசயர் எங்கே போய்விட்டார்?' என்றாள் மிருணாளினி.

'குளத்தில் கைகால் அலம்பப் போயிருக்கிறார்' என்றான் யது.

'அடே, இந்த இருட்டிலா குளத்திற்கு?' என்றபோதே மிருணாளினியின் சிரித்த முகம் பயத்தினால் வாடியது. அவள் பயந்துகொண்டே, 'யது, போ அப்பா, விளக்கை எடுத்துக்கொண்டு சற்றே குளம் வரையில் சென்றுவிட்டு வா! வயதானவர், எங்காவது இருட்டில் கால் தவறிவிட்டால் கை கால் முறிந்துவிடும்!' என்றாள்.

அடுத்த க்ஷணமே அசலாவின் முகத்தைப் பார்த்து, வெட்கத்துடன், 'என்ன தலையெழுத்து எனக்கு எழுதியிருக்கிறது, பாரேன் அம்மா! எங்கிருந்தோ ஒரு எழுபது வயதுக் கிழவரைத் தேடி என்னிடம் ஒப்படைத்திருக்கிறார்கள். அவருக்குச் சேவை செய்து செய்து என் வாழ்நாள் முடிந்துகொண்டிருக்கிறது. சரி அம்மா, முதலில் அந்த அறைக்குச் சென்று உடையை மாற்றிக்கொண்டு வருகிறேன், பிறகு பேசலாம். ஆனால் சக்களத்தியாக இருந்தாலும் கோபித்துக்கொள்ள மாட்டாயே? இதை முதலிலேயே சொல்லி வைக்கிறேன்! சொல்லேன், நான் என் தள்ளாத காலத்தில் கூட உன்னிடம் பங்குக்கு வரக் கூடாதா?' என்று சொல்லித் தன் சிரிப்பின் ஒலியினால் வீடு முழுவதையும் பிரகாசமாக்கிக்கொண்டே சட்டென்று அடுத்த அறைக்குச் சென்றுவிட்டாள்.

இந்த மாதிரிச் சிரிப்பு விளையாட்டுக்கள் அசலாவுக்கு முதலில் பிடிக்கவில்லை. எல்லா விளையாட்டுக்களும் அவளுக்கு விரஸமாகவும், கோரமாகவுமே பட்டன. வெட்கத்தால் அவள் குன்றினாள். இவ்வளவு லஜ்ஜையற்ற தன்மை ஒரு ஸ்திரீயிடம் இருக்குமென்று அவள் கற்பனை கூடச் செய்ய

முடியவில்லை! இதே காரணம்தான் இந்தக் கேலிகள் யாவும் அவளுடைய வெகு நாளைய படிப்பு, நாகரிகம் இவைகளுக்கும் வருத்தத்தை உண்டாக்க ஆரம்பித்தது. ஆயினும் கூட இவள் வருகையால் தன்னுடைய தனிமையின் வேதனை ஒழிந்தது என்று அவளுக்குப் பட்டது. ஆனால் இவள் யார், எங்கிருந்து வந்தாள், இவருடன் இவளுக்கு என்ன சம்பந்தம்? —இவைகளை எல்லாம் அறிய அசலா ஆவலுள்ளவளானாள்.

'இது யார் அம்மா? ரொம்ப வேடிக்கைக்காரியாக இருக்கிறாளே!' என்றாள் ஹரியா.

அசலா தலையை அசைத்துவிட்டு, 'ஆமாம்' என்றாள்.

ஈரப் புடைவையை மாற்றிவிட்டு மிருணாளினி அறைக்குள் வந்து, 'சும்மா வேடிக்கை மாத்திரம் செய்துவிட்டுப் போய்விட்டேன்! மன்னி, என்னை நிசமாக இன்னும் அறிமுகம் செய்துகொள்ளவில்லை. அறிமுகம் செய்துகொள்ளத் தான் என்னிடம் என்ன இருக்கிறது? உன் மணமகன் இருக்கிறானே, அவன் என் அம்மாவின் அப்பா! ஆகையால் நான் அவரைச் சிறு வயதிலிருந்தே பெரிய அண்ணா என்று சொல்லி வருகிறேன்' என்று சொல்லிச் சற்று நிறுத்தி, மறுபடியும், 'எங்கள் அப்பாவும் உன்னுடைய மாமனாரும் இருவரும் ரொம்ப நெருங்கிய நண்பர்கள். திடீரென்று ஒரு நாள் வண்டியிலிருந்து கீழே விழுந்ததால் கை ஒடிந்து வேலை போய்விட்டது. அதுமுதல் உன் மாமனார் எங்களை யெல்லாம் தம்மிடமே வைத்துக்கொண்டிருந்தார். இதற்கு வெகு நாளைக்குப் பிறகு நான் பிறந்தேன். பெரிய அண்ணாவுக்கு அப்பொழுது எட்டு வயது. பெரிய அண்ணாவின் தாய் அவரைப் பெற்றதுமே இறந்துவிட்டாள்; இவருக்கு மூத்தவர்கள் இரண்டு சகோதரர்கள் இருந்தார்கள். அவர்களும் முதலிலேயே 'டிப்தீரியா' வியாதியில் இறந்து போனார்கள். ஆகையால் என் தாய் இங்கே வந்ததுமே இந்த வீட்டுக்கு

எஜமானி யாகிவிட்டாள். அதற்குப் பிறகு என் தந்தையும் இறந்து போனார்; நாங்கள் எல்லோரும் இங்கேயே இருந்து விட்டோம். இப்பொழுது நாலைந்து வருஷங்கள் ஆகின்றன, — பலாசியில் கோஷால் வீட்டில் என்னைக் கலியாணம் செய்து கொடுத்து, அண்ணா என்னை இவ்விடத்திலிருந்து விரட்டிவிட்டார். அம்மா உயிரோடு இருந்தாலாவது கொஞ்ச நஞ்சம் அதிகாரம் செலுத்தலாம்' என்றாள்.

'பெரிய நாட்டுப் பெண் இந்த அறையிலா இருக்கிறாள்?' என்று சொல்லிக்கொண்டே சிவப்பான பெரிய மனிதர் ஒருவர் வாசற்படி யருகில் வந்து நின்றார்.

மிருணாளினி அவரை 'வாருங்கள், வாருங்கள்!' என்று சொல்லி விட்டு, பிறகு அசலாவின் பக்கம் பார்த்து, ஜாடை காட்டிப் புன்சிரிப்புடன், 'மன்னி, இவர்தான் என் எஜமானர். சரி, நீதான் சொல்லேன் அம்மா, இந்த எழுபது வயதுக் கிழவருக்கு நான் பொருத்தமாக இருக்கிறேனா? இந்த ஜன்மத்தின் ரூபம், யௌவனம் யாவும் பாழாய்ப் போய்விடவில்லையா, அம்மா?' என்றாள்.

அசலா என்ன பதில் சொல்வாள்? வெட்கத்தால் தலை குனிந்து உட்கார்ந்திருந்தாள்.

பெரிய மனிதரின் பெயர் பவானி கோஷால். அவர் சிரித்துக்கொண்டே, 'இவள் பேச்சை நம்பாதேயுங்கள், அம்மா! எல்லாம் பொய். நான் ஜனங்களின் பார்வையிலிருந்து தாழ்வுபட வேண்டும் என்பதே இவளுடைய விருப்பம். இல்லாவிட்டால் என் வயதென்னமோ ஐம்பத்திரண்டு ஐம்பத்தி மூன்றுதான்' — என்றார்.'

மிருணாளினி நடுவிலேயே, 'சும்மா யிருங்கள், சும்மா யிருங்கள். அடாடா, என் அண்ணா இப்படிப்பட்ட விரோதி யென்பதைப் பகவான்தான் அறிவார். எல்லா விதத்திலும் என்னை நாசமாக்கினார்; இந்தக் கிழவர் கையில் ஒப்புவிப்பதை

விட, கையையும், காலையும் கட்டி கங்கையில் போட்டிருந்தால் நன்றாக இருந்திருக்காதா, மன்னி? நிஜத்தைச் சொல்லேன்!' என்றாள்.

அசலா முன் போலவே பேசாமல் உட்கார்ந்திருந்தாள். அவள் முகம் வாடியது.

கோஷால் மெள்ள உள்ளே வந்து, பேசாமல், சிறிது நேரம்வரை வெட்கத்தால் குனிந்துகொண்டிருக்கும் அசலாவின் முகத்தைப் பார்த்து, சட்டென்று ஒரு நீண்ட நிம்மதியான பெருமூச்சு விட்டுக்கொண்டு, 'நீங்கள்தான் என் மரியாதையைக் காப்பாற்றினீர்கள். இவ்வளவு நாட்களுக்குப் பிறகு இந்தக் குட்டியின் கர்வம் தூள் தூளாயிற்று. தன்னுடைய அழகின் கர்வத்தால் இவளுக்குத் தலைகால் தெரிந்ததா!' என்று சொல்லி, மிருணாளினி பக்கம் பார்த்து, 'ஏன், இப்பொழுது சரியாகப் போய்விட்டதா? காட்டில் இதுவரை நரிதான் ராஜா. இப்பொழுது நகரத்தின் அழகு என்று யாரைச் சொல்வது? கண்ணைத் திறந்து சிறிது பார்!' என்றார்.

'ஆமாம், ஆமாம். இருக்கட்டும். எங்கே என் கர்வம் இருக்கிறதோ, அங்கே அதைத் தகர்ப்பவர்களையும் வெகு பேரைப் பார்த்திருக்கிறேன். யாரால் முடியும் அதைத் தகர்ப்பதற்கு?' என்று சொல்லி, கணவனின் பக்கம் ஒரு மறைமுகமான பார்வையுடன் பார்த்தபொழுது, திடீரென்று அசலாவின் பார்வை அவள் பக்கம் விழுந்தது.

கோஷால் சிரித்துக்கொண்டே, 'கேட்டீர்களா, மன்னி! கொஞ்சம் ஜாக்கிரதையாகவே இருங்கள். இருவரிடையேயும் எப்படிப்பட்ட பொருத்தம், எப்படிப்பட்ட வரத்துப் போக்கு, இதொன்றையும் சொல்ல முடியாது. நான்தான் எழுபத்திரண்டு வயதுக் கிழவன்; நடுவே இருந்தாலென்ன, இல்லாவிட்டால் என்ன! தன்னுடைய பொருளைக் காப்பாற்றி

வைத்துக்கொள்ள வேண்டும், இந்தக் கிழவனின் வற்புறுத்தல் இதுதான்!' என்றார்.

'மிருணாளினி, இரவு பூராவும் இப்படித்தான் செய்துகொண்டிருக்கப் போகிறாயா?' என்று கேட்டான் மஹிம் அங்கே வந்து.

'வேறென்ன செய்வது, அண்ணா?'

'அந்தச் சமையல் கட்டுப் பக்கம் ஒரு தரமாவது போக மாட்டாயா?'

மிருணாளினி திடீரென்று எழுந்து, 'அடடா, என்ன தப்புப் பண்ணிவிட்டேன் நான், அண்ணா! முதலிலேயே நான் சமையற்காரனைப் பார்த்துவிட்டு வந்திருக்க வேண்டும். சரி, நீங்கள் வெளியே செல்லுங்கள், நாங்கள் போகிறோம்!' என்றாள்.

'"நாங்கள்" யார்?' என்று கேட்டான் மஹிம்.

'நானும் மன்னியும்' என்று சொல்லி, அசலாவைப் பார்த்து, 'எப்பொழுது நான் வந்துவிட்டேனோ இந்தக் குடும்பத்தின் எல்லாச் சார்ஜுகளையும் உன்னையே வகிக்கச் செய்துவிட்டுத்தான் அம்மா, போவேன்!' என்றாள்.

மஹிமும், பவானியும் வெளியே சென்றார்கள். மிருணாளினி மறுபடியும் அசலாவிடம், 'இரண்டொரு நாள் முன்னதாகவே நான் வந்திருக்க வேண்டும். ஆனால் மாமியாரின் உடம்பு அசௌகரியத்தால் வீட்டைவிட்டுக் கிளம்ப முடியவில்லை. சரி, மன்னி! நீ ஆடை மாற்றிக்கொண்டு தயார் செய்துகொள், நான் இப்பொழுதே வந்து உன்னை அழைத்துக்கொண்டு போகிறேன்!' என்று சொல்லி, மிருணாளினி சமையல் அறைப் பக்கம் சென்றாள்.

மழை நின்றுவிட்டது. மேகக் கூட்டங்கள் சிதறினதால் நவமியின் சந்திரனொளியினால் வானம் சற்று நிர்மலமாகிக்கொண்டிருந்தது.

சமையலுக்கு எல்லா ஏற்பாடுகளும் செய்துவிட்டு, மிருணாளினி, அசலாவின் அருகில் வந்து உட்கார்ந்துகொண்டு, அவளுடைய ஒரு கையைத் தன் கையில் எடுத்துக்கொண்டு, 'அக்கா என்று சொல்வதைவிட மன்னி என்று சொல்வது நன்று யிருக்கவில்லையா, மன்னி?' என்றாள்.

அசலா மிருதுவான குரலில், 'ஆமாம்' என்றாள்.

'உறவில் நீ பெரியவளானாலும் வயதில் நான் பெரியவள். ஆகையால் நீயும் என்னை மிருணாளினி அக்கா என்று கூப்பிட வேண்டும் என்பதுதான் என் விருப்பம். ஏன், சரிதானே?' என்றாள்.

'சரி' என்றாள் அசலா.

'இன்று உனக்குச் சமையலறையைக் காண்பிக்கிறேன். ஆனால் நாளைக்கு உக்கிராணத்தின் சாவியையே உன் தலைப்பில் முடிந்துவிடுகிறேன், சரிதானே?' என்றாள் மிருணாளினி.

'எனக்குச் சாவி வேண்டாம், அம்மா!'

மிருணாளினி சிரித்துக்கொண்டே, 'வேண்டாமா? அட ராமா! இதென்ன பேச்சுப் பேசுகிறாய் நீ! உக்கிராணம் என்ன, கேவலமான விஷயமா — அதன் சாவி அவசியமில்லை யென்று நீ சொல்லுகிறாய்? குடும்ப ஸ்திரீயின் ராஜ்யத்திற்கு அதுதான் ராஜதானி, மன்னி!' என்றாள்.

'ராஜதானியாக இருக்கட்டும், அந்த ஆசை எனக்கில்லை. ஆனால் உன்னிடம் எனக்கு ரொம்ப ஆசையா யிருக்கிறது. மிருணாளினி அக்கா, நான் உன்னை விடமாட்டேன்!' என்றாள் அசலா.

மிருணாளினி இரண்டு கைகளாலும் அசலாவைக் கட்டிக் கொண்டே, 'சக்களத்தியை அடித்து வெளியே விரட்ட வேண்டும். நீ என்னமோ அதற்கு நேர் மாறாக அவளைப் பிடித்து வைத்துக்கொள்ள விரும்புகிறாய்! இதென்ன உன்னுடைய புத்தி, மன்னி?' என்றாள்.

அசலா மெதுவாக, 'உன்னுடைய இந்த வேடிக்கை எனக்குப் பிடிக்கவில்லை, அக்கா! சரிதான், இந்த ஊரில் எல்லோருமே இப்படித்தான் வேடிக்கை செய்வார்களா?' என்றாள்.

மிருணாளினி கலகலவென்று சிரித்தாள். 'இல்லை அக்கா, இல்லை. யாரும் செய்வதில்லை. நான் மாத்திரம் தான் செய்கிறேன் - எல்லோருக்கும் இந்த வஸ்து எங்கே கிடைக்கும்?' என்றாள்.

'கிடைத்தால்கூட எங்கள் நாக்கிலிருந்து இம்மாதிரி வார்த்தைகள் வராது, அம்மா! ஒரு கண்ணியமான ஸ்திரீ இம்மாதிரி வார்த்தைகளை வாயால் பேசுவாளென்று எங்கள் கல்கத்தா சமாஜத்தில் உள்ள பல ஸ்திரீகள் நினைக்கக்கூட முடியாது!' என்றாள் அசலா.

மிருணாளினி சிறிதுகூட வெட்கமடையவில்லை. மறுபடியும் ஒருதரம் பலமாக அசலாவைக் கட்டி மார்புடன் தழுவிக்கொண்டு, 'உங்கள் நகரத்தில் இம்மாதிரி என்னைப் போல் மார்புடன் தழுவிக்கொள்ள எத்தனை கண்ணியமுள்ள ஸ்திரீகளால் முடியும், சொல்லேன், பன்னி? எல்லோரும் எல்லாக் காரியத்தையும் செய்துவிட முடியுமா? இங்கேயே பாரேன், உன்னிடம் பரிசயமாகி எவ்வளவு நேரமாயிற்று? இதற்குள்ளேயே எனக்குச் சகோதரி யில்லாததற்கு ஒரு சகோதரி கிடைத்துவிட்டதாகத் தோன்றுகிறது. எனக்கு இது வெறும் வாய் வார்த்தையல்ல, வாழ்நாள் முழுவதும் இந்த வார்த்தையை விலக்காமல் இருக்க வேண்டும், அநுஷ்டிக்க வேண்டும். இது ஞாபகம் இருக்கட்டும். இதில் சிரிப்பு வேடிக்கை நடக்காது!' என்றாள்.

அசலா படித்த பெண். இந்த நேர் விருத்தமான பட்டிக்காட்டு சமூகத்தின் மத்தியிலிருந்து அவளுடைய எதிர்கால வாழ்க்கையை எப்படிக் கழிப்பது என்பதை இந்த

மண்ணில் காலை வைத்ததுமே அறிந்துகொண்டிருந்தாள். இந்தச் சந்தர்ப்பத்தை அவள் சும்மா கைவிட்டு விடவில்லை. பரிகாசத்தை உண்மையில் பரிணமிக்கச் செய்து, 'மிருணு ளினி அக்கா, நிஜமாகவே வாழ்நாள் முழுவதும் இதை நீ விடாம லிருப்பாயா ?' என்றாள்.

'நாங்கள்கூடப் பட்டணவாசத்து ஸ்திரீகள் இல்லை யம்மா, விடாமல்தான் இருக்க வேண்டும்! நீ குறிப்பிட்டுச் சொன்ன விஷயம் என்னமோ பிரதிக்ஞை செய்தாகிவிட்டது. இறந்தாலும் அதிலிருந்து மாற முடியாது!' என்றாள்.

அசலா இந்த விஷயத்தை அதிகமாக யோசிக்காமல் வேறு வார்த்தைகளை ஆரம்பித்தாள். சிரித்துக்கொண்டே, 'சீக்கிரம் ஓடமாட்டாய், அதையும் இம்மாதிரிச் சொல்லி விடு!' என்றாள்.

மிருணுளினி சிரித்தாள். 'முட்டாளென்று என்னை ஒவ்வொரு விஷயத்திலும் சிக்க வைக்க விரும்புகிறாயா, மன்னி? அதுதான் முதலிலேயே சொல்லிவிட்டேனே, சரி யாக சார்ஜை ஒப்படைக்காமல் போகமாட்டேன்!' என்றாள்.

அசலா தலையை அசைத்துக்கொண்டே, 'சார்ஜை வகிக்க எனக்குச் சற்றுக்கூட ஆவலில்லை!' என்றாள்.

'அதையும் செய்துவிட்டு அப்புறம் போகிறேன்; ஆனால் அதிக நாள் என்னமோ வீட்டை விட்டுவிட்டு நான் இங்கே இருக்க முடியாது, அம்மா! எவ்வளவு பெரிய குடும் பம் என் தலைமே லிருக்கிறது என்று உனக்குத் தெரிந்திருக் குமே!' என்றாள்.

அசலா தலையை அசைத்து, 'இல்லை, எனக்குத் தெரி யாதே!' என்றாள்.

மிருணுளினி ஆச்சரியமடைந்து, 'என்னைப் பற்றி அண்ணு உன்னிடம் ஒன்றும் சொல்லவில்லையா!' என்றாள்.

'இல்லை, ஒரு நாளும் சொன்னதில்லை. தம் வீட்டைப்

பற்றிய எல்லா விஷயங்களையும் அவர் என்னிடம் சொல்லி யிருக்கிறார். ஆனால் எதை முன்னாடிச் சொல்ல வேண்டுமோ அப்படிப்பட்ட உன் விஷயத்தை ஒரு நாளும் என்னிடம் சொல்லவில்லை. மிருணாளினி அக்கா, எனக்கு ஆச்சரியமாகத் தான் இருக்கிறது!' என்றாள் அசலா.

மிருணாளினி முகம் வெளுத்தவளாய், 'இருக்கத்தான் இருக்கும்!' என்றாள்.

அசலா சிறிது நேரம் பேசாமலிருந்துவிட்டு, பிறகு மிருதுவான குரலில், சிரித்துக்கொண்டே, 'உன்னுடன் தான் முதலில் இவருக்கு விவாகம் நிச்சயமாகி யிருந்ததா?' என்றாள்.

மிருணாளினி அப்பொழுதும் எங்கோ கவனமாய் ஏதோ யோசித்துக்கொண்டிருந்தாள். 'ஆமாம்' என்றாள். சொன்ன பிறகு சட்டென்று அவள் காதில் வார்த்தைகள் சென்று ஒலித்தன. அவள் அசலாவின் முகத்தைப் பார்த்து, 'நடப்பதற்காக இல்லை, அதனால் நடக்கவில்லை' என்றாள்.

அசலா மறுபடியும், 'நடப்பதில் என்ன தடை? உனக்கும் அவருக்கும் உண்மை உறவுதான் ஒன்றுமே இல்லையே? இதைத் தவிர, சிறு வயதில் உண்டாகும் காதலைப் புறக்கணிப்பதும் நல்லதல்லவே?' என்றாள்.

அவள் கேட்கும் முறையினால் மிருணாளினி சட்டென்று திடுக்கிட்டாள். ஒரு கணம் அசையாத பார்வையுடன் அசலாவின் முகத்தைப் பார்த்துவிட்டு, பிறகு, 'இதெல்லாம் என்ன தேடிக்கொண் டிருக்கிறாய், மன்னி நீ! சிறு வயதின் காதல்களுக்கெல்லாம் கடைசிப் பலன் இதுதான் என்று நீ நினைக்கிறாயா? அல்லது, மனிதன் விவாகம் செய்யவும், செய்து வைக்கவும் எஜமானன் என்று எண்ணுகிறாயா? இது இந்த ஜன்மத்தினுடையது மாத்திரமல்ல. ஜன்ம ஜன்மாந்தரத்தின் சம்பந்தம். நான் யாருக்கு வாழ்க்கை பூராவும் அடிமையோ

அவர் கையில்தான் கடவுள் என்னை ஒப்புவித்திருக்கிறார். மனிதன் விரும்புவதாலும், விரும்பாததாலும் என்ன வரப் போகிறது, என்ன போகப் போகிறது ?' என்றாள்.

அசலா வெட்கமடைந்து, 'அதென்னமோ சரிதான், மிருணாளினி அக்கா, நான் அதனால்தான் கேட்கிறேன்—' தன் வார்த்தைகளை அவளால் பூர்த்தி செய்ய முடியவில்லை. அவளுடைய முகம் பூராவும் வெட்கத்தால் மலினமடைந்தது. அது மிருணாளினிக்குத் தெரியவில்லை. அவள் அசலாவின் கையை அன்புடன் தன் கையில் பிடித்து, 'மன்னி, உனக்குக் கணவன் இப்பொழுது இன்றுதினம்தான் கிடைத்திருக் கிறான்; ஆனால் நான் என்னமோ என் கணவருக்கு ஐந்து வருஷமாகச் சேவை செய்து வருகிறேன். என்னுடைய ஒரு வார்த்தையைக் கேளம்மா, கணவனின் இந்தத் தசையில் ஒரு பொழுதும் உன்னுடைய புத்தி பலத்தினால் பலவந்தமாக இந்த விஷயத்தை அறிவிக்க முயற்சி செய்யாதே! இதைவிட மோசம் செய்வது நல்லது. ஆனால் ஜயிப்பதில் லாபம் ஒன்றுமில்லை' என்றாள்.

யது வெளியில் இருந்துகொண்டே, 'அம்மா, பாபுவுக் காகச் சாப்பாடு தயாராகிவிட்டது' என்று சொன்னான்.

'சரி, போ, நான் வருகிறேன்!' என்று சொல்லிவிட்டு, மிருணாளினி சட்டென்று இரு கைகளையும் நீட்டி அசலாவின் முகத்தைத் தன் பக்கம் இழுத்து, சட்டென்று ஒரு முத்த மிட்டுவிட்டு, வேகமாக வெளியே சென்றாள்.

# XV

'மன்னி!'

அசலா வருத்தமடைந்து பக்கத்து அறையிலிருந்து சட்டென்று மிருணாளினியிடம் வந்தாள்.

மிருணாளினி தலைப்பை இழுத்துக் கட்டிக்கொண்டு, அறையில் ஒரு சிறிய மேஜைப் பெட்டியைத் தனியாக இழுத்துச் சரியாக வைத்துக்கொண்டிருந்தாள். அசலா உள்ளே காலை வைத்ததுமே அவள் பலமான கோபத்துடன் சத்தமிட்டு, 'ஏண்டி, நாசமாய்ப் போகிறவளே! நீ பெரிய ராஜாத்தி போலக் கால்மேல் கால் போட்டுக்கொண்டு உட்கார்ந்திருப்பாய், உன் படுக்கை அறையை நான் சிங்காரிக்க வேண்டுமோ? துடைப்பத்தை எடுத்து அந்த மூலையைப் பெருக்கு என்று சொல்லுகிறேன்!' என்று சொல்லிக் கொண்டே, சிரிப்பை அடக்க முடியாமல் கலகல வென்று சிரித்துவிட்டாள்.

இரைச்சலைக் கேட்டு ஹரியாவும் பின்னாலேயே வந்தாள். 'இந்த மாதிரி ஏனம்மா செய்கிறாய்? வீட்டில் எத்தனை வேலைக்காரர் வேலைக்காரிகள் இருக்கிறார்கள். பெரிய அம்மா எப்பொழுதாவது கையினால் துடைப்பத்தையாவது தொட்டிருக்குமா, பட்டிக்காட்டுப் பெண்களைப் போலப் பெருக்கிக் கூட்டுவதற்கு? நான் பெருக்குகிறேன்!' என்று சொல்லி, அவள் துடைப்பத்தை யெடுக்கப் போனாளோ இல்லையோ, மிருணாளினி கேலியான கோபத்துடன் அதட்டிக்

கொண்டே, 'நீ சும்மா யிருடி! என்னை விடப் பெரிய அம் மாவை உனக்குத் தெரியுமோ, நீ வக்காலத்து வாங்கிக் கொண்டு வந்துவிட்டாய்?' என்று சொல்லி, அவள் அசலா வின் கையில் பலவந்தமாகத் துடைப்பத்தை வைத்துவிட்டு, ஹரியாவிடம் சிரித்துக்கொண்டே, 'அடி! உங்க அம்மா வுக்கு இஷ்டமிருந்தால் இந்தப் பட்டிக்காட்டுப் பெண் கள் செய்யாத காரியத்தைக்கூடச் செய்ய முடியும்!' என்று சொன்னாள். அசலாவிடம், 'போயேன் மன்னி, சீக்கிரமாக அந்த மூலையைப் பெருக்கித் தள்ளு!' என்றாள்.

அசலா பெருக்குவதில் முனைந்துகொண்டே, 'மிருணா ளினி அக்கா, உனக்கு மந்திரம் தெரியும் அல்லவா?' என்றாள்.

'ஏன், எப்படி?' என்றாள் மிருணாளினி.

'இல்லாவிட்டா லென்ன, இந்த வீட்டைப் பெருக்கு வதற்கு நான் கையில் துடைப்பம் எடுப்பதென்றால் அது மந்திரத்தின் சக்தியல்லாமல் வேறென்ன?'

'நீ துடைப்பத்தை எடுக்காவிட்டால் வேறு யார் எடுப் பார்கள், அம்மா? உன் வீட்டைப் பெருக்குவதற்குப் பக்கத் துத் தெருப் பாட்டனின் அத்தை வருவாளோ? எடுத்துக் கொண்டு போ, பேச்சுக்களில் பொழுதை வீணாக்காதே, சாயங்கால மாகிவிட்டது!'

அசலா, காரியம் செய்து, சிரித்துக்கொண்டே, 'ஒரு நிமிஷம்கூட நீயும் சும்மா யிருக்கமாட்டாய், என்னையும் வேலை செய்யச் சொல்லித் தொந்தரவு படுத்துவாய்; நிஜமாகச் சொல்லுகிறேன், மிருணாளினி அக்கா, இந்த ஐந்தாறு தினங் களில் நீ என்னிடம் வாங்கிய வேலை தேயிலைத் தோட்டத்துக் கூலிகளிடம்கூட அவர்கள் எஜமானன் வாங்கியிருக்க மாட் டான்!' என்றாள்.

மிருணாளினி அருகே வந்து அவளுடைய முகவாய்க் கட்டையை ஒரு விரலால் மெதுவாகத் தட்டிக்கொண்டே,

'இதனுல்தான் வீடு வாசலைப் பார்க்கும்பொழுது லக்ஷ்மி வாசம் செய்வதைப் போல் தோன்றுகிறது. நீ உழைத்துக்கொண்டிருக்கிறுய், மன்னி! என்றைய தினம் கணவன், பிள்ளை, வீடு, குடும்பம் இவைகளின் தொல்லையால் ஸ்நானம் செய்து சாப்பிடுவதற்குக்கூட அவகாசம் கிடைக்கிறதில்லையோ, அன்று தினம் இந்த ஸ்திரீ ஜன்மம் சாபல்யமடைந்தது என்று அறி. அதி சீக்கிரத்தில் அந்தத் தினம் வரவேண்டும் என்றுதான் நான் கடவுளிடம் பிரார்த்திக்கிறேன். இப்பொழுது உழைப்பு எங்கிருக்கிறது என்று பார்த்தேன், எஜமானி!'—என்று சொல்லிக்கொண்டே, அவள் சிரிக்க விரும்பினுள்; ஆனுல் அவளுடைய உதடு நடுங்கலாயிற்று.

ஹரியா தேம்பித் தேம்பி அழலானுள். 'இதே ஆசீர்வாதத்தை அளி அம்மா, இதே ஆசீர்வாதத்தைச் செய்!' என்று சொல்லிக்கொண்டிருக்கும் போதே, அவளுக்கு அசலாவின் தாயினுடைய ஞாபகம் வந்தது. அந்தப் புண்ணியவதி அகாலத்தில் சொர்க்கத்திற்குப் புறப்பட்டபொழுது, தன் சிறிய பெண் குழந்தையை இவள் கையில்தான் ஒப்புவித்துவிட்டுப் போனுள். அதே பெண் இப்பொழுது இவ்வளவு பெரியவளாகித் தன் கணவனின் குடும்பத்தை நிர்வகிக்க வந்திருக்கிறுள்.

மிருணுளினி அவளை அதட்டிக்கொண்டே, 'அடி நீ நாசமாய்ப் போக, வார்த்தைக்கு வார்த்தை தேம்பித் தேம்பி அழுகிறுய்! நீ எதற்காக அழுகிறுய்?' என்றுள்.

ஹரியா கண்களைத் துடைத்துக்கொண்டே, 'அழுது கொண்டாம்மா இருக்கிறேன்? உன்னுடைய வார்த்தைகளைக் கேட்டு அழுகையை அடக்க முடியவில்லை. அடீ அம்மா! நீ வந்திருக்காவிட்டால் இந்த வீட்டில் ஒரு இரவு கூட நாங்கள் எப்படிக் கழித்திருப்போமோ சொல்ல முடியாது!' என்றுள்.

மிருணாளினி அந்த வீட்டுக்கு வந்து அன்றோடு ஆறு நாள் ஆகியிருந்தது. அவள் வந்த தினம் முதல், வீடு வாசலி லிருந்து மனிதர்கள் முகம்வரை மாற்றிவைக்கும் வேலையில் தன்னை ஈடுபடுத்திக்கொண் டிருந்தாள். ஆனால் அவளுடைய எல்லாக் காரியங்களிலும் எல்லாச் சிரிப்பு வேடிக்கைகளிலும் வெளிப்பட்டுக்கொண்டிருந்த ஒரு பாவம் அசலாவுக்கு வருத் தத்தைக் கொடுத்து வந்தது. காரணம், மிருணாளினியின் காரியத்திலும், பேச்சு வார்த்தைகளிலும், ஆசார விவகாரங் களிலும், ஒரு விசாலமான சகஜமான சுபாவம் பரவிக் கிடந் தது. அதன் மறைவில் நின்றுகொண்டு அசலாவுக்குத் தன் னுடைய புதிய வாழ்க்கையின் பரிசயமற்ற குடும்பத்தை எட்டிப் பார்த்துச் சுலபமாக அறிந்துகொள்ளச் சமயம் கிடைத்தது; அதைவிட மேலான எந்த வஸ்துவை விசேஷமாக அறிந்துகொள்ள அவளுக்கு ஆவலாக இருந் ததோ, அது மிருணாளினிதான். அவளுடைய குடும்ப நிலைமை ரொம்பச் செம்மையாக இல்லை என்ற விஷயம், நகைக ளில்லாமல் வெறிச்சென்றிருந்த அவள் கைகளைப் பார்க்கும் பொழுதே நன்றாக விளங்கியது.

ஒன்று அவளுடைய கணவர் ஆரோக்கிய மற்றவர், எந்த விதத்திலும் அவளுக்கு ஏற்றவர் என்று அசலாவுக்குத் தோன்றவில்லை; அதன்மேல் குடும்ப வேலைகளில் அளவற்ற உழைப்பு; மேலும், அந்த நோயாளியான மாமியாரின், காரண அகாரண வசவுகளுக்கு ஓர் அளவில்லை. இவைகள் எல்லாவற்றையும் அவள் மிருணாளினியின் வாயிலாகவே கேட்டிருந்தாள். ஆனால் இவைகளெல்லாம் இருந்தும்கூட, எந்தப் பிரதிகூலமும் துக்கத்தைக் கொடுத்து அந்த ஸ்திரீ யின் வாழ்க்கைப் பயணத்தின் வழியில் களைப்படையச் செய்து உட்கார வைக்க முடியவில்லை. அந்தப் படிப்பற்ற பட்டிக்காட்டுப் பெண்ணுக்கு, ஹிருதயத்தின் ஆனந்தம்,

கிரானந்தம் இவைகளைத் தவிர, வெளி உலகத்தின் எந்த விஷயத்திலும் பற்றுதலற்ற பாவமே இருந்தது. எப்படிச் சேற்றில் முளைத்தாலும் தாமரை சகல அழுக்குகளினின்றும் பிரிந்து நின்று, தண்ணீர்த் துளிகள் கூடத் தன்மேல் ஒட்டாமல் இருக்கிறதோ, அதைப் போலவே கல்வி அறிவற்ற இந்த ஏழைக் கிராம லக்ஷ்மியும், எல்லா விதத்திலும் உலகத்தின் துக்க தரித்திரத்தின் மடியில் இரவு பகலாக இருந்தும் கூட எல்லாத் துன்பங்களையும் தாண்டி இன்பத்தில் நீந்திக்கொண்டிருந்தாள்.

அவளுக்குக் களைப்பும் இல்லை, மனச் சோர்வும் இல்லை. அதனால் அசலாவையும் அவள் அந்தப் பழக்கமற்ற வேலைகளின் நடுவே இழுத்துச் செல்ல முடிந்தது. இவ்விதமாக எந்த வேலைகளிலும் அசலாவின் கல்வி, அறிவு, நாகரிகம் இவை ஒத்து வரவில்லை; ஆயினும்கூட 'முடியாது' என்று சொல்லி முகம் திருப்பி நிற்பது பெரிய வெட்கமான விஷயம் என்று அசலாவுக்குத் தோன்றியது. அந்த ஆறு தினங்களில் அவளுக்குத் தன்னுடைய தலையெழுத்தை வெறுத்துத் துக்கப்பட ஒரு கணம் கூட அவகாசம் கிடைக்கவில்லை. பொழுதெல்லாம் அவள் சிரிப்பு, வேடிக்கை, வம்பு, வாது இவைகளிலேயே தொடர்ந்து சென்றுகொண்டிருந்தாள். அதனால், மிருணாளினி மாமியார் வீட்டுக்குத் திரும்பிப் போகவேண்டும் என்ற எண்ணத்தினாலேயே, அவள் போனவுடனேயே கதவு, ஜன்னல், சுவர் இவைகளோடு அந்த மண்வீடு பூராவுமே, சொக்கட்டான் காயைப் போல, கணத்திற்குள் விழுந்துவிடும் என்று அசலாவுக்குத் தோன்றியது. மிருணாளினி அக்கா சென்ற பிறகு அவள் அங்கு ஒரு க்ஷணம் கூட எப்படித் தனியாக இருக்க முடியும்?

ஒரு நாள் சாயங்காலம், மிருணாளினி அக்கா, நீ ஒவ்வொரு நிமிஷமும் ஓடவேண்டும் ஓடவேண்டும்

என்று நினைத்துக்கொண் டிருக்கிறாயே, இருக்கட்டும், தாய் வீட்டுக்கு வந்து இவ்வளவு சீக்கிரமாக யார் போக விரும்புவார்கள், சொல்லேன்? அது முடியாது, நான் கல்கத்தா திரும்பிப் போகும் வரையில் நீ இங்கேயேதான் இருக்கவேண்டும்!' என்றாள்.

'என்ன செய்வேன், மன்னி? இந்தக் கிழ மாமியார்தான் சாவதும் இல்லை, என்னையும் ஒரு நிமிஷம்கூட விடுவதும் இல்லை. "கிழவி, நீ செத்துப்போ! உன் பிள்ளைக்கு எழுபது வயது ஆகப்போகிறது, கடைசியில் அவரையும் விழுங்கி விட்டுத்தான் நீ போகப் போகிறாயா?" என்று நான் சொல்லுகிறேன். என்ன சொல்லுவேன், அம்மா! இராப்பகல் எவ்வளவு இருமுகிறாள், ஆயினும் சாவதில்லை!' என்றாள்.

அசலா சிரித்துவிட்டு, 'ஒருவேளை அவளைப் பார்க்கவே உனக்குப் பிடிக்கவில்லையா?' என்றாள்.

மிருணாளினி தலையை அசைத்து, 'பார்க்கக்கூடப் பிடிக்கவில்லை!' என்றாள்.

'உன்னை?'

'என்னையும் பிடிப்பதில்லை. கிழவி கங்கா யாத்திரை சென்றால், கோவிலுக்குத் தேங்காய் உடைப்பதாக வேண்டிக்கொண்டிருக்கிறேன்!'

அசலா தலை அசைத்துக்கொண்டே, 'மிருணாளினி அக்கா, எனக்கு நம்பிக்கை ஏற்படவில்லை. உனக்கு வீட்டில் யாரைப் பிடிக்கிறது, யாரைப் பிடிக்கவில்லை என்ற விஷயங்களை உன் வாயிலாகக் கேட்டு ஒன்றும் சொல்ல முடியாது. அந்தக் கிழவியையே நீ எல்லோரிலும் அதிகமாக விரும்பக் கூடும்!' என்றாள்.

மிருணாளினி சிரித்த முகத்துடன், 'எல்லோரிலும் அதிகமாக விரும்புகிறேன்! இருக்கலாம்' என்று சொல்லி,

அவள் அசலாவின் கன்னத்தைத் திருகிவிட்டு, தன் காரிய மாகச் சென்றுவிட்டாள்.

'போகிறேன், போகிறேன்' என்று சொல்லிக்கொண்டே பின்னும் சில நாள் இருந்தாள் மிருணாளினி. போகவேண்டு மென்று வாயினால் எவ்வளவு அவசரப்படுத்திக்கொண் டிருந் தாளோ, போவதில் அவள் அவ்வளவு உற்சாகமாக இல்லை என்பதைத் திடீரென்று அசலா ஒரு நாள் கண்டு கொண்டாள். அத்தனை நாள்வரை மிருணாளினியின் மறை வில் நின்றுகொண்டே உலகை எவ்விதமாக அவள் அறிந்து கொண்டிருந்தாளோ, இப்பொழுது அந்தப் போர்வையி னின் றும் வெளியே வந்ததும் உலகத்தின் முகம் அவள் எதிரி லேயே இல்லை. அந்த வீட்டுக்கு வந்தது முதல் மிருணாளினி தன் கணவனுடன் சிரிப்புடன் வேடிக்கை செய்வதைப் பார்த்த பொழுதெல்லாம், அவள் மார்பில் முள் குத்துவதைப் போலிருந்தது; ஆனால் இப்பொழுது இடையிடையே ஊசி குத்துவதைப் போலிருந்தது. 'அதொன்றுமில்லை, உண்மை யில் வேடிக்கையைத் தவிர அதில் வேறொன்றுமே இல்லை, மனத்தைக் கெடுக்கும் கேடான விஷயம் ஒன்றும் அதில் இல்லை, என் மனம்தான் களங்க முள்ளது!' என்று சொல்லிச் சொல்லி, தன்னை அடக்கிக்கொள்ள அவள் முயற்சி செய்யச் செய்ய, எங்கிருந்தோ சந்தேகத்தின் விபரீதமான தர்க்க வாதம் வந்து வந்து அவள் உள்ளத்தில் சூழ்ந்துகொண் டிருந்தது. அவளுக்கு விருப்பமில்லாம லிருந்தும் சந்தேகம் மாறி மாறித் தலை தூக்கி வந்தது. மஹிமின் சுபாவமான மிடுக்கு அங்கு வந்து முற்றிலும் அதிகரித்திருப்பதாக அவளுக்குத் தோன்றியது. 'உள்ளே வேறொரு விஷயமும் இல்லாவிட்டால், வேடிக்கைக்கு வேடிக்கையாகப் பதில் சொல்வதில் என்ன குற்றம்? யாருக்கு வேடிக்கைக்குப் பதில் சொல்ல முடியவில்லையோ, அவர்கள்

சிரித்துக்கொண்டே அதனுடைய ரஸத்தையேனும் அநுபவிக்க முடியும்.' என்ற தர்க்கங்கள் அவள் மனத்தில் எழுந்தன. ஆனால், மிருணாளினி அந்த மாதிரியான வேடிக்கைப் பேச்சுக்களை ஆரம்பிக்கும் போதெல்லாம், மஹிம் வெட்கத்துடன் சட்டென்று மறுபுறம் ஓடித் தப்பித்துக்கொண்டான் என்பது அவளுக்கு நன்றாகத் தெரிந்தது. ஆனால் இதில் ஏதோ ஓர் அநீதி நிச்சயம் மறைந்திருக்கிறது என்ற எண்ணத்தை அவளால் தன் மனத்திலிருந்து அகற்ற முடியவில்லை. மிருணாளினியுடன் ஒரே இடத்தில் காரியம் செய்தும்கூட, தான் பெண்ணாக இருந்தும், தன் உள்ளத்தில் ஒரு ரகசியமான பொறாமையின் வேதனையையும் சகித்துக் கொண்டு, அவளை எவ்விதத்திலும் விட முடியாமல் தவித்தாள்; அப்படியிருக்க இவ்வளவு நாள்வரை ஒரே குடும்பத்தில் ஒன்றாக இருந்துவந்த ஒரு புருஷன், அவளைக் காதலிக்காமல் எப்படி விட்டுவிட முடியும் என்ற எண்ணமே அடிக்கடி அவள் மனத்தில் எழுந்தது.

மிருணாளினி வந்ததுமே உடியா பிராமணன் சமையலறை வேலையிலிருந்து விடுதலை பெறுவது வழக்கம். இந்த விஷயம் அசலாவுக்குத் தெரியாது. இந்தத் தடவையும் அவன் விடுமுறை பெற்றுத் திரிந்துகொண்டிருந்தான். ஆனால், தன் கையினால் சமையல் செய்து மஹிமுக்குச் சாப்பாடு போடுவதில் மிருணாளினி மிக்க சந்தோஷமடைந்தாள் என்றும், அது அவளுடைய உயிருக்குயிரான காரியம் என்றும் அசலா அறியலானாள்.

அன்று காலையில் அவள் திடீரென்று, 'மிருணாளினி அக்கா, இன்று உனக்கு விடுமுறை!' என்று சொன்னாள்.

மிருணாளினியால் ஒன்றும் அறிந்துகொள்ள முடியவில்லை. அவள், 'எதற்கு அம்மா விடுமுறை?' என்றாள்.

'இன்று நானே சமைக்கப் போகிறேன்!'

மிருணாளினி பிரமித்துப் போனாள். 'வாழ்ந்தது! நீயா சமையல் செய்யப் போகிறாய்?' என்றாள் தன்னைச் சமாளித்துக்கொண்டு.

அசலா தலையசைத்துக்கொண்டே, 'பேஷ்! எனக்கா தெரியாது? வீட்டில் நானே எத்தனையோ தடவை செய்திருக்கிறேனே! அது எல்லாம் முடியாது, மிருணாளினி, இன்று நானேதான் சமைக்கப் போகிறேன்!' என்றாள்.

அவளுடைய பிடிவாதத்தைக் கண்டு மிருணாளினி திடீரென்று வாட்டமடைந்தாள். 'இந்த மாதிரியும் எங்காவது நடக்குமா! நான் இருக்கும்போது நீ எதற்காக இந்தச் சமையல்கட்டுப் புகையில் சாகவேண்டும் என்கிறாய், அம்மா?' என்றாள்.

அவளுடைய முகபாவத்தைக் கண்டு அசலா பிடிவாதத்துடன், 'ஆனால் சமையற்காரன் இருக்கும்போது நீ எதற்காகச் சிரமம் எடுத்துக்கொள்கிறாய்? இந்தத் தடவை நான் கட்டாயம் சமைக்கத்தான் போகிறேன்!' என்றாள்.

ஏன் அவளுக்குச் சமையலில் திடீரென்று இவ்வளவு ஆவல் ஏற்பட்டது என்பது மிருணாளினிக்கு விளங்கவில்லை. அவள் சிரிப்பை அடக்கிக்கொண்டு, குறும்பும் கர்வமும் கலந்த குரலில், தலையசைத்து, 'தேவலையடி அம்மா நீ! ஒவ்வொன்றாக என்னுடையது எல்லாவற்றையும் பிடுங்கிக் கொள்ள விரும்புகிறாயா? எல்லாவற்றையும்தான் எடுத்துக் கொண்டாய், நாலு நாளைக்குச் சமையல் செய்து சாப்பாடு பண்ணி வைத்துவிட்டுப் போவோம் என்றால், அது கூட உனக்குப் பொறுக்கவில்லையா? சக்களத்தியுடன் போராட்டம் ஆரம்பமாகி விட்டதென்று தெரிகிறது!' என்றாள்.

அசலாவின் மனத்திற்குள் மறுபடியும் ஈட்டியால் குத்தியதைப் போலிருந்தது. மிருணாளினியின் கடைசி வார்த்தைகள் அவளுடைய பொறுமையின் துன்பத்தைத் தூண்டின.

அவள் அதே க்ஷணம் கம்பீரத்துடன், சுருக்கமாக, 'இல்லை, இன்று நானேதான் சமையல் செய்யப் போகிறேன்!' என்று பதில் சொன்னாள்.

அசலா கோபித்துக்கொண்டுவிட்டாள் என்பது மிருணாளினிக்கு விளங்கியது. ஆகையால் அவள் மேற்கொண்டு விவாதிக்காமல், வருத்தத்துடன் சற்றுநேரம் சும்மா யிருந்து விட்டு, 'சரிதான், ஆனால் போ! நீயே செய், போ! எங்கே என்ன இருக்கிறது என்பதை நான் வந்து எதற்காகக் காட்ட வேண்டும்?' என்றாள்.

மஹிம் அப்பொழுது வீட்டில்தான் இருந்தான். அது இருவருக்கும் தெரியாது. திடீரென்று அவன் எதிரே வந்ததைப் பார்த்து இருவரும் திகைத்து நின்றுவிட்டனர்.

மஹிம் அசலாவைப் பார்த்து, மெதுவாக, 'எத்தனை நாள் மிருணாளினி இருக்கிறாளோ அத்தனை நாள் அவளையே சமையல் செய்யச் சொல்லிவிடுவதுதானே!' என்றான்.

மிருணாளினி ஏன் அவ்வளவு தடை செய்தாள் என்ற விஷயத்தை மஹிம் நன்கு அறிவான். ஆனால் அந்த விஷயத்தைத் திறந்து சொல்ல முடியாது.

அசலா இன்னும் அதிக ஆத்திரம் கொண்டாள். ஆனால், கோபத்தை அடக்கிக்கொண்டு, 'இல்லை, நானே செய்யப் போகிறேன்!' என்று சொல்லி, வாத விவாதங்களை எதிர் பாராமல், சட்டென்று சமையலறைப் பக்கம் சென்றுவிட்டாள்.

அசலா பலவந்தமாகச் சமையல் செய்யச் சென்றாள். சமையல் வேலையில் அவள் யாருக்கும் சளைத்தவள் அல்ல; ஆனால் அந்தப் பக்கம் அவள் மனம் செல்லவே யில்லை. முதல் நாளைய விஷயம் மாறி மாறி ஒவ்வொரு நிமிஷமும் குத்திக்கொண்டிருந்தது. மஹிம் ஒருபொழுதும் அவளிடம் அவ்வளவு காதல் கொண்டிருக்க முடியாது என்றும்

தோன்றியது. அவளுடைய கலியாணத்திற்குச் சில நாளைக்கு முன் ஸுரேசனுடன் நடந்த சண்டையுடன் இந்த விஷயங்களை ஒப்பிட்டு, எல்லாவற்றையும் அலசி அலசி யோசித்த பொழுது, மஹிம் தன்னிடம் எப்பொழுதுமே அலட்சியமாக இருந்தான் என்பதையும், தன் தந்தை முதலில் அவன் சம்பந்தம் அறுந்துபோக விரும்பியபோதும் மஹிம் சற்றும் கலங்கவில்லை என்ற விஷயத்தையும் நினைத்ததும், அவளுக்குத் திடீரென்று எல்லாம் தெளிவாக விளங்கியது. அதில் துளிகூட அவளுக்குச் சந்தேகமே ஏற்படவில்லை.

அங்கே வந்தது முதல், மிருணாளினியும் அசலாவும் ஒன்றாகவேதான் சாப்பிட உட்காருவது வழக்கம். மத்தியானம் ஹரியாவைக் கூப்பிடுவதற்கு அனுப்பிவிட்டு அசலா சமயலறையில் உட்கார்ந்து மிருணாளினியை எதிர் பார்த்துக்கொண்டிருந்தாள்; வேலைக்காரி திரும்பிவந்து, 'மிருணாளினி அம்மாவுக்கு ஜுரம் வந்திருக்கிறது. அவர்கள் சாப்பிட மாட்டார்கள்!' என்றாள்.

அசலா ஒன்றும் பேசாமல் நேரே மிருணாளினியின் அறைக்குச் சென்றாள். மிருணாளினி கண்களை மூடிக் கொண்டு படுக்கையில் படுத்துக்கொண்டிருந்தாள்.

'மிருணாளினி அக்கா, வா, சாப்பிட வா!' என்றாள் அசலா.

மிருணாளினி அவள் பக்கம் பார்த்துச் சற்றே சிரித்து, 'நீ சாப்பிடம்மா, எனக்கு உடம்பு சரியாயில்லை' என்றாள்.

அசலா வரட்சியான குரலுடன், 'என்ன ஆயிற்று? ஜுரமா?' என்றாள்.

'அப்படித்தான் தோன்றுகிறது. இன்று உபவாசம் இருந்தால் சரியாகப் போய்விடும்.'

அசலா குனிந்து கைகளினால் மிருணாளினியின் நெற்றியைத் தொட்டு, சூட்டைப் பார்த்து, 'மிருணாளினி அக்கா,

நான் அவ்வளவு முட்டாள் அல்ல; எழுந்திருந்து வா சாப்பிட!' என்றாள்.

மிருணாளினி தலையசைத்து, 'உன்மேல் ஆணை, மன்னி, என்னால் சாப்பிட முடியாது. நீ யேன் சும்மாவாவது இந்த ஆவல்கொண்டு என்னைக் கூப்பிட வந்தாய், அம்மா? தனியாகச் சாப்பிட முடியாவிட்டால், போ, நான் உன் எதிரே வந்து உட்கார்ந்துகொண்டிருக்கிறேன்' என்றாள்.

அசலா சற்று கடுமையாக, 'மிருணாளினி அக்கா, பசியோடு இருக்கும் பந்துவை எதிரே உட்கார வைத்துவிட்டுச் சாப்பிடும் பாடத்தை நாங்கள் படிக்கவில்லை!' என்றாள்.

மிருணாளினி மறுபடியும் சிரிக்க முயற்சித்துக்கொண்டே, 'ஆனால், பந்துவுக்குச் சாப்பிடவேண்டிய அவசியமே இல்லாவிட்டால், அப்பொழுது?' என்றாள்.

அசலா முன் போலவே, 'இல்லாமலென்ன, கொஞ்சம் சொல்லேன் அதைத்தான்! உனக்கு ஜுரம் வரவில்லை, கோபம் வந்திருக்கிறது. நீயும் சாப்பிடாமல் என்னையும் பட்டினி போடப் போகிறாய். இதுதான் உன் அபிப்பிராயம் என்றால் வெளிப்படையாகச் சொல்லிவிடு. பிறகு நான் உன்னைத் தொந்தரவு செய்யமாட்டேன்!' என்றாள்.

மிருணாளினி சட்டென்று எழுந்து உட்கார்ந்து, ஆத்திரத்துடன், 'என் எஜமானன் மேல் ஆணையிட்டுச் சொல்லுகிறேன், மன்னி, எனக்குத் துளிகூடக் கோபமில்லை. ஆனால் நான் சாப்பிட முடியாது. வா, மன்னி, நான் உன்னை மடியில் உட்கார வைத்துக்கொண்டு சாதம் ஊட்டுகிறேன், வா!' என்றாள்.

'ஆனால் ஜுரம் கிரம் ஒன்றுமில்லையா? இது வெறும் கபடம்தானே!' என்றாள் அசலா.

மிருணாளினி மௌனமாக இருந்தாள். அசலாவும் சிறிது நேரம் மௌனமாக இருந்துவிட்டு ஒரு நீண்ட பெரு

மூச்சு விட்டுக்கொண்டு, ' இப்பொழுது அறிந்தேன்! ஆனால், ஆரம்பத்திலேயே, "நீ தொட்டதைச் சாப்பிடமாட்டேன்" என்று வாய் விட்டுச் சொல்லியிருந்தாயானால், நான் இம்மாதிரி அனாவசியமாகப் பிடிவாதம் செய்து உனக்கும் கஷ்டத்தைக் கொடுத்திருக்க மாட்டேன்; நானும் இம்மாதிரி வேலைக்காரர்கள் முன் அவமானமடைய நேர்ந்திருக்காது. சரி, இந்த விஷயங்களை எல்லாம் விட்டுவிடு, என்னை மன்னித்துக்கொள், அம்மா! ஆனால் பாலுக்குத் தீட்டொன்றும் இல்லை என்று கேள்விப்பட்டிருக்கிறேன். அதையாவது ஒரு டம்ளர் கொண்டு வரட்டுமா? யது கடைத் தெருவுக்குப் போய் ஏதாவது பழம் வாங்கிக்கொண்டு வரட்டும், என்ன சொல்லுகிறாய்?' என்றாள்.

முதலில் மிருணாளினி ஒன்றும் தோன்றாமல் பேசாமல் உட்கார்ந்திருந்தாள்; சிறிது நேரம் பொறுத்து, அந்த பாவம் விலகிய பின்புங்கூட, வாய் திறந்து வார்த்தை ஒன்றும் சொல்லவில்லை. கீழே பார்த்துக்கொண்டு மௌனமாக உட்கார்ந்திருந்தாள்.

அசலா மறுபடியும் குத்திக்கொண்டே, 'என்ன சொல்லுகிறாய்?' என்றாள்.

மிருணாளினி தலைப்பினால் கண்களைத் துடைத்துக் கொண்டே, மிருதுவான குரலில், ' இப்பொழுது போகட்டும்' என்றாள்.

அசலா பின்னும் சற்று நேரம் பேசாமல் நின்றுகொண்டிருந்தாள். பிறகு மெள்ள மெள்ளச் சென்றாள்.

மிருணாளினி தலை நிமிரவுமில்லை, ஒன்றும் சொல்லவுமில்லை. கிழ மாமியாருக்கு அவள் சமையல் செய்து சாப்பாடு போடுவாள். அவள் ரொம்ப ஆசாரம் ஆசாரம் என்று சொல்லும் பழைய காலத்துக் கிழவி. அவளுக்கு இந்த விஷயம் தெரிந்துவிட்டால் மறுபடி இவள் தொட்ட தண்ணீரைக்

கூடத் தொட மாட்டாள். ஆனால் மிருணாளினி கௌரவக் குறைவு என்று பயந்து இந்த விஷயத்தில் துளிகூட அசலா வின் முன் வெளியிடவில்லை.

அசலா சமையலறைக்குச் சென்று, அவ்விடத்திய வேலைகளை முடித்துவிட்டு, கைகால் கழுவிக்கொண்டு, தன் அறைக்குச் சென்று படுத்தாள். ஆனால், வேறு எந்தக் காரணம் இருந்தாலும் இருக்கட்டும், வெறுப்பின் காரணமாக மாத்திரம் தான் செய்த சமையலை மிருணாளினி தொடவில்லை என்பது பொய் என்று அவள் மனத்திற்குள் அறிந்தாள். ஆகையால் அன்று அவள் இவ்விதமாக அவளுக்கு வருத்தத்தை யளித்தாள். அவள் இதைக்கூட உண்மை என்று எண்ணியிருந்தால் இதைப்பற்றி ஒரு வார்த்தை கூட வாயால் உச்சரித்திருக்க மாட்டாள். ஆனால் இருவரும் மனத்திற்குள், அன்று காலைப் பொழுது கலகத்தோடு விடிந்தது, மத்தியானம் யாருடைய அதிர்ஷ்டத்திலும் சாப்பாடு கிடைக்க பகவான் விதிக்கவில்லை என்று உணர்ந்தனர்.

பிற்பகல் மாட்டு வண்டி வந்து வாசலில் நின்றது. மிரு ணாளினி அசலாவின் அறைக்குள் வந்து, 'மன்னி, நமஸ்காரம் செய்ய வந்திருக்கிறேன், வீட்டுக்குப் போகப் போகிறேன். மீண்டும் இஷ்டப்பட்டால் கூப்பிட்டு அனுப்பு, நான் வந்து சேருகிறேன்!' என்று சொல்லிச் சற்று நிறுத்தி, மறுபடியும், 'போகும் பொழுது ஒரு வார்த்தைகூடச் சொல்ல மாட்டாயா, அம்மா?' என்று சொல்லி, ஒரு கணம் ஆவல் நிறைந்த பார்வையுடன் பார்த்துக்கொண்டு நின்றாள்.

ஆனால் அசலா ஒரு வார்த்தைகூடச் சொல்லவில்லை. எப்படி உட்கார்ந்திருந்தாளோ அப்படியே அசையாமல் தலை குனிந்து உட்கார்ந்திருந்தாள். அவள் அறையிலிருந்து வெளியே வந்ததுமே, மஹிம் வீட்டுக்குள் வருவதை மிருணா

ளினி கண்டாள். 'கொஞ்சம் நில் அண்ணு, உனக்கும் நமஸ்காரம் செய்துவிடுகிறேன்!' என்றுள்.

மஹிம் தலை நிமிர்ந்து, 'மிருணுள், சாப்பிடாமல் கொள்ளாமல் வீட்டுக்குப் போகிருயா? இல்லாவிட்டால், இன்று இரவு தங்கி நாளைக் காலையிலே போகலாமே!' என்றுன்.

மிருணுளினி சற்றே சிரித்துவிட்டுத் தலையசைத்துக் கொண்டே, 'இல்லை அண்ணு, யது வண்டி கொண்டுவந்து விட்டான், இன்று என்னை விட்டுவிடு, ஆனல் மறுபடியும் ஒரு நாள் என்னை அழைத்துக்கொண்டு வரவேண்டும்!' என்று சொல்லிக்கொண்டே தலைப்பை இழுத்துக் கட்டிக்கொண்டு, நமஸ்காரம் செய்து, அவன் பாத தூளியைச் சிரமேல் தரித்துக் கொண்டாள்.

'அண்ணு, என் தலைமேல் ஆணை, இன்னெரு நாள் என்னை அழைத்துக்கொண்டு வர மறந்துவிட வேண்டாம்!' என்றுள்.

அன்று மஹிம் சிறிது சிரித்தான். 'நாசமாய்ப் போகிறவளே, உன் சுபாவம் ஒருநாளும் போகாதா?' என்றுன்.

'செத்த பிறகு போகும், அதற்கு முன்னல் இல்லை!' என்று சொல்லி, மறுபடியும் ஒருமுறை சிரித்துவிட்டு, வண்டியில் போய் உட்கார்ந்தாள் மிருணுளினி.

இவ்விதமாகத் திடீரென்று அன்றே மிருணுளினி போய் விடுவாள் என்று அசலா கற்பனை கூடச் செய்யவில்லை. அவள் தனியாகத் தன் அறையில் உட்கார்ந்து அதைத்தான் யோசிக்கலானுள். அவளும் சாப்பிடவில்லை, தன்னையும் சாப்பிட விடவில்லை மிருணுளினி. இந்தக் குற்றத்திற்கு அவளுக்குப் பெரிய தண்டனை ஒன்று என்ன விதிக்கலாம்? காதல் கொண்டவர்களிடம் வெறுப்பு ஏற்படும் குற்றத்தைச் சுமத்துவதற்குச் சமானமான பெரிய தண்டனை வேறென்று

யில்லை; இந்த விஷயத்தைக் காதல்தானே சொல்லுகிறது! அசலா மிருணாளினிக்காக இந்தப் பெரிய தண்டனையையே மனத்திற்குள் நிச்சயம் செய்து வைத்திருந்தாள். பிரம்ம சமாஜி யானதால் தன்னிடம் மிருணாளினி மனத்திற்குள் எவ்வளவு வெறுப்புக் கொண்டாளோ, அதற்குப் பதில், அவள் உட்காரும் போதும் எழுந்திருக்கும் போதும் சொல்லிச் சொல்லிக் காட்டவேண்டும் என்று எண்ணியிருந்தாள். ஆனால் அவள் போய்விட்டதால் எல்லாம் வியர்த்தமாகி விட்டது.

ஆனாலுங்கூட, சாப்பிடாமலே மிருணாளினி விடை பெற்று அறையிலிருந்து வெளியே சென்றபொழுது, அவள் கண்களிலும் கண்ணீர் நிறைந்துவிட்டது. ஆனால் வெளியே யிருந்து கேட்ட அவளுடைய சிரிப்பின் சத்தம், ஒரு பாலை வானத்தில் விழும் நீர் போலப் பெருகிவரும் அவள் கண்ணீரை அப்படியே வரட்சிகொள்ளச் செய்துவிட்டது; தவிரவும், கதவின் இடுக்கு வழியாகப் பார்த்த பொழுது, அவர்கள் இருவரும் விடைபெற்ற காட்சியைக் கண்டு, இடியினால் தாக்கப்பட்ட மரத்தைப் போல, நின்ற இடத்திலேயே நின்று எரிந்து பஸ்மமானது போலானாள்.

சிறிது நேரத்திற்குப் பிறகு மஹிம் அறைக்குள் வந்த பொழுது, அசலாவின் சுபாவமான தைரியம் அடியோடு போய் விட்டதைப் போலவே இருந்தது. ஆயினும் பிறந்தது முதல் ஏற்பட்ட அவளுடைய படிப்பும் நாகரிகமும் அவளைக் கீழ்மையின் கையிலிருந்து தப்புவித்தன. அசலா முழு மனத்துடன் தன்னைச் சமாளித்துக்கொண்டு, கடுமையாகச் சிரித்துக்கொண்டே, 'உண்மையில், நகரத்து ஜனங்கள் கிராமத்தில் வந்து இருப்பார்களானால், அதைவிடப் பரிகாசமானது உலகத்தில் ஒன்றுமே இருக்காது அல்லவா?' என்றாள்.

மஹிம் மனைவியின் முகத்தின் பக்கம் பார்த்துச் சிறிது நேரம்வரை சும்மா யிருந்துவிட்டு, பிறகு, 'நீ உன் விஷயத்தைத்தான் சொல்லிக்கொண் டிருக்கிறாயா? எனக்குத் தெரியும், ஆரம்பத்தில் உனக்கு விதவிதமான கஷ்டங்கள் உண்டாகும் என்று. ஆனால் மிருணாளினியுடன் உனக்கு ஒத்துக்கொள்ளாது என்பதை நான் ஒருபொழுதும் எண்ணவில்லை; ஏனென்றால், அவளுக்கு யாரிடமும் எப்பொழுதும் சண்டையே ஏற்பட்டதில்லை' என்றான்.

'ஆனால் என்னுடன்தான் எப்பொழுதும் இந்தத் தெருப் பூராவும் சண்டை போட்டுக்கொண்டிருக்கிறது! இந்தச் சமாசாரம் உங்களுக்கு எங்கே கிடைத்தது?' என்றாள் அசலா.

மஹிம் மெதுவாக, 'நாள் பூராவும் நீ ஒன்றும் சாப்பிடவில்லை, போகட்டும். இவை எல்லாவற்றையும் இப்பொழுது விட்டுவிடு' என்றான்.

அசலா இன்னும் அதிகக் கோப மடைந்தவளாய், 'மிருணாளினி அக்காவும்தான் நாள் பூராவும் சாப்பிடாமலே மாமியார் வீடு சென்றாள்; ஆனால் அவளுடன் சிரித்துச் சிரித்துப் பேச உங்களுக்குத் தயக்கமொன்றும் ஏற்படவில்லையே?' என்றாள்.

மஹிம் திடுக்கிட்டுப் போனான். 'இதெல்லாம் என்ன சொல்லிக்கொண்டிருக்கிறாய் அசலா, நீ?' என்றான்.

'நான் உங்களுக்கு என்ன அப்படிப்பட்ட அபராதம் செய்துவிட்டேன், - அதற்காக இம்மாதிரி என்னை அவமானம் செய்யாமல் உங்களுக்கு நிம்மதி ஏற்படாம லிருந்தது - என்பதைத்தான் சொல்லிக்கொண் டிருக்கிறேன்!' என்றாள் அசலா.

மஹிம் சித்தம் கலங்கியவனாய் மீண்டும் அதே கேள்வியைக் கேட்டான். 'என்ன சொல்லிக்கொண் டிருக்கிறாய்? இவ் வார்த்தைகளின் பொருள் என்ன?' என்றான்.

அசலா சட்டென்று உரத்த குரலில், 'தாத்பரியம் இது தான்: எந்த அபராதத்திற்காக என்னை நீங்கள் இம்மாதிரி அவமானம் செய்தீர்கள்? உங்களுக்கு நான் என்ன கெடுதல் செய்துவிட்டேன்?' என்றாள்.

மஹிம் பதட்ட மடைந்து, 'நான் உன்னை அவமானம் செய்தேனா?' என்றான்.

'ஆமாம்!'

மஹிம் எதிர் வாதம் செய்து, 'பொய்!' என்றான்.

அசலா ஒரு கணம் ஸ்தம்பித்துப் போய் நின்றாள். அதன் பின் குரலைச் சற்றுத் தாழ்த்திக்கொண்டு, 'நான் ஒரு பொழுதும் பொய் சொல்வதில்லை. ஆனால் போகட்டும். இப்பொழுது உங்கள் விஷயத்தில், நீங்கள் உண்மையானவர்கள்தான் என்ற நம்பிக்கை இருந்தால், உண்மையான பதில் அளிப்பீர்களா?' என்றாள்.

மஹிம் ஆவல் நிறைந்த பார்வையுடன் பார்த்துக் கொண்டு மட்டும் இருந்தான்.

'மிருணாளினி அக்கா இன்று என்ன செய்துவிட்டுப் போனாளோ, அதை உங்கள் பட்டிக்காட்டுச் சமூகத்தில் அவமானம் செய்தது என்று சொல்லமாட்டார்களா?' என்று கேட்டாள் அசலா.

'இதில் என்னை ஏன் சேர்க்க விரும்புகிறாய்?'

'சொல்லுகிறேன். முதலில் சொல்லுங்கள், அதை என்ன சொல்லுகிறார்கள் இங்கே?'

'சரி, அப்படியேதான் வைத்துக்கொள்—'

அசலா நடுவிலேயே, '"வைத்துக்கொள்" இல்லை, சரியாகப் பதில் சொல்ல வேண்டும்!' என்றாள்.

'ஆமாம், கிராமத்தில் ஜனங்கள் இதை அவமானம் என்றுதான் எண்ணுகிறார்கள்' என்றான் மஹிம்.

'தெரிந்ததா? அப்பொழுது எல்லாம் தெரிந்து கொண்டேதான் நீங்கள் இந்த அவமானம் செய்தீர்கள். நான் கையால் தொட்டதை அவள் சாப்பிடமாட்டாள் என்று உங்களுக்கு நன்ருகத் தெரியும். சரிதானு இல்லையா?' என்று சொல்லி, அசையாத பார்வையுடன், அவன் ஹிருதயம் வரை தனது எரியும் பார்வையைச் செலுத்த முயலுபவள் போலப் பார்த்தாள். மஹிம் ஒன்றும் தோன்ருமல் முன்போல வருத்தமடைந்தவனுய்ப் பார்த்துக்கொண்டிருந்தான். அவன் வாயினின்றும் ஒரு வார்த்தைகூட வெளிவரவில்லை.

அதே சமயம் வெளியேயிருந்து, 'மஹிம்! எங்கே அப்பா இருக்கிருய்?' என்று ஸுரேசனின் குரல் கேட்டது.



## XVI

'இதென்ன ஸுரேஷ்! வா, உள்ளே வா! சந்தோஷமாகத்தானே இருக்கிறாய்?'

மஹிமின் வரவேற்பு வார்த்தைகள் முடியு முன்பே ஸுரேசன் எதிரே வந்து நின்றுகொண்டு, கையிலிருந்த 'க்லாட்ஸ்டன்' பையைக் கீழே வைத்துவிட்டு, 'ஆமாம், ஆமாம்! ஆனால் இதென்ன தனியாக நின்று கொண் டிருக்கிறாய்! புது நாட்டுப் பெண் அசலா நிமிஷத்திற்குள் சசலாவாக எங்கே மறைந்துவிட்டாள்? உங்களுடைய அந்தக் காதல் வார்த்தைகள் எனக்கு இந்தத் தெருக் கோடியில் கேட்டுத்தான் வீட்டைத் தெரிந்துகொண்டேன்!' என்றான்.

உண்மையில் அசலாவின் கடைசி வார்த்தைகள் கோபத்துடன் வெளிப்பட்டன. வெளியே கதவு மறைவில் நின்றே ஸுரேசன் அவற்றைக் கேட்டுவிட்டான்.

'பார், மஹிம்! படித்த மனைவி கிடைப்பது எவ்வளவு லாபம் பார்த்தாயா? இப்பொழுது எவ்வளவு நாளாயிற்று? ஆனால் இந்தச் சில தினங்களிலேயே இந்தப் பட்டிக்காட்டுக் காதல் பத்ததிகளைச் சொந்தமாக்கிக்கொண்டுவிட்டாள். இதில் என்ன வேடிக்கையென்றால், கிராமத்து ஸ்திரீகள் கூட இதில் குற்றம் சொல்ல முடியாது!' என்றான் ஸுரேசன்.

வெட்கத்தால் மஹிமின் முகம் வாடியது. அவன் பேசாமல் நின்றுகொண்டிருந்தான். ஸுரேசன் அறையின் உட்புறம் அசலாவை நோக்கி மறுபடியும் சொல்லலானான்:

'ரொம்ப அசந்தர்ப்பமான வேளையில் வந்து ரஸபங்கம் செய்துவிட்டேன், மன்னி! மன்னித்துக்கொள். மஹிம், ஏன் நின்றுகொண்டிருக்கிறாய்? உட்காருவதற்கு ஏதேனும் இருந்தால் கொண்டுவந்து போடு! வா, போய் உட்காரலாம். நடந்து நடந்து பாதங்கள் தேய்ந்துவிட்டன. நல்ல இடம் பார்த்து வீடு பிடித்தாய், அப்பா! வா, வா, கல்கத்தா போவோம்!' என்றான்.

'வா!' என்று சொல்லி மஹிம் அவனை வெளி அறைக்கு அழைத்துக்கொண்டு வந்தான். ஸுரேசன் உட்கார்ந்து கொண்டே, 'என்ன, மன்னி என் எதிரே வரமாட்டாளா? என்ன பர்தாப் பெண்ணாகி விட்டாளா?' என்றான்.

மஹிம் பதில் சொல்வதற்கு முன்னாலேயே பக்கத்துக் கதவைத் திறந்துகொண்டு அசலா பிரவேசித்தாள். அவள் முகத்தில் கலகத்தின் சின்னம்கூட இல்லை. நமஸ்காரம் செய்து, இன்முகத்துடன், 'இது எங்கள் ஆசைக்கும் எட்டாத சௌபாக்யம்! எப்படி இம்மாதிரித் திடீரென்று வந்தீர்கள்?' என்றாள்.

அவளுடைய மலர்ந்த நகை நிறைந்த முகத்தில் சுக சௌபாக்யத்தின் ஆனந்த விகாசத்தைக் கற்பனை செய்து ஸுரேசனின் உள்ளம் பொறாமையால் எரிந்தது; கையெடுத்துப் பிரதி நமஸ்காரம் செய்துவிட்டு, 'திடீரென்று வருவது உசிதமில்லை என்பதை இப்பொழுது அறிகிறேன். ஆனால் இப்பொழுது என்ன நடந்துகொண்டிருந்தது? உங்களுடைய "முதல் மனஸ்தாபம்" வந்ததுமே இந்த அபிப் பிராய பேதம் வந்துகொண்டிருக்கிறதா? என்ன விஷயம்?' என்றான்.

அசலா முன்போலவே சிரித்த முகத்துடன், 'எதைக் கேட்டால் தாங்கள் அதிகச் சந்தோஷமடைவீர்கள், சொல்லுங்கள்? கடைசி விஷயத்தைக் கேட்பதாலா? அப்பொழுது

அதையே சொல்வது நல்லது, அதிதியின் மனதைக் கஷ்டப் படுத்தக் கூடாது' என்றாள்.

ஸுரேசன் முகம் கம்பீர மடைந்தது. 'கஷ்டம் கொடுக்கக் கூடாது என்று யார் சொன்னார்கள்? வீட்டுப் பெண்மணிகளுக்கு அதுதானே ஏற்பட்ட காரியம், அதில் தானே அவர்களுக்குச் சிறந்த அனுபவம்?' என்றான்.

அசலா சிரித்துக்கொண்டே, 'வீடே யில்லாவிட்டால் வீட்டுப் பெண்மணி எங்கிருந்து வந்தாள்! எங்களைப் போன்ற ஏழை எளியவர்களின் குடிசையில் தாங்கள் எப்படி இராப் பொழுதைக் கழிப்பீர்கள்? எனக்கு அதுதான் கவலை. ஆனால், அறிந்தே இந்தக் கஷ்டத்தை ஏற்க வந்தீர்கள். தாங்கள் தன்யர்!' என்று சொல்லிக் கணவனைப் பார்த்து, 'சரி, நயன் பாபுவிடம் சொல்லிச் சந்திர பாபுவின் வீட்டில் இன்றிரவு மாத்திரம் இவர் படுத்துக்கொள்ள ஏற்பாடு செய்ய முடியாதா? அவர் வீடு பெரியது, உட்காரக் கொள்ள அங்கே சௌகரியமாக இருக்கும். இவருக்குக் கஷ்டம் ஒன்றும் இருக்காது!' என்றாள்.

சகஜத் தன்மை என்ற போர்வையில் இருவர்களும் செய்த குதர்க்கம் நிறைந்த வாதப் பிரதிவாதங்களால் மஹிம் மனத்திற்குள் சஞ்சல மடைந்தான்; ஆனால் அதை எப்படித் தடுப்பது என்பது ஒன்றும் அவனுக்கு விளங்க வில்லை. அதற்குள் ஸுரேசன் அதற்கு ஒரு பரிகாரம் செய்துவிட்டான். அவன் சட்டென்று கைகுவித்துக் கொண்டு, 'என்னால் தவறு நேர்ந்துவிட்டது, மன்னி, ஆகையால் முதலில் கொஞ்சம் டீ—கீ ஏதாவது கொடு, சாப்பிட்டுவிட்டு, உடம்பில் சற்று தெம்பு ஏற்படட்டும், பிறகு நயன் பாபுவிடம் சொல்லு, சிரவண பாபுவிடம் சொல்லு! இல்லை, சந்திர பாபுவின் வீட்டில் வேண்டுமானா லும் படுக்கச் சிபார்சு செய். ஆனால், எது வேண்டுமானாலும்

சொல்லு, மஹிம்! இந்த வீட்டில் இவ்வளவு சிக்கனம் உண்மையிலேயே இருக்குமானால் அது அவசியம் சந்தோஷப் படக்கூடிய விஷயம்!' என்றான்.

மஹிமின் தரப்பிலிருந்து அசலாவே பதில் சொன்னாள். அவள் சிரித்துக்கொண்டே, 'சந்தோஷ மடைவது, அடையாம லிருப்பது - மனிதனுக்கு அவன் கையிலிருக்கும் விஷயம். ஆனால் இது என்னுடைய பக்ஷம். இங்கே செட்டா யில்லாமல் பெரிய பணக்காரர் வீட்டில் செட்டு இருக்கு மென்பது அசம்பாவிதம். போகட்டும், முதலில் களைப்பைத் தீர்த்துக்கொள்ளுவோம். பிறகு மற்ற விஷயங் களைப் பேசலாம். டீக்கு ஜலம் போடச் சொல்லிவிட்டு வந்தேன். ஐந்து நிமிஷத்திற்குள் வருகிறேன். அதுவரை யில் வாயை மூடிக்கொண்டு சற்று இளைப்பாறுங்கள்!' என்று சொல்லிச் சிரித்துக்கொண்டே சென்றாள்.

அவள் சென்றதும் ஸுரேசன் உள்ளத்தின் ஜ்வாலை அதிகரித்தது. அவன் எப்பொழுதுமே தன்னைப் பலவீன மானவன் என்றும், ஸ்திரபுத்தியற்றவன் என்றும் எண்ணி வந்திருந்தான். ஆயினும், அதற்காக அவன் எவ்விதத் திலும் லஜ்ஜையோ அல்லது வருத்தமோ அடைந்த தில்லை. பாலிய நண்பர்கள், அவனை மஹிமுடன் ஒப் பிட்டு, வெறும் கற்பனை செய்பவன் என்று சொல்லுவார்கள். அப்பொழுது, அவன் மனத்திற்குள் சந்தோஷத்துடன், 'இது சரி! என்னுடைய தீர்மானத்தில் பலமில்லை. நான் உணர்ச்சி வசமானவன்; ஆனால் என்னுடைய ஹிருதயம் மகத்தானது. நான் ஒருபொழுதும் ஈனமான - கீழான - காரியத்தைச் செய்ய முடியாது. நான் என் வருவாயைக் கணக்கிட்டுச் செலவு செய்ய அறியமாட்டேன், பாத்திரம் அபாத்திரம் இவைகளைப் பார்த்து நான் தானம் செய்ய முடி யாது. மனம் இளகிவிட்டால், மேலே யிருக்கும் துணியைக்

கூட எடுத்துக் கொடுப்பதில் தயங்கமாட்டேன். பிறகு யாராவது, எந்தக் காரணத்தைக் கொண்டாவது, "ஸுரேசன் யாரிடமாவது துவேஷப்படுகிறான்", அல்லது, "சுய நலத்திற்காக அவன் செய்ய வேண்டாததைச் செய்கிறான்" என்று சொல்ல முடியாது என்று எண்ணிக்கொள்வேன். "ஹிருதயத்தின் வியாபாரத்தில் பிறந்ததிலிருந்தே பலவீனமாக இருக்கிறான்" என்ற கெட்ட பெயர் எனக்கு இருக்கிறது, அது உண்மை' என்று நினைப்பான். அன்று திடீரென்று அசலாவுக்கும் கடைசி நிமிஷத்தில் தன்னைப் பற்றிய இவ்வளவு கடினமான ரகசியம் தெரிந்துவிட்டது என்ற உணர்ச்சி, அவனுக்குள் அறியாமல் கிடந்த ஒரு சக்தியின் தரிசனத்தைக் கொடுத்து அவனுக்கு உள்ளத் திருப்தியை ஏற்படுத்திற்று. அத்துடன், கர்வத்தினால் அவன் உள்ளமும் பூரித்தது. அசலாவின் கலியாணத்திற்குப் பிறகு இரண்டு நாள் வரை அவன் இதையேதான் சொல்லிக்கொண் டிருந்தான் — 'நான் சக்தியற்றவன் அல்ல. பொறாமை யில்லாதவன் அல்ல, நான் உணர்ச்சிக்கு அடிமையானவன் அல்ல; ஆனால் அவசியம் நேர்ந்துவிட்ட பொழுது உணர்ச்சிகளை யெல்லாம் வேரோடு களைந்து எறிந்துவிட என்னால் முடியும். நட்பு என்பது என்ன? நண்பனின் சந்தோஷத்திற்காக, மற்ற நண்பன் எவ்வளவு மகத்தான தியாகத்தைச் செய்ய முடியும் என்பதை, நண்பனும் நண்பனுடைய மனைவியும் இப்பொழுது அறிவார்கள்.'

ஆனால் எந்தப் பொய்யினாலும் நெடு நாள்வரை ஓர் இடத்தைப் பூர்த்தி செய்து வைத்திருக்க முடியாது. உள்ளத்தை அடக்குவது அதற்குச் சரியான பரிகாரமல்ல. வாஸ்தவத்தில் அது ஆன்ம வஞ்சனையாகும். இதன் பலனாக ஒரு வாரம் பூராவும் கழியு முன்பே அவன் அந்தப் பொய்த் தியாகத்தின் மோகத்தைத் தன் உடைந்த ஹிருதயத்திலிருந்து

மெள்ள வெளியேற்றி ஒடுக்கலானான். ஆனால், அடிக்கடி அவன் மனம், 'இந்தத் தியாகத்தால் எனக்குக் கிடைத்த தென்ன? அது எனக்கு என்ன கொடுத்தது? எந்த ஆதாரத் தின் சகாயத்தால் என்னை நான் திருத்திக்கொள்வேன்?' என்றெல்லாம் எண்ணியது.

'அப்பா ஸுரேஷ், நீயும் இப்பொழுது அம்மாதிரி ஒரு நாட்டுப் பெண்ணைக் கொண்டுவா, நான் அவளுடன் குடித் தனம் செய்கிறேன்' என்றாள் அத்தை.

ஒரு நாள் பிரம்ம சமாஜத்தின் வாசல் முன் கேதார் பாபுவைச் சந்தித்த பொழுது, அவரே உண்மையில் தாம் செய்த அந்தக் காரியம் சரியல்ல என்பதை விளக்கமாக ஒப்புக் கொண்டார். மஹிமுக்குக் கலியாணம் செய்துகொடுக்க ஆரம்பத்திலேயே அவருக்கு இஷ்டமில்லை. ஸுரேசன் தகுதியற்றவனானதால் கடைசியில் அவர் சம்மதிக்க வேண்டி யிருந்தது. வீட்டுக்கு வந்ததும், ஸுரேசன் மனத்தில், 'இந்தக் கலியாணத்தினால் யாரும் சுகமடையக் கூடாது. என்னை அலட்சியம் செய்ததின் அபராதத்தை என் நண்பனும் அநுபவிக்க வேண்டும், அசலாவும் தன்னுடைய தவறை உணர்ந்து உள்ளத் துக்கத்தால் கொதிக்க வேண்டும்' என்ற சாபம்தான் எழுந்தது. ஆனால் இதன் கருத்து அவன் மனம் இழிவானது என்பதல்ல. இந்தக் கெட்ட எண்ணங்களுக் காகத் தன்னை அவன் பலமாக அடக்கிக்கொள்ள விரும்பினான்; ஆனால், வருத்தமும் ஏமாற்றமும் நிறைந்த அவனுடைய உள்ளம், எவ்விதத்திலும் வசமாகாமல், பிடிவாதம் பிடிக்கும் பையனைப் போல, நிரந்தரமாக அதே வார்த்தையைத் திருப் பித் திருப்பிச் சொல்லலாயிற்று. இந்த விதமாக எப்படியோ ஒரு மாதத்தைக் கழித்தான். கடைசியில் ஒரு நாள், ஆவலை அடக்க முடியாமல், கையில் பையை எடுத்துக்கொண்டு மஹி மின் வீட்டுக்கு வந்து சேர்ந்தான்.

ஸுரேசன் நண்பனின் முகத்தைப் பார்த்து, 'என்னுடைய வார்த்தையில் எவ்வளவு உண்மையிருந்தது என்பதை இப்பொழுது பார்த்துக்கொண்டிருக்கிறாய் அல்லவா, மஹிம்?' என்றான்.

'எந்த விஷயம்?' என்றான் மஹிம்.

ஸுரேசன், சிறந்த அறிவாளியைப் போல, 'நான் என்னமோ கிராமத்தை விரும்புபவன் அல்ல, ஆனால் இவ் விடத்திய விஷயங்கள் எல்லாவற்றிலும் பரிசயமானவன். ஆகையினால்தான், கிராம சமூகத்துடன் ஒரு கடினமான விரோதம் எழும் என்று நான் உனக்கு எச்சரிக்கை செய்தேன்' என்றான்.

மஹிம் சகஜமான பாவத்துடன், 'இங்கே அம்மாதிரியான குறிப்பிட்ட விஷயங்கள் ஒன்றும் நடக்கவில்லையே?' என்றான்.

'வேறு விரோதம் என்ன! உன் வீட்டில் யாராவது சாப்பிட்டார்களா? இதுவே போதுமான துக்கத்திற்கும் அவமானத்திற்கும் காரண மல்லவா?'

'நான்தான் யாரையும் சாப்பிட அழைக்கவில்லையே?'

'அழைக்கவில்லையா? சரிதான் என்னைக்கூடக் கிருகப் பிரவேசச் சாப்பாட்டிற்கு அழைக்கவில்லை!'

'அது நடக்கவேயில்லை, அதனால் அழைக்கவில்லை.'

ஸுரேசன் ஆச்சரிய மடைந்தவனாய், 'கிரகப் பிரவேசம் நடக்கவில்லையா? சரி உங்களிடம் — ஆனால் இம் மாதிரி எத்தனை உபத்திரவங்களுக்குத் தப்பியிருப்பாய்? ஆபத்து சம்பத்துக்கள் — குழந்தை குட்டிகள் விஷயம் — கடைசியில் குடும்பத்தில் — எதைத்தான் செய்யவேண்டியிருக்காது? நான் இதைச் சொல்வது —' என்று இழுத்தான்.

இதற்குள் யது கையில் வேண்டிய சாமான்களுடனும், அசலா கையில் சிற்றுண்டியுடனும் வந்து சேர்ந்

தார்கள். ஸுரேசனுடைய கடைசி வார்த்தை அவள் காதிலும் விழுந்துவிட்டது ; அவளுடைய தோற்றத்திலிருந்தே ஸுரேசன் அதை உணர்ந்துகொண்டான். நண்பர்களிருவரும் சிற்றுண்டி அருந்தி முடிந்ததும், மஹிம் வேஷ்டியை எடுத்துத் தோளில் போட்டுக்கொண்டு, எழுந்து நின்றான். கிராமத்தின் ஜமீன்தார் ஒரு மகம்மதியன் ; அவன் பிள்ளைக்கு மஹிம் ஆங்கிலம் சொல்லிக் கொடுத்துக்கொண்டிருந்தான். ஜமீன்தார் படித்தவனாயில்லாவிட்டாலும் உதார குணமுடையவன். மஹிமிடம் அவனுக்குப் போதுமான நல்ல எண்ணம் உண்டு. ஆகையால் கிராமத்திலுள்ளவர்கள் சமூகத்தின் பெயரைச் சொல்லி மஹிமுக்குக் கொடுமைகள் இழைக்க இதுவரை துணியவில்லை.

‘இன்று பாடம் சொல்லிக்கொடுக்கப் போகாவிட்டால் ஏதாவது தடை உண்டா ?’ என்றாள் அசலா.

‘ஏன் ?’ என்றான் மஹிம்.

அசலாவின் மனோபலம், உள்ளத்தின் நிர்மலம் எவ்வளவுதான் விரிந்திருந்தாலும், ஸுரேசனுடன் அவளுக்குச் சம்பந்தம் ஏற்பட்டிருந்த மாதிரியில், அவனுடைய அகஸ்மாத்தான வருகையினால் எந்த ஸ்திரீயும் சங்கோசமடையாமல் இருக்க முடியாது. ஸுரேசனை அவள் நன்றாக அறிவாள் ; அவன் ஹிருதயம் எவ்வளவு மகத்தானதாக இருந்தபோதிலும், அந்த ஹிருதயத்தின் ஆவேகத்தில் அவளுக்கு நம்பிக்கையில்லை, அவனிடம் பயமும் கொண்டிருந்தாள். சாயங்கால வேளையில் தன் புருஷன் அவனுடன் தன்னைத் தனியாக விடுத்துப் போவதென்பதைப் பற்றி அவள் மனத்திற்குள் வியாகூலமடைந்தாள் ; ஆனால் அதை லவலேசமும் வெளிக்குக் காட்டாமல், சிரித்துக்கொண்டே, ‘பேஷ் ! இம்மாதிரியும் எங்காவது உண்டா ? விருந்தாளியைத் தனியாக விட்டுவிட்டு......’ என்றாள்.

'அதனால் அதிதி சத்காரத்தில் எவ்விதக் குறைவும் ஏற்படாது. தவிர நீதான் இருக்கவே இருக்கிறாய்!' என்றான் மஹிம்.

அசலா பக்கத்தில் வந்துகொண்டே, 'ஆனால் நான் என்னமோ இருக்க முடியாது!' என்று சொல்லி, ஸுரேசன் பக்கம் பார்த்து, 'எங்கள் உடியா சமையற்காரன் பலே நிபுணன். அவன் கூட இருக்காவிட்டால் சமையல் ஒன்றும் வாயில் வைக்க விளங்காது. நான் சொல்லுகிறேன், தவிர—' என்றாள்.

மஹிம் தலையசைத்துக்கொண்டே, 'இல்லை, அது முடியாது. இரண்டு மணி நேரம்தானே!' என்று சொல்லி மூலையிலிருந்த கைப் பிரம்பை எடுத்துக்கொண்டான். ஒன்று, மஹிமுடைய வேலைமுறைகள் சுலபமாக மாறாது, மற்றொன்று, இந்தச் சாதாரண விஷயத்திற்காகத் திரும்பத் திரும்ப வற்புறுத்துவதும் அசலாவுக்கு வெட்கமாக இருந்தது. தவிர, தன்னுடைய பயத்தை ஸுரேசன் அறிந்துகொண்டுவிட்டால் அவன் வெட்கம் இன்னும் அதிகரிக்கும் என்ற பயமும் ஏற்பட்டது.

மஹிம் மெள்ள வெளியே சென்றான். அவனுக்குக் கேட்கும்படியாக ஸுரேசன் அசலாவிடம் சிரித்துக்கொண்டே, 'ஏன் தடை சொல்லி நீ தோல்வியடைகிறாய்? பிறர் சொல்வதைக் கேட்கும் வழக்கம் உள்ளவன் அல்ல அவன் என்பது எனக்கு எப்பொழுதுமே தெரியும். நீ ஏதாவது ஒரு புஸ்தகத்தை என்னிடம் கொடுத்துவிட்டு, உன் வேலையைக் கவனிக்கப் போ! என் பொழுது சந்தோஷமாகக் கழிந்துவிடும்' என்றான்.

வார்த்தை அசலாவுக்குச் சுருக்கென்று பட்டது. உண்மையில் அவள் வற்புறுத்தலை மஹிம் ஒருநாளும் கேட்டதில்லை. அவளுக்கு எவ்வளவுதான் பெருந்தன்மையிருக்

கட்டும், ஸுரேசன் கணவனின் இந்த நெடுநாள் பழக்கத்தைப்பற்றித் தன் எதிரிலேயே சொன்னது இன்று அவளுக்கு அவமானமாகவும் அலட்சியமாகவும் பட்டது. அவள் ஒன்றும் சொல்லாமல் அறைக்குள் சென்று, யதுவி னிடம் ஒரு புஸ்தகத்தைக் கொடுத்தனுப்பிவிட்டுத் தான் சமைய லறைக்குள் சென்றாள்.

இரவு வெகுநேரம் கழித்து மஹிம் தூங்கச் சென்ற பொழுது, 'ஸுரேசன் எத்தனை நாள் இங்கே இருக்கப் போகிறான்? உன்னிடம் ஏதாவது சொன்னானா?' என்று கேட்டான்.

முன்பே பலவிதக் காரணங்களால் அன்று பூராவும் கணவனிடம் அவளுக்குச் சந்தோஷமில்லை; அதன்மேல் இந்தக் கேள்வியைக் கேட்டதும் குதர்க்கமாகக் கேலியைக் கற்பனை செய்துகொண்டு, அவள் அந்த க்ஷணமே எரிச்ச லுடன் கடுமையான குரலில், 'இதன் அர்த்தம்?' என்றாள்.

மஹிம் இடிந்துபோனான். அவன் சகஜமான பாவத் திலேயே விஷயத்தை அறிய விரும்பினான். கேலியாகவோ குத்தலாகவோ அவன் ஒன்றும் செய்யவில்லை. அவன் அவ்வளவு நேரத்துச் சம்பாஷணையில் நண்பனிடம் இதைக் கேட்க முடியவில்லை. ஸுரேசனும் ஒன்றும் சொல்லவில்லை. ஆனால் ஸுரேசன் அசலாவிடம் கட்டாயம் இதைச் சொல்லி யிருப்பான் என்று அவன் நம்பியிருந்தான்.

மஹிம் சும்மா யிருப்பதைப் பார்த்து, அசலா தானே பேசலானாள். 'இதன் அர்த்தம் நீங்கள் கேட்கவேண்டிய அவசியம்கூட இல்லை என்பதுதானே? ஸுரேஷ் பாபு ஏதோ ஒரு தீர்மானத்துடனேயே இங்கே வந்திருக்கிறார் என்பது உங்கள் எண்ணம்; அது பூர்த்தியாக எவ்வளவு காலமாகப் போகிறது என்பது எனக்குத் தெரியும், இது தானே?' என்றாள்.

மஹிம் பின்னும் சற்று நேரம் வரை சும்மா யிருந்து, அன்பான குரலில், 'எனக்கு அம்மாதிரி எண்ணமில்லை. ஆனால் மிருணாளினியின் விவகாரத்தால் இன்று உன் மனம் சரியா யில்லை; எப்பொழுதுமே நீ எந்த விஷயத்தையும் பொறுமையோடு அறிந்துகொள்ள முடிவதில்லை. இன்று தூங்கு, நாளைப் பேசிக் கொள்ளலாம் இவை எல்லாவற்றையும்!' என்று சொல்லி, அவனே படுக்கையை எடுத்துப் போட்டு ஒருக் களித்துப் படுத்துக்கொண்டு தூங்க முயற்சி செய்யலானான்.

அசலாவும் படுத்திருந்தாள். ஆனால் எவ்விதத்திலும் அவள் தூங்க முடியவில்லை. நாள் முழுவதும் மேன்மேலும் வளர்ந்த வெறுப்பும் பேச்சு வார்த்தைகளும், ஏதாவதொரு காரணத்தால் கலக ரூபத்தில் வெளியா யிருந்தால் அவளுக்குச் சாந்தி ஏற்பட்டிருக்கும்; ஆனால் மஹிம் இவ்விதமாக அவளை வாய் மூடிவிட்டதால் அவள் தனக்குள் புழுங்கலானாள். இன்னொரு கஷ்டம், தடைபட்ட விஷயத்தைப் படிப்பில்லாத சாதாரண ஸ்திரீகள் பலவந்தமாக ஒப்புக்கொண்டு நடப்பதில் கொள்ளும் லஜ்ஜையும், தாழ்மையும் கூட அவளிடம் கிடையாது. அவள் கற்பனையில் கணவனை எதிர்த் தரப்பில் நிறுத்தி, ஜ்வாலை மயமான கேள்வி-பதில் தொடர்ச்சியால் தன்னைப் புண்படுத்திக்கொண்டு, இரவு வெகு நேரம் வரை விழித்துக் கொண்டு படுக்கையில் படுத்தவண்ணம் துடித்துக்கொண் டிருந்தாள். விடியற்காலம் கண் விழித்தபோது அவள் வாரிச் சுருட்டிக்கொண்டு எழுந்து உட்கார்ந்தாள். வெளியே வந்து பார்த்த போது டீ கெட்டிலைக் கையில் எடுத்துக்கொண்டு யது சமையலறைப் பக்கம் சென்றுகொண் டிருந்தான். அவனைக் கூப்பிட்டு, 'பாபு ஏதாவது சொல்லிவிட்டுப் போனாரா?' என்றாள்.

'பத்து நாழிகைக் கெல்லாம் திரும்பி வருவதாகச் சொல்லிவிட்டுப் போனார்' என்றான் யது.

மஹிம் தினம் அதிகாலையில் எழுந்திருந்து தன் வயல் களைப் பார்க்கச் செல்வது வழக்கம். சில சமயம் திரும்பி வர மத்தியானமும் ஆகிவிடும்.

'புதிய பாபு எழுந்திருந்துவிட்டாரா?' என்றாள் அசலா. 'ஆம், எழுந்திருக்காமல் என்ன? அவர்தான் டீ போடச் சொன்னார்!' என்றான் யது.

அசலா மளமளவென்று கைகால் முகம் கழுவி, ஆடை மாற்றிக்கொண்டு வெளியே வந்து பார்க்கும் பொழுது, ஸுரேசன் வெகு நேரத்திற்கு முன்னேயே எழுந்து ஜன்னல் கதவைத் திறந்து, அதன் எதிரே ஒரு நாற்காலி யில் உட்கார்ந்து, முன் தினம் கொடுத்த புஸ்தகத்தைப் படித் துக்கொண்டிருந்தான். அசலாவின் காலடிச் சத்தத்தைக் கேட் டதும் அவன் புஸ்தகத்திலிருந்து தலை நிமிர்ந்து பார்த்தான். அசலாவின் முகத்தில் இரவு கண் விழித்த எல்லாச் சின்னங் களும் ஜ்வலித்துக்கொண்டிருந்தன. கண்கள் குழி விழுந் திருந்தன். முகம் வெளுத்து, உதடுகள் உலர்ந்திருந்தன. பார்க்கப் பார்க்க அவன் கண்கள் பொறாமை நெருப்பினால் எரிய ஆரம்பித்தன. எவ்விதத்திலும் தன் பார்வையை அவனால் அவளிடமிருந்து திருப்ப முடியவில்லை.

அவனுடைய பார்வையின் முறையைக் கண்டு அசலா ஆச்சரியமடைந்து போனாள்; ஆனால் அர்த்தத்தை அறிந்து கொள்ள முடியவில்லை.

'எனக்கு எழுந்திருப்பதற்கு இன்று சற்று நேரமாகி விட்டது!' என்றாள் அவள்.

'உம்! அதுதான் பார்த்துக்கொண் டிருக்கிறேன்!' என்று சொல்லி, ஸுரேசன் மெள்ளத் தலையை அசைத்தான். எதிரிலேயுள்ள சுவரில் வெகு நாளைய பழைய கண்ணாடி ஒன்று தொங்கிக்கொண்டிருந்தது; அதே சமயத்தில் அசலாவின் பார்வை அதன்மேல் விழுந்தது. ஸுரேசனின் வார்த்தை

களின் அர்த்தம் அவளுக்கு ஒரு கணத்தில் விளங்கிவிட்டது. தான் குதூகலமின்றித் தென்பட்டதை அறிந்து வெட்கத் தால் அவள் குன்றிப் போனாள். அந்த முகத்தை அவள் எப்படி ஒளித்துக்கொள்வாள், எங்கே ஒளித்துக்கொள்வாள், ஸுரேசனின் பொய்க் கேள்விகளுக்கு எப்படிப் பதில் சொல் வது ஆகிய ஒன்றும் அவளுக்கு விளங்காததால், அவள் வெளியே சென்றாள்.

'போய்த் தங்களுக்கு டீ கொண்டு வருகிறேன்!' என்று சொல்லிவிட்டுப் போனாள்.

ஸுரேசன் ஒன்றும் சொல்லவில்லை; ஒரு நீண்ட பெரு மூச்சு விட்டுக்கொண்டு வரண்ட பார்வையுடன் அசலாவின் பக்கம் பார்த்துக்கொண்டு பேசாமல் உட்கார்ந்திருந் தான்.

பத்து நிமிஷங்களுக்குப் பிறகு, டீ சாமான்களை எடுத் துக்கொண்டு அசலா திரும்பி வந்தபொழுது ஸுரேசன் தன்னைச் சுதாரித்துக்கொண்டான். டீ குடித்துக்கொண்டே, 'நீ குடிக்கவில்லையா?' என்றான்.

அசலா சிரித்துக்கொண்டே, 'நான் இப்பொழுது குடிப்பதில்லை!' என்றாள்.

'ஏன் குடிப்பதில்லை?'

'இப்பொழுது பிடிப்பதில்லை. மேலும் இந்த இடம் உஷ்ணமல்லவா, டீ குடித்தால் தூக்கம் வருவதில்லை. நேற்று இரவு பூராவும் தூங்கவே முடியவில்லை' என்று சொல்லிச் சிரித்துவிட்டு, 'ஒரு இரவு தூக்கம் வராவிட்டால் முகம் இவ் வளவு பெரியதாகிவிடுகிறது. முகத்தைப் பிறர் முன் காட்ட முடியவில்லை' என்று சொல்லி, லஜ்ஜையடைந்த முகத்துடன் மெள்ளச் சிரிக்கலானாள்.

ஸுரேசன் சிறிது நேரம் சும்மா யிருந்துவிட்டு, பிறகு, 'ஆனால் இதுதான் உன்னுடைய சிறுவயதுப் பழக்கமாயிற்றே!

டீ குடிக்கும்படி உன்னை மஹிம் வற்புறுத்தவில்லையா ?' என்றான்.

அசலா சிரித்துக்கொண்டே, 'வற்புறுத்தினால்கூட இங்கே யார் கேட்பார்கள் ? தவிர, இதென்ன அப்படிப்பட்ட வஸ்து, இதைக் குடிக்காவிட்டால் காரியம் நடக்காதோ ?' என்றாள்.

அவளுடைய சிரிப்பு மேலுக்குத்தான் என்பதை ஸுரேசன் தெளிவாக அறிந்துகொண்டான். பிறகு சிறிது பொறுத்து, 'உனக்குத்தான் தெரியுமே! பீடிகைக ளெல்லாம் போட்டுப் பேசும் வழக்கம் எனக்கில்லை; பேசவும் முடியாது. அதனால்தான் கேட்கிறேன். வெளிப்படையாக இரண்டொரு வார்த்தை கேட்டால் கோபித்துக்கொள்ள மாட்டாயே ?' என்றான்.

அசலா நகை முகத்துடன், 'நன்றாகச் சொன்னீர்கள்! நான் ஏன் கோபித்துக்கொள்ளப் போகிறேன் ?' என்றாள்.

'சரி, நான் கேட்கிறேன், நீ இங்கே சுகமாக இருக் கிறாயா ?'

அசலாவின் சிரித்த முகம் வாடியது. 'அந்த மாதிரி நீங்கள் கேட்பது சரியல்ல!' என்றாள்.

'ஏன் இல்லை ?'

அசலா தலையசைத்துக்கொண்டு, 'இல்லை, தங்கள் மனத்தில் நான் இங்கே சுகமாக இல்லை என்ற எண்ணம் உண் டாவதே பிசகு!' என்றாள்.

ஸுரேசன் ஒரு மெல்லிய சிரிப்புச் சிரித்துக்கொண்டு, 'மனம் என்ன, எது சரி, எது பிசகு என்பதை எண்ணித்தான் எதையாவது நினைக்கிறதா, அசலா ? இரண்டு மாதத்திற்கு முன் இதை நினைப்பது எனக்கு உசிதமாக இருந்தது,—அது மாத்திர மல்ல — எனக்கு நினைக்க அதிகாரமும் இருந்தது. இன்று, இரண்டு மாதங்களுக்குப் பிறகு, எல்லா அதிகாரங்

களும் போய்விட்டன! போகட்டும், எனக்கு யாதொரு கவலை யும் இல்லை, — இப்பொழுது உண்மையை மாத்திரம் அறிந்து செல்ல விரும்புகிறேன். எப்பொழுது வந்தேனோ, அப் பொழுது சில சமயம் ஜயித்தது போல் தோன்றுகிறது; சில சமயம் தோற்றதைப் போல் தோன்றுகிறது. என் மனம்தான் உனக்குத் தெரியாதது அல்லவே, ஒரு தடவை உண்மையைச் சொல்லமாட்டாயா, அசலா? என்ன விஷ யம்?' என்றான்.

அசலாவின் அடக்க முடியாத கண்ணீர் அலைகள் கண்கள் வரை பொங்கி வந்தன; ஆனால் முழு மனத்தோடு அதன் சக்தியைத் தடுத்துப் பலமாகத் தலையசைத்து, 'நான் நன்றாகத்தான் இருக்கிறேன்!' என்றாள்.

ஸுரேசன் மெதுவாக, 'நன்றாகவேதான் இருக்கிறாய்!' என்றான்.

அதன் பிறகு சிறிது நேரம்வரை இருவருக்கும் எந்த விஷயமும் கிடைக்கவில்லை. ஸுரேசன் திடீரென்று திடுக் கிட்டவன் போலானான்.

'இன்னொரு விஷயம். உனக்கு நான் எவ்வளவு நண் பன்—பின்னே என்ன, நீ ஒரு பொழுதும்——'

அசலா இரு காதுகளிலும் விரல்களை வைத்துக்கொண்டு, 'என்னை மன்னித்துக்கொள்ளுங்கள்!' என்றாள்.

ஸுரேசன் திறந்திருந்த வாசற்படியில் இரு கைகளை யும் வைத்து அசலா வெளியே செல்லும் வழியைத் தடுத்துக் கொண்டே, 'இல்லை, நான் மன்னிக்க முடியாது. நீ கேட்டே ஆகவேண்டும்!' என்றான்.

அவன் கண்களில் அதே பார்வைதான் இருந்தது. அதை நினைத்து அசலா இன்றுகூடப் பதறினாள். அசலா பயந்துகொண்டு சற்று பின்னால் விலகி, 'நல்லது, சொல் லுங்கள்!' என்றாள்.

'பயப்படாதே! உன் சரீரத்தில் நான் கை வைக்க மாட்டேன். எனக்கு இதுவரை அவ்வளவு நினைவு இருக்கிறது' என்று சொல்லி, அவன் மறுபடியும் நாற்காலியில் உட்கார்ந்து, 'இந்த விஷயத்தை நீ ஞாபகம் வைத்துக்கொள்ளவே வேண்டும். உன்னிடமிருந்த என்னுடைய அதிகாரங்களெல்லாம் போய்விட்டாலும், என்னிடம் உனக்குள்ள அதிகாரத்தை அப்படியே வைத்திரு!' என்றான் ஸுரேசன்.

அசலா தடுத்துக்கொண்டே, 'அதை ஞாபகம் வைத்துக்கொள்வதால் எனக்கு ஒரு லாபமும் இல்லை. ஆனால் —' என்று சொல்லிக்கொண்டிருக்கும் பொழுதே, அவளுடைய வார்த்தைகள் வேகமாகச் சென்று தாக்கி ஸுரேசனைக் கணத்திற்குள் கலங்கச் செய்துவிட்டன. தவிரவும், அதே க்ஷணத்தில் அவன் அநுதாப வார்த்தைகள் தன் முதுகிலேயே வேகமாக வந்து விழுந்தன என்பதையும் அவள் உணர்ந்தாள்.

கண நேரம் சும்மாயிருந்து, இந்தத் தடவை அவளுடைய பெண்மைக் குரலில், 'ஸுரேஷ் பாபு, இந்த விஷயங்களையெல்லாம் கேட்பது எனக்கும் பாவம்தான். தாங்களும் சொல்லக் கூடாதவைதான். ஏன் தாங்கள் இந்த விஷயங்களையெல்லாம் கிண்டி எனக்குத் துக்கத்தைத் தருகிறீர்கள்?' என்றாள்.

ஸுரேசன் அவளுடைய முகத்தில் பார்வையைச் செலுத்தி, 'துக்கம் உண்டாகிறதா என்ன, அசலா?' என்றான்.

அசலாவின் வாயினின்றும், 'நான் என்ன கருங்கல்லா, ஸுரேஷ் பாபு!' என்ற வார்த்தைகள் திடீரென்று வெளி வந்தன.

அப்பொழுதும் ஸுரேசன் தன்னுடைய பார்வையை அசலாவின் முகத்திலிருந்து எடுக்கவில்லை. ஆனால் அசலா தன் பார்வையைக் கீழே கவிழ்த்துக்கொண்டாள்.

ஸுரேசன் மெதுவாக, 'போதும், இதுவே எனக்கு வெகு நாள் நிலைக்கக்கூடிய சம்பத்து, அசலா! இதைவிட

அதிகமாக நான் வேறொன்றும் விரும்பவில்லை' என்று சொல்லி, கண நேரம் பேசாம லிருந்துவிட்டுப் பிறகு மறுபடியும், 'எப்பொழுது நீ கருங்கல் இல்லையோ அப்பொழுது இந்தக் கடைசி பிக்ஷையை நீ எனக்கு அளிக்காமல் ஏமாற்ற முடியாது: உன்னுடைய சுகத்தின் பாரம் யார் பேரில் வேண்டுமானாலும் இருக்கட்டும்; ஆனால் உன் கையினால் எப்பொழுது நான் துக்கத்தையே அடைந்தேனோ, உன்னுடைய சகல துக்கங்களின் சுமைகளும் என் மேலேயே இருக்கட்டும் — இந்த வரத்தை மட்டும் நீ எனக்கு இன்று கொடு, அசலா!' என்று சொல்லிக்கொண்டிருக்கும் போதே கண்ணீர் பொங்கவே, அவன் குரல் தடைபட்டது. அசலாவின் கண்களிலும், இடைவிடாது இரவு பகலாக வருத்திக் கொண்டிருந்த வேதனை மல மல வென்று கண்ணீர் ரூபத்தில் பெருகலாயிற்று.

அதே சமயம் வாசற்படிக்கு வெளியில் செருப்பின் சத்தம் கேட்டது. அடுத்த கணமே மஹிம் அறைக்குள் நுழைந்துகொண்டே, 'என்ன அப்பா, ஸுரேஷ்! டீ—கீ குடித்தாயா?' என்றான்.

ஸுரேசனால் சட்டென்று பதில் கொடுக்க முடியவில்லை. அவன் ஒருவிதமாகத் தலையைக் குனிந்துகொண்டு துணியின் தலைப்பினால் கண்ணீரைத் துடைத்துக்கொண்டான். அசலா தலைப்பினால் முகத்தை மூடிக்கொண்டு சட்டென்று மஹிமின் பக்கமாகச் சென்று வெளியே போய்விட்டாள். மஹிம் ஓர் அடியை வாசற்படிக்கு உள்ளும், ஓர் அடியை வெளியிலுமாக வைத்துக்கொண்டு, சிந்தை சிதறியவனைப் போல் நின்றுகொண்டிருந்தான்.

# XVII

மஹிம் தன்னைச் சமாளித்துக்கொண்டு உள்ளே வந்து ஒரு நாற்காலியில் அமர்ந்தான். மனித சித்தம் எந்த நிலைமையில் எல்லாவற்றிலும் சங்கோசமற்ற தன்மையுடன் சுலபமாகப் பொய் வார்த்தைகளைச் சொல்வதன்மூலம் வெளிப் படுகிறதோ, அதே நிலைமைதான் அந்தச் சமயம் ஸுரேசனுக்கும் இருந்தது. அவன் சட்டென்று கைகளால் கண்களைத் துடைத்துக்கொண்டு, வெட்கத்துடன் சிரித்துக்கொண்டே, உண்மையில் தன்னிடம் ரொம்பப் பலவீனம் இருந்தது என்பதை ஒப்புக்கொண்டான். ஆனால் மஹிம் சற்றுக்கூட ஆத்திரத்தை வெளியிடவில்லை. அதற்குக் காரணத்தைக் கூடக் கேட்கவில்லை.

ஸுரேசன் தானே விவரிக்கலானான்: 'மஹிம், யார் எது வேண்டுமானாலும் சொல்லட்டும், ஒன்று மாத்திரம் நான் நிச்சயமாய்ச் சொல்லுவேன். இவள் கண்களில் கண்ணீரைப் பார்த்தால் என் கண்களிலும் கண்ணீர் வந்துவிடுகிறது. எவ்விதத்திலும் அதைத் தடுக்க முடியவில்லை. நான் போயிரா விட்டால் இந்தத் தடவை கேதார் பாபு எவ்விதத்திலும் தப்பியிருக்க மாட்டார். ஆனால் அந்தக் கிழவர் இப்படிப் பட்ட கெட்டெண்ணம் உள்ளவரா? தம் மகளை எட்டிக் கூடப் பார்க்கவில்லையே! விவாகத்தன்று அடைந்த கோபம் இன்னும் சாந்தமாக வில்லை. ஆனது ஆய்விட்டது என்றேன் நான்—'

'டீ கிடைத்ததா?' என்றான் மஹிம்.

ஸுரேசன் தலையசைத்துக்கொண்டே, 'ஆமாம், கிடைத்தது. ஆனால் தந்தையின் செய்கை இம்மாதிரி இருக்குமானால் யார் கண்ணில்தான் கண்ணீர் வராது? புருஷர்களாலேயே எப்பொழுதும் சகிக்க முடியவில்லையே! ஸ்திரீகள் எம்மாத்திரம்?' என்றான்.

'அதுதான் இருக்கவே இருக்கிறதே. இரவு உனக்குத் தூங்குவதற்குக் கஷ்டம் ஒன்றும் ஏற்படவில்லையே? சுக மாகத் தூக்கம் வந்ததல்லவா? புது இடத்தில்—'

ஸுரேசன் சட்டென்று, 'இல்லை, புது இடத்தில் தூங் கினதில் எனக்குக் கஷ்டம் ஒன்றும் ஏற்படவில்லை. சரி, மஹிம்! கேதார் பாபு தம்முடைய தேக அசௌக்கியத்தைப் பற்றிய விஷயத்தை உங்களுக்கு அறிவிக்கவே யில்லை. இது பெரும் ஆச்சரியம் அல்லவா?' என்றான்.

மஹிம் மிகவும் சகஜமாக, 'ஆச்சரியம்தான்!' என்று சொல்லிக் கொஞ்சம் சிரித்துவிட்டுப் பிறகு, 'முகம் அலம்பிக்கொண்டு சற்று உலவப் புறப்படுகிறாயா? போ, சீக்கிரம் புறப்படு. இன்னும் ஒருமணி நேரத்திற்கெல்லாம் நான் வெளியே போகவேண்டும். இன்னும் என் காலை வேலையே முடியவில்லை!' என்றான்.

ஸுரேசன் தன் புஸ்தகத்தில் கவனம் வைத்தவனாக, 'கதை ரொம்ப நன்றாக இருக்கிறது. இதை முடித்துவிடு கிறேன்' என்றான்.

'அப்படியே செய். நான் இரண்டு மணி நேரம் கழித் துத்தான் திரும்பி வருவேன்!' என்று சொல்லி மஹிம் எழுந்து சென்றான்.

அவன் எழுந்து திரும்பியதும் ஸுரேசன் தலை நிமிர்ந்து பார்த்தான். கண்முன் புலப்படாத கை ஒன்று கண நேரத்திற்குள் அவன் முகம் முழுவதும் வெட்கக் கரியைத் தடவியதைப் போல் தோன்றியது.

மஹிம் போனதும் திறந்திருந்த கதவின் வழியாகப் பார்த்துக்கொண்டே கல் போல் அசையாமல் உட்கார்ந்திருந்தான் ஸுரேஸ். ஆனால் உள்ளுக்குள், யாரும் கேட்காமல் தானே வெளியிட்ட வார்த்தை பலனற்றுப் போனது கடுமையான ரோஷத்தை மூட்டி, அவனுடைய சரீரம் முழுவதும் குமுறிக்கொண்டிருந்தது.

இரு நண்பர்களுடைய சம்பாஷணையையும் அசலா மறைவில் நின்று கேட்டுக்கொண்டிருந்தாள். மஹிம் ஆடை மாற்றுவதற்கு உள்ளே நுழைந்ததும் அவளும் கூடவே வந்து சேர்ந்தாள். மஹிம் தலை நிமிர்ந்ததும் அசலா சகஜமாக மெதுவான குரலில், 'என் தந்தை உங்களுக்கு அவ்வளவு பெரிய அபராதத்தைச் செய்தாரா என்ன?' என்று கேட்டாள்.

திடீரென்று அந்த மாதிரி அவள் கேட்ட கேள்வியின் தாத்பரியத்தை அறிய முடியாமல், ஆவல் நிறைந்த பார்வையுடன், பேசாமல் அசலாவின் பக்கம் பார்த்தான் மஹிம்.

அசலா மறுபடியும், 'ஒருகால் என் வார்த்தை விளங்கியிருக்காது, அல்லவா?' என்றாள்.

'இல்லை. விஷயம் பிடிக்காவிட்டாலும் விளங்குகிறது. ஆனால் அவைகளின் அர்த்தங்களை அறிவது போதுமான அளவில் கடினம்தான். என்னைப் பொறுத்த வரையில் அப்படித்தான்' என்றான்.

உள்ளே யிருந்த கோபத்தை அசலா முடிந்தவரை அடக்கிக்கொண்டு, 'இரண்டில் எந்த விஷயமும் தங்களுக்குக் கடினமல்ல, ஆனால் ஒப்புக்கொள்வதுதான் கடினம். ஸுரேஷ் பாபுவிடம் சுலபமாக வெளியிட்ட வார்த்தையை என்னிடம் வெளியிட உங்களுக்குத் துணிவு ஏற்படவில்லை. ஆனால், இன்று நான் உங்களிடம் வெளிப்படையாகக் கேட்க விரும்புகிறேன். என் தந்தையின் இம்மாதிரியான ஆபத்தான தேக

அசௌக்கியத்தைப் பற்றித் தாங்கள் துளிகூட யோசிக்க வேண்டிய அவசியமில்லை யென்று இருக்கும்படி, அவர் என்ன அவ்வளவு துச்சமாகப் போய்விட்டாரா ?' என்றாள்.

மஹிம் தலையசைத்துக்கொண்டே, 'நன்றாகத் தெரியும். யோசனை செய்ய அவசியமில்லாத நிலைமையில் என்னை நீ என்ன செய்யச் சொல்லுகிறாய் ?' என்றான்.

'எப்படி அவசியமில்லை, சொல்லுங்களேன் ?'

மஹிம் ஒரு கணம் மனைவியின் முகத்தைப் பேசாமல் பார்த்துவிட்டு, கடுமையான குரலில், 'எப்படியோ! எப்படி இப்பொழுது ஸுரேசனுக்கு இல்லையோ,—எப்படி அதற்காக நீயும் கோபித்துக்கொண்டு என் வாயினின்றும் கடுமையான வார்த்தைகளை வரவழைக்க அவசியமில்லையோ—அப்படித்தான்! போகட்டும், விட்டுவிடு. கீழே சேறு இருக்கும் தண்ணீரைக் கலக்குவது புத்திசாலித்தனம் என்று நான் நினைக்கவில்லை' என்று சொல்லி, மஹிம் வெளியே செல்ல விரும்பினான். உடனே அசலா வேகமாக எதிரே வந்து வழி மறித்துக்கொண்டு நின்றாள். திடீரென்று உள்ளத்தில் தாக்கிய ஓர் அடியை முயற்சி செய்து அடக்கிக்கொண் டிருப்பவள் போல், ஒரு நிமிஷம் உதடுகளைப் பற்களால் கடித்துக் கொண்டு நின்றாள்.

'உங்களுக்கு வெளியே அவசியமான வேலை இருக்கிறதா? இரண்டு நிமிஷங்கள் பொறுக்க முடியாதா?' என்றாள்.

'ஆஹா, பொறுக்க முடியும்.'

'அப்படியானால் இந்த விஷயம் விளங்கியே யாகவேண்டும். தண்ணீர் விலகிய பின் சேறு இருப்பது தெரிகிறது, இதுதானே ?' என்றாள் அசலா.

மஹிம் தலையசைத்துக்கொண்டே, 'ஆமாம்!' என்றான்.

அர்த்தமில்லாமல் தண்ணீரைக் கலக்குகிறவர்களின் பக்ஷத்தில் நானும் இல்லை; ஆனால் அந்தப் பயத்தினால்

சேற்றை எடுத்துச் சுத்தம் செய்யும் வேலையை நிறுத்தி வைப்பது சரியாகுமா? ஒருநாள் இல்லாவிட்டால் ஒருநாள் கலங்குவதானால், கலக்கிவிடுவதுதானே! மேலும் ஒரே அடியாகச் சேற்றிலிருந்து விடுதலையும் கிடைக்குமானால் — என்ன சொல்லுகிறீர்கள்?' என்றாள் அசலா.

மஹிம் கடுமையான பாவத்துடன், 'எனக்கு ஒரு தடையுமில்லை. ஆனால் அதைவிட அவசியமான வேலை எனக்கு இருக்கிறது, இப்பொழுது எனக்கு நேரமில்லை' என்றான்.

அசலாவும் அதே மாதிரியான கடுமையான குரலுடன், 'உங்களுடைய ரொம்ப அவசியமான வேலை முடியும் பொழுதாவது சமயம் கிடைக்குமா? சரிதான், முடியாவிட்டால் அதுவரை நான் எதிர்பார்த்துக்கொண்டு உட்கார்ந்திருக்கிறேன்!' என்று சொல்லி, அவள் விலகி ஒருபுறமாக நின்றாள்.

மஹிம் அறையிலிருந்து வெளியே சென்றான். கண்ணுக்குத் தெரியும்வரை அசலா அவனைப் பார்த்துக்கொண்டு நின்றுகொண்டிருந்தாள். பிறகு கதவைச் சாத்தினாள்.

ஒரு மணி நேரத்திற்குப் பிறகு ஸ்நானம் செய்யவேண்டுமென்ற சாக்கில் ஸுரேசனுடைய அறைக்குள் வந்தாள். அப்பொழுது அவளுடைய சோகம் நிறைந்த முகத்தைப் பார்த்ததுமே ஸுரேசன் அறிந்துகொண்டான். இதன் மத்தியில் மஹிமோடு ஏதோ நடந்திருக்கிறது என்ற விஷயத்தை அவன் ஊகம் செய்துகொண்டு, மனத்திற்குள் மிகவும் சங்கையடைந்தான்; ஆனால் துணிந்து எதையும் கேட்கவில்லை.

அசலா பேசாமல் நின்றுகொண்டிருந்தவள், 'இதென்ன நடந்துகொண்டிருக்கிறது?' என்றாள்.

ஸுரேசன் சூட்கேஸில் தன்னுடைய ஆடைகளை வைத்துக்கொண்டிருந்தான். 'ஒரு மணிக்கு வண்டி புறப்படுகிறது. சற்று முன்னாடியே தயாராகிறேன்!' என்றான்.

அசலா சற்று ஆச்சரியத்துடன், 'நீங்கள் இன்றைக்கே போகப் போகிறீர்களா?' என்றாள்.

ஸுரேசன் தலை நிமிராமலே, 'ஆமாம்!' என்றான்.

'ஏன், என்ன விஷயம்?'

ஸுரேசன் முன்போலவே சூட்கேஸின் பக்கம் பார்த்துக்கொண்டே, 'இனிமேல் இருந்து என்ன செய்யப் போகிறேன்? உன்னை ஒரு முறை சந்திப்பதற்காக வந்தேன். சந்தித்தாய்விட்டது!' என்றான்.

அசலா சிறிது நேரம்வரை அசைவற்று நின்றாள். பிறகு, 'ஆனால், அங்கிருந்து எழுந்து வாருங்கள். இந்த வேலை யெல்லாம் உங்களுடையதல்ல. பெண்டுகளுடையது. நான் சரியாகத் தயாரித்து வைத்துத் தருகிறேன்' என்று சொல்லிக்கொண்டு அவள் முன் வந்ததும், ஸுரேசன் பதட்டத்துடன், 'இல்லை, இல்லை! நீ ஒன்றும் செய்ய வேண்டாம். இதில் என்ன இருக்கிறது—ஏதோ இரண்டொரு—?' என்றான்.

ஆனால் அவன் வார்த்தைகள் பூர்த்தியாகு முன்பே அசலா அவன் எதிரிலிருந்து சூட்கேஸை இழுத்து அதிலிருந்த சாமான்களைக் கீழே கவிழ்த்தாள். பிறகு மடித்த வேஷ்டிகளை மறுபடியும் மடித்து மெள்ள மெள்ளப் பெட்டியில் வைக்கலானாள். ஸுரேசன் அருகே நின்றுகொண்டே, மிக்க சங்கை யடைந்தவனாய்த் திரும்பத் திரும்ப, 'இதொன்றும் அவசியமில்லை! நானே இவைகளை—' என்று சொல்லிக்கொண்டிருந்தான்.

அசலா வெகுநேரம் வரை அவன் வார்த்தைகள் ஒன்றுக்கும் பதில் சொல்லவில்லை; மெள்ள வேலை செய்துகொண்டே, 'தங்களுக்கு மனைவியோ அல்லது சகோதரியோ இருந்தால் இந்த வேலையை அவர்கள் செய்ய வேண்டியதுதான். தங்களைச் செய்ய விடுவார்களா? ஆனால் நண்பர் வந்து

பார்த்துவிட்டால் என்ன செய்வதென்று தங்களுக்குப் பயம், அதுதானே? ஆனால் அதனால் என்ன? இது ஸ்திரீ களின் வேலைதானே!' என்றாள்.

ஸுரேசன் பேசாமல் நின்றுகொண்டிருந்தான். மஹி முடன் அப்பொழுது அவன் பேசியது அசலாவுக்கு ஒன் றும் தெரிந்திருக்காது; ஆகையால் அதைக் கிண்டி அவள் மனத்திற்குக் கஷ்டத்தை உண்டுபண்ண அவன் துணிய வில்லை. தவிர, எங்கே அவன் வந்து தன் கண்ணால் இவை களைப் பார்த்துவிடப் போகிறானோ என்ற பயமும் இருந்தது.

பெட்டியைச் சரியாக வைத்துவிட்டு அசலா தயக்கத் துடன், 'தந்தையின் தேக அசௌக்கிய விஷயத்தைச் சொல்லாம லிருந்தால் நன்றாக இருந்திருக்கும். இதனால் அவருக்கு அவமானம்தான் ஏற்பட்டது. அவர்தான் கவ னிக்கவே யில்லையே!' என்றாள்.

ஸுரேசன் திடுக்கிட்டு, 'யார் சொன்னது உன்னிடம்? மஹிமா?' என்றான்.

அசலா அவனுடைய கேள்விக்குச் சரியான பதில் சொல்லாமல், பக்கத்திலிருந்த கதவின் பக்கம் சுட்டிக் காட்டி, 'அங்கே நின்றுகொண்டு நானே எல்லாவற்றையும் கேட் டேன்' என்றாள்.

ஸுரேசன் வெட்கமடைந்து, 'இதற்காக நான் உன்னி டம் மன்னிப்புக் கோருகிறேன், அசலா!' என்றான்.

அசலா தலைநிமிர்ந்து சிரித்துக்கொண்டே, 'ஏன்?' என்றாள்.

ஸுரேசன் தயக்கமான குரலில், 'காரணம்தான் நீயே சொல்லிவிட்டாயே! இன்று நான் அவரையும் உன்னையும் அவமானம் செய்துவிட்டேன்; ஆகையால் உன்னிடம் இம் மாதிரி மன்னிப்புக் கேட்கிறேன், அசலா!' என்றான்.

அசலா முகம் நிமிர்ந்து பார்த்தாள். திடீரென்று அவள் முகம் முழுதும் உள்ளத்தின் ஆவேகத்தினால் பிரகாச மடைந்தது.

'ஸுரேஷ் பாபு, தாங்கள் எது செய்திருந்தாலும் எனக்காகத்தானே செய்தீர்கள்? என்னை வெட்கத்தின் கையி னின்றும் காப்பாற்றுவதற்காகத்தானே இன்று தாங்கள் இம் மாதிரி வெட்கமடைய வேண்டியிருக்கிறது. ஆயினும்கூட என்னிடமே தாங்கள் மன்னிப்புக் கேட்க நான் அவ்வளவு பெரியவள் அல்ல. தாங்கள் எதற்காக வெட்கமடைகிறீர் கள்? தாங்கள் செய்தது ரொம்ப சரி!' என்றாள் அசலா.

ஆச்சரியமும் குழப்பமும் அடைந்த ஸுரேசனின் முகத்தைப் பார்த்து, தன் வார்த்தையை அவன் மனத்தில் வாங்கவில்லை என்பதை அசலா அறிந்துகொண் டாள். ஆகையால் ஒரு கணம் மௌனமாக இருந்துவிட்டுப் பிறகு, 'இன்று தாங்கள் போகவேண்டாம், ஸுரேஷ் பாபு! இங்கே தாங்கள் வெட்கப்பட வேண்டியிருந்தால் அது என் வெட்கத்தை மூடத்தான். இல்லாவிட்டால் தங்களுக்காக யாதொரு அவசியமும் இல்லை. மேலும், இந்த வீடு தங்கள் நண்பருடையது மாத்திரமல்ல. எனக்கும் இதில் கொஞ்சம் அதிகார மிருக்கிறது. அந்தப் பலத்தின் பேரில் நான் இங்கு தங்களுக்கு அழைப்புக் கொடுக்கிறேன். என்னுடைய அதிதியாக இன்னும் சில நாள் தங்குங்கள்' என்றாள்.

அவளுடைய தைரியத்தைக் கண்டு ஸுரேசன் வியப் பெய்தினான். ஆனால் திண்டாட்டம் கொண்ட ஹிருதயத் தோடு ஏதோ சொல்லத் தயாராகி, தலை நிமிர்ந்து பார்த்த பொழுது, மஹிம் வெளி வேலைகளை முடித்துக்கொண்டு வீட் டுக்கு வருவதைக் கண்டான்.

அசலா அதுவரை சூட்கேஸின் முன்னால், வாசல்புறம் முதுகு காட்டித் தரையில் உட்கார்ந்திருந்தாள். மஹிம் வரு

வதை அறியாமல் அசலா இன்னும் ஏதாவது சொல்லிவைக்கப் போகிறாள் என்ற பயத்தினால் அவன் மிகப் பயமடைந்து, 'வந்து விட்டாயா மஹிம், உன் வேலை யெல்லாம் பூர்த்தி யாயிற்றா?' என்றான்.

'ஆமாம், ஆகிவிட்டது!' என்று சொல்லிக்கொண்டே அவன் அறைக்குள் கால் வைத்ததும், அசலாவை அதே நிலைமையில் கண்டு, 'இதென்ன நடக்கிறது?' என்றான்.

அசலா தலையைத் திருப்பிப் பின்னால் பார்த்தாள். ஆனால் கேள்விக்குப் பதிலொன்றும் சொல்லாமல் ஸுரேசன் பக்கமே பார்த்து முந்தைய விஷய சம்பந்தமாகவே, 'தாங்கள் எனக்கும் நண்பர்தான், ஏன், நண்பர் மாத்திரந்தானா? தாங்கள் எங்களுக்காகச் செய்த நன்மையால் தாங்கள் எங்களுக்கு மிக்க ஆத்மார்த்தமானவர்களும்கூட. தாங்கள் இம்மாதிரிச் சென்றுவிட்டால் என்னுடைய வெட்கத்துக்கும், துக்கத்துக்கும் ஒரு எல்லை யிருக்காது. எவ்விதத்திலும் இன்று தங்களை நான் போக விடமாட்டேன்!' என்றாள்.

ஸுரேசன் ஒரு வரண்ட சிரிப்புச் சிரித்துக்கொண்டே, 'இவள் வார்த்தையைக் கேள், மஹிம்! உங்களைச் சந்திக்க வந்தேன், சந்தித்தாய்விட்டது, அவ்வளவுதானே! பிறகு இந்தக் காட்டில் அர்த்தமில்லாமல் என்னை அதிக நாள் நிறுத்திவைப்பதில் உங்களுக்கு என்ன லாபம்? இல்லை, இந்தக் கஷ்டத்தைச் சகிப்பதால் எனக்குத்தான் என்ன லாபம், சொல்லேன்?' என்றான்.

மஹிம் பொறுமையுடன், 'ஒருகால் நீ கோபித்துக் கொண்டு போகலாம். இந்த விஷயம் அவளுக்குப் பிடித்திருக்காது' என்றான்.

அசலா பளிச்சென்ற குரலில், 'உங்களுக்கு ஒருகால் பிடித்திருக்குமோ?' என்றாள்.

ஸுரேசன் மனத்திற்குள் மிகவும் சங்கடமடைந்தான்; ஆகையால் அந்தப் பிரியமற்ற சம்பாஷணையை எவ்விதத்திலாவது முடிக்கவேண்டு மென்று சந்தோஷமான பாவம் காட்டி, 'ஏன் அப்பா வீணுகப் பழி சொல்லுகிருய்? நான் ஏன் கோபமடையப் போகிறேன்! நீங்கள்தான் விசித்திரமான மனிதர்கள்! நல்லது, உங்களுக்குச் சந்தோஷமானுல் இன்னும் சில நாள் இருந்துவிட்டுப் போகிறேன், மன்னி, துணிகளை எடுத்து வைக்கவேண்டிய அவசியமில்லை. வைத்துவிடு. மஹிம், வா, இன்று உன்னுடைய குளத்திலேயே ஸ்நானம் செய்ய வருகிறேன். அதன்பின் வீட்டுக்கு வந்து, உடம்புக்கு முடியாவிட்டால் ஒரு பாட்டில் குயினுவாவது சாப்பிடலாம்' என்றான்.

'வா!' என்று சொல்லி மஹிம் ஆடைகளைக் களைய அறைக்கு வெளியே சென்றான்.



# XVIII

புதிய பாதரட்சையின் கடிப்பைச் சகித்துக்கொண்டு சுகமாகச் செல்வதைப் போன்ற பாவத்தை வெளியிடும் மனிதரைப் போல, ஸுரேசன் நாள் முழுவதும் சிரிப்பு விளையாட்டிலேயே கழித்தான். ஆனால் இன்னும் அதிக ரகசியமாக அதைச் சகிப்பதில் பங்கெடுத்துக்கொள்ளவேண்டிய அசலாவால் மட்டும் அப்படிக் கழிக்க முடியவில்லை.

கணவனுடைய கலங்காத உறுதியின் முன்பு, தன்னுடைய நிந்திக்கத் தக்க நடத்தையாலும், வெட்கமற்ற தன்மையால் ஏற்பட்ட துக்கத்தாலும், அவமானத்தாலும் அவளுக்கு நாக்கைப் பிடுங்கிக்கொண்டு சாகலாம் என்று தோன்றியது. மஹிமை அவள் எப்பொழுதும் ஹிருதயத்தின் அளவினால் அறியாமல் புத்தியின் அளவினாலேயே அறிந்தாள். கூர்மையான புத்தியும், மட்டான பேச்சும் உள்ள புருஷன் முன் தன் அபிநயங்கள் எல்லாம் முற்றிலும் வியர்த்தமாகிக்கொண்டு வருகின்றன என்பதையும், வெட்கத்தின் கருமை கணத்திற்குள் தன் முகத்தில் படர்ந்துகொண்டிருக்கிறது என்பதையும் அவள் தெளிவாகக் கண்டாள்.

அன்று காலை மஹிம் வீட்டிலிருந்து வெளியே போகவில்லை; காலையிலிருந்து இரவுவரை கிட்டத்தட்ட பூரா நேரமும் அங்கேயே கழித்தான்.

இரவு வெகு நேரம் கழித்துப் படுக்கையைத் தட்டிப் போட்ட பிறகு, அசலா வந்து, 'ராத்திரிப் பூராவும் விளக்கை எரியவிட்டுக்கொண்டு படித்தால் மற்றவர்கள் தூங்க முடி

யாது. தங்களிடம் இவ்வளவு தயவைக்கூட நான் பெற முடியாதா?' என்றாள்.

அசலாவின் குரலைக் கேட்டு மஹிம் திடுக்கிட்டான்; சட்டென்று விளக்கைச் சிறிதாக்கிவிட்டு, 'தவறிவிட்டது, என்னை மன்னித்துக்கொள்!' என்று சொல்லி, புஸ்தகத்தை மூடி விளக்கை அணைத்துவிட்டுப் படுக்கைக்குச் சென்று படுத்துத் தூங்கலானான். வேண்டிக்கொண்ட கிருபை கிடைத்ததற்காக அசலா நன்றி செலுத்தவில்லை. ஆனால் அதனால் அவளுடைய தூக்கத்திற்குச் சற்றும் உதவி கிடைக்கவில்லை. பொழுது கழியக் கழிய, நிசப்தமான அந்த இருள் துக்கத்தினால் நீண்டு அவளுக்கு இன்னும் துன்பமாகத் தோன்றியது. வெகு நேரத்திற்குப் பிறகு அவளாலும் சற்றும் பொறுக்க முடியாத பொழுது, அவள் மெதுவாக, 'சரி, தெரிந்தோ தெரியாமலோ உலகில் குற்றம் செய்த பிறகு அதன் தண்டனையை அநுபவிக்கவே வேண்டியிருக்கிறது. இது உண்மைதானா?' என்றாள்.

மஹிம் மிக்க சகஜமான முறையிலேயே, 'அனுபவஸ்தர்கள் அப்படித்தான் சொல்லுகிறார்கள்' என்றான்.

அசலா சிறிது நேரம் சும்மா யிருந்தாள். பிறகு, 'ஆனால் எந்தத் தவறை நாம் இருவருமே செய்தோமோ,—அதனுடைய கெட்ட பலன் ஆரம்பத்திலேயே தெரிகிறது—அதனுடைய முடிவு எப்படியாகும்? நீங்கள் அதை நிர்ணயிக்க முடியுமா?' என்றாள்.

'முடியாது!' என்றான் மஹிம்.

'என்னாலும் முடியாது. ஆனால் யோசிக்க யோசிக்க, மற்ற விஷயங்களை விட்டுவிட்டாலும், ஒருவர் புருஷர், மற்றொருவர் ஸ்திரீ என்ற காரணத்தால் இந்தத் தண்டனையின் அதிகப் பாரத்தைப் புருஷரேதான் வகிக்கவேண்டும் என்று அறிகிறேன்' என்றாள்.

'இன்னும் கொஞ்சம் யோசித்தால் இதனால் ஸ்திரீயின் பாரம் துளிகூடக் குறையவில்லை என்பதை உணர்வாய். ஆனால் அந்தப் புருஷன் யார்? நானா அல்லது ஸுரேசனா?' என்றான்.

அசலா பதறிப் போனாள். இருளாக இருந்தாலும் மஹிம் அதை அறிந்துகொண்டான். ஒரு கணம் மௌனமாக இருந்துவிட்டு அசலா மெதுவாக, 'எனக்குத் தெரியும். நீங்கள் ஒரு நாள் என் எதிரிலேயே என்னை அவமானம் செய்ய ஆரம்பிப்பீர்கள் என்பது எனக்குத் தெரியும். ஒரு விஷயம் ஒரு தடவை ஆரம்பமாகிவிட்டால் அது எங்கே சென்று முடியும் என்பதைச் சொல்ல முடியாது என்பதும் தெரியும். ஆனால் நான் சண்டை போடவும் முடியாது; கலியாண மாகிவிட்டது, ஆகையால் சண்டை போட்டுக் கொண்டே எப்படி உங்கள் குடும்பத்தை நடத்த முடியும்? நாளைக்கோ அல்லது அதற்கு மறுநாளோ நான் என் தந்தை வீட்டுக்குப் போகிறேன்!' என்றாள்.

'உன் தந்தைக்கு ஒருவாறு சற்று ஆச்சரியமாகத் தான் இருக்கும்!' என்றான் மஹிம்.

'இல்லை, அவருக்குத் தெரியும். ஆகையால்தான் இதன் பலன் ஒருபொழுதும் நல்லதாகாது என்று அடிக்கடி எச்சரிக்க முயற்சி செய்தார். கல்கத்தாவில் இது நடக்கும், ஆனால் கிராம சமூகத்தில், வேண்டிய பந்துக்களை விலக்கிவிட்டு மனைவியை மட்டும் வைத்துக்கொண்டால், யாருக்கும் அதிக நாள் தள்ள முடியாது. தவிர, அவருக்கு வேறு என்ன எண்ணம் இருந்தாலும் ஆச்சரியமாகாது' என்றாள் அசலா.

'ஆனால், பின்னே நீ ஏன் அவருடைய தடைகளைக் கேட்கவில்லை?' என்றான் மஹிம்.

அசலா மிகுந்த முயற்சியுடன் பொங்கி எழுந்த மூச்சை அடக்கிக்கொண்டு, 'நீங்கள் எந்த வேலையையும் அறியாமல் செய்வதில்லை என்று எண்ணுகிறேன்' என்றாள்.

'அந்த எண்ணம் இப்பொழுது போய்விட்டதா?'

'ஆமாம்.'

'அதனால்தான் வியாபாரத்தில் லாபம் ஏற்படுவதைப் பாராமல் கடையை யெடுத்துக்கொண்டு வீட்டுக்குப் போக விரும்புகிறாயா?'

'ஆமாம்!'

மஹிம் சிறிது நேரம் மௌனமாக இருந்தான்.

'உன் அபிப்பிராயம் அப்படி யிருந்தால் சரி, போ! ஆனால் — ஆமாம் — இதைத் தினசரி வியாபாரமாக நீ நினைப்பாயானால், உன் அபிப்பிராயத்துடன் என் அபிப்பிராயம் சேராது. தினசரி விஷயங்களுக்குக்கூட ஆலோசிக்க நேரம் பிடிக்கிறது என்பதை மறந்துவிட வேண்டாம். உன்னுடைய இந்தத் தவறை ஒரு நாள் உணரும் போது எனக்குக் கடிதம் எழுது. நான் உடனே வந்து அழைத்துக் கொண்டு வருகிறேன்' என்று பின்னால் கூறினான்.

அசலாவின் கண்களில் கண்ணீர் ததும்பியது; கையினால் அதைத் துடைத்துவிட்டுச் சற்று நேரம் சும்மா யிருந்து குரலைச் சரிசெய்துகொண்டு, 'மனிதன் திரும்பத் திரும்பத் தவறு செய்வதில்லை. தாங்கள் ஒரு பொழுதும் சிரமம் எடுத்துக்கொள்ள அவசியம் ஏற்படும் என்று நான் எண்ணவில்லை' என்றாள்.

'இப்பொழுதொன்றும் அறிய முடியாது. அதனால் தான் அது எதிர்காலம் என்று சொல்லப்படுகிறது. எதிர் காலக் கவலைகளை எதிர்காலத்திற்கே விட்டுவிட்டு இன்று என்னை மன்னித்துக்கொள். இனிமேல் என்னால் பொறுக்க முடியாது!' என்றான் மஹிம்.

அசலா வருத்தமடைந்து, 'என்னிடம் நீங்கள் வேடிக்கை செய்கிறீர்களா? அப்படி யிருக்குமானால் நீங்கள் தவறு செய்துகொண்டிருக்கிறீர்கள். உண்மையாக நான் நாளைக்கோ நாளை நின்றோ போகப் போகிறேன்!' என்றாள்.

'உண்மையிலேயே நான் உன்னைப் போகச் செய்ய விரும்பவில்லை.'

அசலா சட்டென்று பதட்டமடைந்து, 'நீங்கள் என் இஷ்டத்திற்கு விரோதமாய் என்னைப் பலவந்தமாக இருக்கச் செய்வீர்களா? அந்த மாதிரி நீங்கள் செய்ய முடியாது, தெரியுமா?' என்றாள்.

மஹிம் சாந்தமாகவும், சகஜமாகவும், 'சரிதான், இன்றிரவே போகப் போகிறாயா? நாளையோ நாளை நின்றோ எப்பொழுது போகப் போகிறாயோ, அப்பொழுது, யோசித்துப் பார்த்துக்கொள்ளலாம். போதுமான அவகாசம் இருக்கிறது, இன்று இதோடு நிற்கட்டும்' என்று சொல்லித் தன் தலையின் கீழ் இருந்த தலையணையைத் திருப்பி, விவாதத்தை அத்துடன் பலவந்தமாக நிறுத்த நிச்சயித்துக்கொண்டு படுத்தான். சிறிது நேரத்திற்கெல்லாம் தூங்கிவிட்டான்.

மறுநாள் காலை டீ அருந்தும் சமயத்தில் ஸுரேசன் அசலாவிடம், 'மஹிம் இன்றுகூடத் தன் வயல் வெளிகளைப் பார்க்க அதிகாலையில் எழுந்து போய்விட்டானா?' என்று கேட்டான்.

அசலா தலையசைத்துவிட்டு, 'உலகம் புரண்டாலும் அவர் வேலை மாறாது!' என்றாள்.

ஸுரேசன் டீ கோப்பையை மேஜைமேல் வைத்துக்கொண்டே, 'ஒரு விதத்தில் அவன் நம்மைவிட ரொம்ப மேல்தான். அவன் வேலைக்கு ஒரு வேகமிருக்கிறது. மிஷின் சக்கரத்தைப் போலச் சாவி யிருக்கும் வரை ஓடிக்கொண்டே இருக்கும்' என்றான்.

'மிஷின் போல் ஆகி வருவதையே தாங்கள் மேல் என்று சொல்லுகிறீர்களா ?'

ஸுரேசன் தலையசைத்துக்கொண்டு, 'அப்படித்தான் சொல்வேன். ஏனென்றால் அம்மாதிரி ஆவது என் சக்திக்குப் புறம்பான விஷயம். பலவீனமாக இருப்பதில் எவ்வளவு குறைவு இருக்கிறதென்று எனக்குத் தெரியும்; ஆகையால் யார் திட சித்தத்துடன் இருக்கிறார்களோ அவர்களை என்றால் போற்றாமல் இருக்க முடியாது. ஆனால் இன்று எனக்கு விடை கொடுத்துவிடு. நான் வீட்டுக்குப் போகிறேன் !' என்றான்.

அசலா அந்த க்ஷணமே ஒப்புக்கொண்டு, 'செல்லுங்கள், நானும் நாளைக்கு வருகிறேன் !' என்றாள்.

ஸுரேசன் ஆச்சரிய மடைந்து, 'நாளைக்கு நீ எங்கே வரப் போகிறாய் ?' என்று கேட்டான்.

'கல்கத்தா !'

'திடீரென்று கல்கத்தாவுக்கு எதற்கு ? நேற்று அம்மாதிரியான விஷயம் ஒன்றும் நடக்கவில்லையே ?'

'அப்பாவுக்கு உடம்பு அசௌக்கியம். ஆகையால் அவரை ஒரு முறை பார்க்க வருகிறேன்.'

ஸுரேசன் முகத்தில் உத்வேகத்தின் சாயை படர்ந்தது. 'அசௌக்கியமாயிருக்கும் தந்தையைத் திடீரென்று பார்க்கப் போக விரும்புவது உலகில் ஆச்சரியமான சம்பவமல்ல ; ஆனால் எனக்கொரு பயம், எங்கே என் காரணமாக உங்களுக்குள் ஒருவருக் கொருவர் கலகம் செய்து கொண்டு — ' என்றான்.

அசலா அதற்குப் பதிலொன்றும் சொல்லவில்லை. எதிர்ப்புறம் யது போய்க்கொண்டிருந்தான். ஸுரேசன் அவனைக் கூப்பிட்டு, 'உங்கள் பாபு வயலிலிருந்து திரும்பி வந்துவிட்டாரா ?' என்று கேட்டான்.

'அவர் இன்று காலையில் போகவே யில்லை. தம்முடைய படிப்பு அறையில் தூங்கிக்கொண்டிருக்கிறார்' என்றான் யது.

அசலா மளமள வென்று சென்று வாசற்படிக்கு வெளியி லிருந்தே எட்டிப் பார்த்தாள்; மஹிம் ஒரு நாற்காலியில் சாய்ந்து காலை மேஜையின்மேல் போட்டுக்கொண்டு தூங்கிக் கொண்டிருந்தான். இரவில் பூர்த்தியாகாத தங்கள் நித்திரையை அம்மாதிரிப் பூர்த்தி செய்து கொள்வது உலகில் ரொம்ப அதி சயமல்ல; ஆனால் தன் கணவன் தினசரி வேலைகளை நிறுத்தி, இம்மாதிரி அகாலத்தில் தூங்குவதைத் தன் கண்ணால் பார்த்த பொழுது, அசலாவின் ஆச்சரியத்திற்கு ஓர் அளவே யில்லை. அவள் சந்தடி செய்யாமல் அறைக்குள் சென்று மஹி மின் முகத்தைப் பார்த்துக்கொண்டு நின்றாள். எதிரே திறந் திருந்த ஜன்னல் வழியாகக் காலையின் இளம் பிரகாசம் தூக் கத்தில் ஆழ்ந்திருக்கும் அவன் முகத்தில் வீசிக்கொண் டிருந் தது. அன்று அகஸ்மாத்தாக அவ்வளவு நாட்களுக்குப் பிறகு அவள் கண்கள் அதற்கு முன் பார்த்திராத ஒரு புதிய பொருளைக் கண்டது. சாந்தமான முகத்தில் கவலையின் சூட்சுமமான வலை ஒன்று விரிந்து கிடந்தது; நெற்றியில் இருந்த சுருக்கங்கள் — ஒரு வருஷத்திற்கு முன் அவைக ளொன்றுமே யில்லை — முகம் முழுவதும் ஒரு ரகசியமான துக்கத்தால் பீடிக்கப்பட்டு மலின மடைந்திருப்பதைப் போல் அவளுக்குத் தோன்றியது. அவள் பேசாமல் வந்தாள், பேசாமலேயே திரும்பிக்கொண்டிருந்தாள்; ஆனால் எச்சில் கிண்ணத்தில் அவள் கால் தட்டியதால் உண்டான சத்தத்தில் மஹிமின் தூக்கம் கலைந்தது. அசலாவுக்கு வெட்கமாகப் போய் விட்டது. 'என்ன இந்த நேரத்தில் தூங்குகிறீர்கள்? உடம் புக்கு ஒன்று மில்லையே?' என்றாள்.

மஹிம் கண்களைக் கசக்கிக்கொண்டே எழுந்து உட்கார்ந்தான். 'தெரியாது, அசௌக்கியம் ஏற்படாததே ஆச்சரியம்தான்!' என்ருன்.

அசலா பிறகு வேறொன்றும் கேட்காமல் அறையிலிருந்து வெளியே சென்றுவிட்டாள்.

சாப்பாடான பிறகு ஸுரேசன் புறப்படத் தயார் செய்துகொண்டிருந்தான்; மஹிம் அருகே ஒரு நாற்காலியில் அமர்ந்து அவனுடன் பேசிக்கொண்டிருந்தான். அசலா கதவருகில் வந்து, பீடிகை ஒன்றும் இல்லாமல், 'நானும் நாளைக்கு வருகிறேன். அவகாசம் கிடைத்தால் தந்தையை ஒரு முறை சந்தியுங்கள்?' என்ருள்.

ஸுரேசன் ஆச்சரியத்துடன், 'இதென்ன வார்த்தை?' என்று சொல்லி, மஹிமின் பக்கம் பார்த்து, 'மஹிம், மன்னியை நீ நாளைக்கே கல்கத்தாவுக்கு அனுப்பப் போகிருயா?' என்று கேட்டான்.

ஸ்திரீயின் அந்தப் பிடிவாதமான விரோத பாவத்தால் மஹிமின் உள்ளம் கொதித்தது; ஆனால் அவன் தன் முகத்தோற்றத்தைச் சந்தோஷமாக வைத்துக்கொண்டு நகைத்துக் கொண்டே, 'வேறொரு தடையுமில்லை. தவிர, எங்கள் கிராம கிரஹஸ்தர்கள் வீட்டில் நாடகம் நடிக்கும் வழக்கமில்லை. நாளைக்கென்ன? இன்றுகூட உன்னுடன் அனுப்ப முடியும்!' என்ருன்.

ஸுரேசன் முகம் வெட்கத்தால் சிவந்தது. அசலா உடனே அதை அறிந்துகொண்டு சட்டென்று சிரித்துக் கொண்டே, 'ஸுரேஷ் பாபு, நாம் நகரத்திலிருப்பவர்கள் இதில் வெட்கமடைய ஒரு காரணமும் இல்லை. நோயுற்றிருக்கும் தாய் தந்தையரைப் பார்க்கப் போவது கிராமத்தின் நீதியாக இல்லாவிட்டால், நமது நாடகமே இதைவிட மேல் என்று நான் சொல்லுகிறேன். முடியுமானல் தாங்கள் இவ

றைத் தினமும் தங்குங்கள், நாளை ஒன்றாகச் செல்லலாம்!' என்றாள்.

அசலாவின் அளவு கடந்த பிடிவாதத்தினால் ஸுரேசன் முகம் வாடியது. அவன் தலையைக் குனிந்துகொண்டு, ' இல்லை, இல்லை. நான் இனி இருக்க முடியாது, மன்னி! உனக்கு இஷ்டமானால் நாளை வரலாம், ஆனால் நான் மட்டும் இன்றே போகிறேன் ' என்று சொல்லிக்கொண்டே, அவன் மிகுந்த படபடப்புடன் சூட்கேஸைக் கையில் எடுத்துக்கொண்டு, திடீரென்று எழுந்து நின்றான்.

அவனுடைய படபடப்பும், ஆத்திரமும் அசலாவைக் கூட ஒரு முறை கலங்கச் செய்தது. அவள் சட்டென்று வருத்த மடைந்து, 'இன்னும்தான் வண்டிக்கு வெகுநேரம் இருக்கிறதே, ஸுரேஷ் பாபு! இப்பொழுது போகப் போகிறீர்களா? கொஞ்சம் பொறுங்கள் தயவுசெய்து. என்னுடைய இரண்டொரு வார்த்தையைக் கேட்டுவிட்டுச் செல்லுங்கள்!' என்றாள்.

அவளுடைய தழுதழுத்த குரலாலும், வருத்தம் நிறைந்த வற்புறுத்தலாலும், மற்ற இருவரும் ஒரே யடியாய்த் திடுக்கிட்டுப் போயினர்.

அசலா ஒரு பக்கமும் பார்க்காமல், ' ஸுரேஷ் பாபு, நான் தங்களுக்கு எவ்விதத்திலும் உபயோகப்படுவதில்லை. ஆனால் உங்களைத் தவிர கஷ்ட காலத்தில் எங்களுக்கு வேறு நண்பர் கிடையாது. தாங்கள் தந்தையிடம் சென்று, " இவர்கள் என்னை அடைத்து வைத்திருக்கிறார்கள். என்னை எங்கும் போக விடுவதில்லை, நான் இங்கேயே சாகிறேன்!" என்று சொல்லிவிடுங்கள். இல்லை, ஸுரேஷ் பாபு, என்னை இங்கிருந்து அழைத்துக்கொண்டு செல்லுங்கள். அன்பில்லாதவர்களுடைய குடும்பத்தை நடத்த நீங்கள் என்னை இங்கே விட்டு விட்டுப் போக வேண்டாம்!' என்றாள்.

மஹிம் பிரமை பிடித்தவன் போல் பேசாமல் பார்த்துக் கொண்டிருந்தான். ஸுரேசன் திரும்பி நின்று இரு கண்களையும் உருட்டி, 'உனக்குத் தெரியுமா மஹிம், இவள் பிரம்ம சமாஜப் பெண். மனைவி என்று சொன்னாலும் இவள் மேல் மிருகத்தனமான பலத்தைப் பிரயோகம் செய்ய உனக்கு ஒரு அதிகாரமும் கிடையாது!' என்றான்.

மஹிம் ஒரு கணம் தன்னை மறந்து நின்றான். மெள்ளத் தன்னைச் சமாளித்துக்கொண்டு, 'அசலா, நீ எதற்காக, என்ன செய்துகொண்டிருக்கிறாய் என்பதை ஒரு முறை யோசித்துப் பார்!' என்றான்.

'மிருக பலம் அல்லது மனுஷ்ய பலம்—எவ்விதமான பலத்தையும் யார் மீதும் நான் ஒரு நாளும் பிரயோகித்ததில்லை. சரிதான், ஸுரேஷ், நீ தங்க முடியுமானால் இன்று தங்கி, நாளைக்கு இவளையும் உன்கூட அழைத்துக்கொண்டு செல். நான் வந்து வண்டி யேற்றிவிட்டு வருகிறேன். அதனால் கிராமத்தில் விசேஷமான சந்தேகமும் ஏற்படாது' என்று மஹிம் ஸுரேசனைப் பார்த்துச் சொல்லி, சற்று நிறுத்தி, மறுபடியும், 'எனக்குக் கொஞ்சம் வேலை யிருக்கிறது. இப்பொழுது வெளியே போகிறேன். எப்பொழுது இன்று போக முடியவில்லையோ ஆடைகளை யெல்லாம் மாற்றிக்கொள். நான் ஒரு மணி நேரத்திற்குள் திரும்பி வருகிறேன்' என்று சொல்லி, அவன் மெள்ள அறையினின்றும் வெளியே சென்றான்.

அசலா சிலை போல வாசற்படியில் சாய்ந்துகொண்டு எப்படி நின்றிருந்தாளோ அப்படியே நின்றுகொண்டிருந்தாள். ஸுரேசன் ஒரு நிமிஷம் வரையில் தலை குனிந்து நின்றுகொண்டிருந்தான். பிறகு சட்டென்று சிரித்துக் கொண்டே, 'பேஷ்! அப்பா! நாடகத்தின் ஒரு அங்கம் நடித்தாய்விட்டது. நீயும் பரவாயில்லை, நானும் நன்றாகத்

தான் நடித்தேன். வீட்டுக்காரன் மனைவியைப் பற்றி அவன் எதிரிலேயே காட்டியாகிவிட்டது. வேறென்ன வேண்டும்? என் நண்பனும் இனிய முகத்துடன் சற்று சிரித்து சபாஷ் கொடுத்துவிட்டுப் போய்விட்டான். நான் சபதம் கூறிச் செல்கிறேன், அசலா. அவன் வாய் திறந்து நன்றாகச் சிரிக்கவேண்டும் என்ற எண்ணத்தைச் சாக்கிட்டே வெளியே சென்றிருக்கிறான். போகட்டும், கண்ணாடியைக் கொஞ்சம் எடுத்துக்கொண்டு வா, மன்னி! என் முகம் எப்படித் தென்படுகிறது என்பதைப் பார்க்கிறேன்!' என்று சொல்லி, அவன் அசலாவின் முகத்தைப் பார்த்த பொழுது அவள் முகம் வெளிறு தட்டியிருந்தது. அவள் பதிலொன்றும் சொல்லவில்லை. ஒரு நீண்ட பெருமூச்சு விட்டுக் கொண்டு அங்கிருந்து அகன்றாள்.



# XIX

படுக்கையைத் தொடுவதற்குக் கூட வெறுப்பு ஏற்பட வேண்டியிருக்க, அதை எப்பொழுதும் போலத் தயார் செய்வதற்காக அசலா சாயங்காலத்திற்கு முன்பே அறைக்குள் சென்றாளென்றால், அவளுடைய மனம் பூராவும், எங்கே, எந்த நிலைமையிலிருந்தது என்பது மனித உள்ளத்தைக் கொஞ்சம் அறிந்தவர்களுக்குக் கூட விளங்காமல் இருக்காது.

யந்திரத்தைப் போலச் செய்யவேண்டிய வேலையைச் செய்து முடித்துவிட்டுத் திரும்பும் பொழுது, பக்கத்திலிருந்த சிறிய மேஜையின்மேல் அவளுடைய பார்வை விழுந்தது; மையொற்றும் தாளின் கீழே திறந்து வைத்திருந்த ஒரு சிறிய கடிதத்தை அவள் ஒரு கணத்தில் படித்துவிட்டாள். ஒரே ஒரு வரிதான் இருந்தது. கிழமையில்லை, தேதியில்லை - மிருணாளினி எழுதியிருந்தாள்—'அண்ணா அவர்களே! என்ன செய்துகொண்டிருக்கிறீர்கள்? முந்தாநாளிலிருந்து வழி பார்த்துப் பார்த்து உங்கள் மிருணாளினியின் கண்கள் பூத்து விட்டன!'

வெகு நேரம் வரை அசலா கண் கொட்டவில்லை. கல்லால் செய்த சிலை போல, கண் கொட்டாத பார்வையை அந்த ஒரே வரியின்மேல் வைத்து அசைவற்று நின்றிருந்தாள். அது எப்பொழுது வந்தது, யார் கொண்டுவந்து கொடுத்துவிட்டுப் போனார்கள் — இவைகளொன்றும் அவளுக்குத் தெரியாது. மிருணாளினியின் வீடு எங்கே, எந்தத்

திசையி லிருக்கிறது, எந்தக் கதவினுல் அவள் வீட்டுக்குள் நுழையவேண்டும், எதற்காக அவள் இவருக்காக இவ்வித மான வருத்தமும் ஆவலும் உள்ள பார்வையைக் கொள்ள வேண்டும்,—இவைகள் எல்லாவற்றையும் அறிய அவளிடம் ஓர் உபாயமும் இல்லை. எதிரேயுள்ள கறுப்பு எழுத்துக் களிலிருந்து அவளுக்கு விளங்கிய தெல்லாம், யாரோ முந்தா நாள் வேறு யாரோ ஒருவரை வழி நோக்கி எதிர்பார்த்துத் தன்னுடைய கண்களைக் கெடுத்துக்கொண் டிருந்தார்கள், ஆயினும் சந்திப்பு ஏற்படவில்லை, என்பதுதான்.

அங்கே அந்த இருள் வீட்டில் ஒரே நிலையாகப் பார்க் கும் பொழுது அவளுடைய கண்கள்கூட வேதனை கொண் டன. அவள் முன் அந்தக் கறுப்பெழுத்துக்கள் முதலில் மங்கலாகவும், பிறகு சிறு சிறு புழுக்களைப் போலவும், காகிதம் பூராவும் கோட்டை கட்ட ஆரம்பித்தன. ஆயினும் அவள் அதே மாதிரி அசைவற்று நின்றுகொண் டிருந்தாள். ஆனல் அவளுடைய அறியாமையினுல் அது வரையில் குவிந்து கிடந்த துக்கத்தின் வேகம், அணையை உடைத்துக்கொண்டு வெளிப்படும் வெள்ளத்தைப் போல், புறப்பட்டது. அப் பொழுது அந்தச் சத்தத்தினுல் அவள் திடுக்கிட்டாள். அவ ளுக்குத் தன் நினைவு திரும்பி வந்தது. வாசற்படிக்கு வெளியே தலையை நீட்டிப் பார்த்தாள். மாலை நேரத்தின் இருள் பரவி யிருந்தது. கையில் அரிக்கன் லாந்தரை எடுத்துக்கொண்டு யது வெளி அறைக்குச் சென்றுகொண்டிருந்தான். அசலா அவனைக் கூப்பிட்டு, 'யது, பாபு வந்துவிட்டாரா?' என்று கேட்டாள்.

'இல்லை அம்மா, இன்னும் வரவில்லை!' என்ருன் யது.

மத்தியானம் நடந்த வெட்ககரமான நாடகத்தின் கடைசி அங்கம் முடிந்ததும் வெளியே போனவன் இன்னும் திரும்பி வரவில்லை என்பது அசலாவுக்கு ஞாபகம் வந்தது. கணவனின்

நடவடிக்கைகள் சம்பந்தமாக அவளுக்குத் துளிகூடச் சந்தேகமில்லை. ஸுரேசன் வந்த பிறகு அந்த வீட்டில் தொடர்ச்சியாகக் கலகத்தின் வெள்ளம் பெருகிக்கொண்டிருந்தது. அதனுடன், போரிடுவதில் அசலா மற்றெல்லாவற்றையும் மறந்துவிட்டிருந்தாள். அவள் தன் கணவனிடம் காதல் கொள்ளவில்லை என்றும், தவறுதலாக விவாகம் செய்துகொண்டுவிட்டதாகவும் எண்ணியதால், ஆயுள் முழுதும் அந்தத் தவறுக்கு ஊழியம் செய்வதை எதிர்த்து அவளுடைய சாந்தியற்ற மனம் புரட்சிக் கோஷம் செய்து இரவு பகல் போராடிக்கொண் டிருந்தது. மிருணாளினியின் விஷயத்தை அவள் ஒருவிதமாக மறந்திருந்தாள். ஆனால் அன்று மாலை-இருளில், மிருணாளினியின் அந்த ஒரு வரி, அவளுடைய எல்லாப் பழைய எரிச்சலுடன் சேர்ந்து பெருகிய போது, ஒரு விஷயம் அவளுக்குத் தெளிவாகிவிட்டது: குற்றம் செய்த கணவன் அன்னியப் பெண்களிடம் கொண்ட நட்பைப்பற்றிய சந்தேகம் உலகத்தில் ஹிருதயத்தைக் குலைக்கக்கூடிய எந்தக் கவலைகளிலும் குறைந்ததல்ல என்பது தான் அந்த விஷயம்.

அந்த எழுத்துக்களை மற்றொரு முறை படிப்பதற்காகக் கடிதத்தைக் கண் எதிரில் கொண்டுவரக் கையை நீட்டினாள். ஆனால் மிக்க வெறுப்புடன் அவள் கை தானாகவே திரும்பிவிட்டது. அந்தக் கடிதம் அங்கேயே திறந்தபடி கிடந்தது. அசலா அறையிலிருந்து வெளியே வந்து, தாழ்வாரத்தின் தூண் ஒன்றில் சாய்ந்து அசைவற்று நின்றாள்.

திடீரென்று அவளுக்கு, 'இவைகளெல்லாம் பொய்! இந்த வீடு வாசல், கணவன், குடித்தனம், உடை உணவு, சிரிப்பு, அழுகை — இவைகளில் ஒன்றும் உண்மையல்ல, இவைகளில் எதற்காகவும் மனிதன் துளிகூடக் கால் எடுத்து வைக்க அவசியமில்லை. மனம் அறிவு இவைகளின் பிழையினாலேயே மனிதன் துடித்து மடிகிறான். இல்லாவிட்டால்,

எந்தக் கிராமம், எந்த நகரம், எந்தக் குடிசை அல்லது அரண்மனையா யிருந்தாலும், கணவன் மனைவி, தாய் தந்தை, சகோதர சகோதரி, இந்தச் சம்பந்தங்க ளெல்லாம் எங்கே? மனவருத்தம், அழுகை அங்கலாய்ப்பு, சண்டை சச்சரவு, இவைகளைச் செய்து மனிதன் ஏன் மடிகிறான்? மத்தியானம் நடந்த அவ்வளவு பெரிய சம்பவங்களுக்குப் பின்பும், மனைவியைத் தனியாக வீட்டில் விடுத்து, பல மணி நேரம் சிந்தையற்று வெளியே பொழுதைக் கழிக்கும் கணவனின் மனத்தை அறிய இவ்வளவு ஆவல் எதற்கு? எல்லாம் பொய்! எல்லாம் ஏமாற்றம்! கானல் நீரைப் போல் எல்லாம் பொய்!' என்றெல்லாம் அசலாவுக்குத் தோன்றிற்று. ஆனால் மிருணாளினியின் வார்த்தைகளில் ஒரு முறை தன் புத்தியைச் செலுத்தினால், வீடும் குடும்பமும் அவளுக்கு இவ்வளவு வெறுப்பாகத் தோன்றியிருக்காது. மற்றப் பெண்களுடன் சதா ஆனந்த மயமாக இருக்கும் மிருணாளினியின் நடத்தையை ஒரு முறை ஒப்பிட்டுப் பார்த்தால், இரண்டொரு வார்த்தைகளினால் தன் மனத்தை இப்படிக் கறுப்பாக்கிக் கொண்டிருக்க மாட்டாள்.

யது திரும்பி வந்து, 'டீக்கு தண்ணீர் சூடாய்விட்டதா? என்று பாபு கேட்கிறார்' என்றான்.

அசலா தூக்கத்திலிருந்து விழித்துக்கொண்டவள் போல, 'எந்த பாபு?' என்றாள்.

யது சற்று உரக்க, 'நம்ம பாபு! அவர் இப்பொழுது தான் வந்தார். டீக்குத் தண்ணீர் வைத்து வெகு நேரமாகி விட்டது. சூடாகியிருக்கும், அம்மா!' என்றான்.

'நீ போ, நான் வருகிறேன்!' என்று சொல்லி, அசலா சமையலறைப் பக்கம் சென்றாள். சிறிது நேரத்திற்குப் பிறகு, டீயும் சிற்றுண்டியும் வேலைக்காரன் கையில் அனுப்பி விட்டு, அவள் வெளியே வந்தாள். அங்கு வந்து பார்க்கும்

பொழுது தாழ்வாரத்தின் இருட்டில் மஹ்மூம் உலவிக்கொண்டிருந்தான். ஸுரேசன் உள்ளே உட்கார்ந்து லாந்தர் வெளிச்சத்தில் பத்திரிகை படித்துக்கொண்டிருந்தான். ஒருவர் வந்தது ஒருவருக்குத் தெரியாதது போல் தோன்றியது.

இரண்டு பால்ய நண்பர்களிடையே இருந்த சகஜமான உறவைத் தடுத்தது மிக்க வெட்ககரமான விஷயம். அதன் காரணம் நினைவுக்கு வந்ததும் அசலாவின் கால்கள் தாமாகவே அப்படியே தயங்கி நின்றுவிட்டன.

அவள் திரும்பியதும், மஹ்மூம் நிமிர்ந்து நின்று, 'ஸுரேசனுக்கு டீ கொடுக்க இவ்வளவு நாழிகை ஏன் ஆயிற்று?' என்றான்.

அசலாவின் வாயினின்றும் வார்த்தைகளே வெளிவரவில்லை. அவள் ஒரு கணம் தலை குனிந்து நின்றாள். பிறகு மெள்ள அறைக்குள் வந்தாள்.

யது டீ சாமான்களை மேஜையின் மேல் வைத்துவிட்டுத் திரும்பிய பொழுது, ஸுரேசன் பேப்பரை வைத்து விட்டு முகத்தைத் திருப்பினான். 'மஹ்மூம் எங்கே, இன்னும் வரவில்லையா?' என்றான்.

சொல்லிக்கொண்டிருக்கும் போதே மஹ்மூம் உள்ளே வந்து ஒரு நாற்காலியை இழுத்துப் போட்டுக்கொண்டு உட்கார்ந்தான்; ஆனால் அவன் காதருகிலேயே தான் உலாத்திக் கொண்டிருந்த விஷயத்தைச் சொல்லுவது அவசிய மென்று அவன் நினைக்கவில்லை. அதன் பின் எல்லோரும் மௌனம்! அசலா ஒன்றும் பேசாமல் தலை குனிந்துகொண்டு, இரண்டு கோப்பை டீ தயார் செய்து, ஒரு கோப்பையை ஸுரேசன் பக்கமும், மற்றொன்றைத் தன் கணவன் பக்கமும் நகர்த்தி விட்டுப் பேசாமல் எழுந்து சென்றாள்; ஆனால் மஹ்மூமின் தடை ஏற்பட்டதால் திடுக்கிட்டு நின்றுவிட்டாள்.

'சற்றுப் பொறு!' என்று சொல்லி, அவன் தானே எழுந்து கதவைத் தாளிட்டுவிட்டு வந்தான். ஸுரேசனுக்கு அதே க்ஷணம் அவனுடைய ஆறு-குழல் கைத் துப்பாக்கியின் ஞாபகம் வந்தது. அவன் கையிலிருந்த கோப்பை நடுங்கியது. அதிலிருந்து டீ தளும்பிப் பூமியில் கொட்டிற்று. அவன் முகம் சவம் போல் வெளுத்துவிட்டது. 'கதவை ஏன் தாளிட்டாய்?' என்று கேட்டான்.

அவனுடைய குரல், முகம், கேள்வியின் தினுசு இவைகளைக் கண்டு, அசலாவும் அதே விஷயத்தை நினைத்து மயிர்க்கூச்செறிந்தாள். ஒருதரம் கூச்சலிடக்கூட முயற்சித்தாளோ என்னவோ! ஆனால் அவளுடைய அந்த முயற்சி பலித மடையவில்லை. மஹிம் ஒரு கணம் அசலாவின் பக்கம் பார்த்துவிட்டு எல்லாவற்றையும் அறிந்துகொண்டான். அதன் பிறகு அவன் ஸுரேசன் முகத்தைப் பார்த்து, 'வேலைக்காரன் வந்துவிடப் போகிறான் என்பதற்காகத்தான்; என் கைத் துப்பாக்கி எப்பொழுதும் போலப் பெட்டியில் தான் வைக்கப்பட்டிருக்கிறது. நீங்கள் இவ்வளவு பயந்து போவீர்கள் என்பது எனக்குத் தெரிந்திருந்தால் நான் கதவையே சாத்தியிருக்கமாட்டேன்!' என்றான்.

ஸுரேசன் டீ கோப்பையை மேஜையின் மேல் வைத்துவிட்டு, முகத்தில் சிரிப்பை வரவழைத்துக் கொண்டு, 'பேஷ், பயப்படுவானேன், அப்பா? நீ என்னைத் துப்பாக்கியால் சுட்டுவிடுவாயா? — பேஷ் உயிருக்குப் பயமா? — எனக்கா? எப்பொழுது பார்த்தாய் நீ? நன்றாயிருக்கிறது—' என்றான்.

அவனுடைய அசந்தர்ப்பமான பதில்கள் முடிவடையு முன்பே, மஹிம், 'எப்பொழுதுமே உண்மையில் நீ பயந்து நான் பார்த்ததில்லை. உயிரின் மேல் ஆசை உனக்குக் கிடையாது, அதையும் நான் அறிவேன். ஸுரேஷ், எனக்கு என்னுடைய துக்கத்தைவிட இன்று உன்னுடைய வீழ்ச்சிதான்

அதிகத் துக்கத்தைத் தருகிறது. உன் போன்ற மனிதரைக் கூட எந்த வஸ்து சிறுமைப்படுத்த முடியுமோ — இல்லை, ஸுரேஷ், — நாளைக்கு நீ கட்டாயம் வீட்டுக்குப் போ! எவ் விதக் காரணத்தாலும் இனிமேல் தாமதம் செய்வது சரி யல்ல' என்றான்.

ஸுரேசன் அதற்கும் பதில் சொல்ல விரும்பவில்லை. ஆனால் இந்தத் தடவை அவன் தொண்டையிலிருந்து சத் தமே வெளிவரவில்லை; வேறென்ன, — முகத்தைக்கூடச் சரியாக வைத்துக்கொள்ள முடியவில்லை, அது தானாகவே குனிந்துகொண்டது.

'நீ உள்ளே வா, அசலா!' என்று சொல்லி, மஹிம் தாழ்ப்பாளைத் திறந்து, அடுத்த க்ஷணம் இருட்டில் வெளியே வந்தான்.

ஸுரேசன் தலை நிமிர்ந்து பலவந்தமாகச் சிரித்துக் கொண்டே, 'கேட்டுக்கொள் வார்த்தையை! இம்மாதிரி எத் தனையோ துப்பாக்கி ரிவால்வர் இவைகளை இரவு பகல் சுட் டுச் சுட்டு வாழ்க்கை கழிந்தது, இப்பொழுது ஒரு ஓட்டை ரிவால்வரின் பயத்தினாலா இறந்துவிடப் போகிறேன்! வேறென்ன! நன்றாக வேடிக்கை செய்தாய், அப்பா!' என்று சொல்லிக்கொண்டே மேலும் அவன் சிரிக்கலானான். அந்தச் சிரிப்பில் கலந்துகொள்ள அறையில் அசலாவைத் தவிர வேறு யாரும் இல்லை. ஆனால் அவள் அப்படியே தலை குனிந்து சிறிது நேரம் நின்றுகொண்டிருந்தாள்; பிறகு பக்கத்து வாசற்படி வழியாக மெள்ள உள்ளே சென்றாள்.

ஒரு மணி நேரத்திற்குப் பிறகு மஹிம் வீடு திரும்பி னான். தன்னுடைய அறையில் சென்று பார்த்தான். அங்கே ஒருவருமில்லை. பக்கத்து அறைக்குச் சென்று பார்த்தான். அங்கே பூமியில் பாய் விரித்துக் கைமேல் தலை வைத்துக் கொண்டு அசலா படுத்திருந்தாள். கணவன் உள்ளே வருவ

ஹைதக் கண்டு அவள் எழுந்து உட்கார்ந்தாள். அருகேயே ஒரு காலி மெத்தை விரித்திருந்தது. மஹ்மூத் அதில் உட்கார்ந்து கொண்டே, 'ஏன், நாளை நீ உன் தாய்வீடு செல்வது நிச்சயம் தானே?' என்றான்.

அசலா கீழே பார்த்துக்கொண்டு உட்கார்ந்தாள். ஒன்றும் பேசவில்லை. மஹ்மூத் சிறிது நேரம் பொறுத்து மறுபடியும், 'விரும்பாத இடத்தில் இருந்து குடித்தனம் செய்ய வேண்டும் என்று அவ்வளவு பெரிய அநியாயத்தை, நான் கணவனாக இருந்தாலும்கூட, உனக்குச் செய்ய முடியாது!' என்றான்.

ஆனால் அசலா முன் போலவே சிலை போல் மௌனமாக அசையாமல் இருப்பதைக் கண்ட மஹ்மூத், 'உன்னிடம் எனக்கு மற்றொரு புகார் இருக்கிறது. என் சுபாவத்தை நீ அறிந்தே யிருப்பாய். விவாகத்திற்குப் பின்பல்ல - அதற்கு ரொம்ப முன்னமேயே, சுக துக்கம் எதுவாக வேண்டுமானாலும் இருக்கட்டும், உன்னை அடைவதினும் துளிகூட அதிகமாக அடைய நான் ஆசைப்படவில்லை, அடைந்தாலும் எடுத்துக்கொள்ள மாட்டேன் என்பதை நீ அறிவாய். காதலின் மேல் பாபத்தைப் பிரயோகிக்க முடியாது, அசலா! முடியாவிட்டால் துக்கமான விஷயம்தான்; ஆனால் வெட்கப்படக் கூடிய விஷயம் ஒன்றும் இல்லை. பின் ஏன் இவ்வளவு நாட்களாகக் கஷ்டத்தை அடைந்துகொண் டிருக்கிறேன்? நான் உன்னைப் பலவந்தமாகத் தடுத்து வைத்திருப்பேன் என்று நீ எனக்கு அறிவிக்காமலே எண்ணினாயா? ஒரு நாளும் எந்த விஷயத்திலும் நான் பலவந்தம் செய்தது கிடையாது. அவர்கள் உன்னை உத்தாரணம் செய்து அழைத்துச் சென்றால் அப்பொழுது உன் உயிர் தப்புமா? என்னிடம் சொல்வதால் ஒரு உபயோகமும் ஏற்படாதா? உன் உயிரின் மதிப்பை அவர்கள்தான் அறிவார்களா?' என்றான்.

அசலா கண்ணீர் பொங்கும் கண்களுடன், தெளிவில் லாத தன் குரலை முடிந்தவரை சுபாவமாக ஆக்கிக்கொண்டு, 'நீங்கள்தான் அன்பு வைக்கவில்லை!' என்றாள்.

மஹிம் ஆச்சரிய மடைந்து. 'அப்படி யார் சொன்னார் கள் உன்னிடம்? நான் ஒருபோதும் உன்னிடம் சொன்ன தில்லையே!' என்றான்.

அசலாவுக்குச் சுதாரித்துக்கொள்ள அதிக நேரமாக வில்லை. 'வெறும் சொல்தானா எல்லாம்? வாய் வார்த்தைதான் நிஜம், மற்றவைகளெல்லாம் பொய்யா? கோபமாக இருக்கும் நிலைமையில் மனத்தில் உண்டாகும் துக்கம் வாயினால் வெளிப் படுகிறது; அதையே உண்மை என்று நினைத்துக்கொண்டு தாங்கள் பலம் காட்ட விரும்புகிறீர்களா? உங்களைப் போல பன்னிப் பன்னிப் பேசத் தெரியாதவர்களை, அவர்கள் தலை மேல் கால் வைத்து அமுக்கிவிட வேண்டுமா?' என்று சொல்லிக்கொண்டிருக்கும் போதே அவள் குரல் தடை பட்டுவிட்டது.

மஹிமனால் அதை அறிந்துகொள்ள முடியவில்லை. அவன், 'இதன் அர்த்தம்?' என்றான்.

அசலா பொங்கி எழும் தன் அழுகையை அடக்கிக் கொண்டு, 'உங்களைப் போன்ற பொறுமையுள்ளவர்கள்கூட பொய்யை எப்பொழுதும் அமுக்கி வைத்திருக்க முடியும் என்று எண்ணிக்கொள்ள வேண்டாம்; நீங்கள்கூட எத்த னையோ தவறுகள் செய்யக்கூடும், தங்கள் மேஜையின் மேல் கொஞ்சம் பாருங்கள்! நாங்கள் மாத்திரம்தான்—' என்று சொல்லி நிறுத்தினாள்.

மஹிம் சிந்தை சிதறியவன் ஆனான். 'என்ன இருக் கிறது என் மேஜையின் மேல்?' என்றான்.

அசலா முகத்தில் தலைப்பைப் போட்டுக்கொண்டு பாயில் கவிழ்ந்து படுத்துக்கொண்டிருந்தாள். அவளிடமிருந்து

பதிலொன்றும் வராததால் மறுபடி எழுந்து தன் மேஜையைப் பார்க்கச் சென்றான். அவன் படிக்கும் அறையிலுள்ள மேஜையின் மேல் சில புஸ்தகங்கள் கிடந்தன; பத்து நிமிஷங்கள்வரை அவைகளைப் புரட்டிப் புரட்டித் தேடிக் கொண்டிருந்தான். கடைசியில், மனைவியின் புகாரின் கருத்தை அறிய முடியாமல், பிரமை பிடித்தவன் போல் திரும்பி வந்து, தன் படுக்கை அறையில் கால் வைத்ததும், சிறிய மேஜையின் மேலிருந்த மிருணாளினியின் கடிதம் அவன் பார்வையில் பட்டது. அதைக் கையிலெடுத்துப் படித்ததும், திடீரென்று அந்தகாரத்தில் மின்னல் தோன்றியதும் எப்படி வழி தெரிகிறதோ, அதே போல ஒரு கணத்தில் அவனுக்கு எல்லாம் விளங்கிவிட்டது. அசலாவின் சைகை எங்கே இருந்தது என்பதை அவன் அறியத் தாமதமாகவில்லை. கடிதத்தைக் கையில் எடுத்துக்கொண்டு மறுபடி படுக்கையில் உட்கார்ந்து, வரண்ட பார்வையுடன், பேசாமல் இருளின் பக்கம் பார்த்துக்கொண்டிருந்தான். எப்படி அவள் முதல் நாள் வந்தாள், எப்படிச் சென்றாள், சக்களத்தி என்று சொல்லி அசலாவிடம் எப்படி வேடிக்கை செய்தாள்—இவைகள் எல்லாம் ஒவ்வொன்றாக அவன் நினைவுக்கு வரலாயின. பட்டிக்காட்டின் சிரிப்பு வேடிக்கைகளில் எல்லாம் பரிசயமில்லாத ஒரு பெண்ணுக்கு அந்த வார்த்தைகள் பிரதி தினமும் எப்படிப் பட்டிருக்கும்? தானும் மனம் விட்டு விவரித்துச் சொல்லி அதில் கலந்துகொள்ள முடியவில்லை. மனைவியின் முன் மேலும் வெட்கமடைந்து, திரும்பத் திரும்ப அவளைத் தடுக்கத்தான் முயற்சி செய்துகொண்டிருந்தான். அவனுடைய அந்த வெட்கம், அந்தச் சிறந்த படிப்பும் புத்தியும் வாய்ந்த மனைவியின் அபிப்பிராயத்தில் தப்பாகப் பட்டிருந்தால், — உண்மையில் 'வெட்கம்' மெள்ள அவள் மனத்தில் தங்கிப்போயிருந்தால் — இன்று அவன் அதை

எப்படி வேரோடு களைந்தெறிய முடியும்? வெளியே யுள்ள இருளில் இன்று அவனுக்கு அநேக உண்மைகள் தென்படலாயின ;— எப்படி அசலாவின் ஹிருதயம் மெள்ள மெள்ள அவனிடமிருந்து தூர விலகிக்கொண்டிருக்கிறது, எப்படித் தன்னிடம் அவளுக்கு நாளுக்கு நாள் கசப்பு ஏற்பட்டு வருகிறது, எவ்வெவ்விதமாகக் கணவனுடன் வாழ்வது அவளுக்கு ஒவ்வொரு க்ஷணமும் சிறைவாசமாகத் தோன்றுகிறது — இவை யாவும் அவனுக்குத் தெளிவாகத் தெரிந்தன. உயிரை மாய்க்கும் அந்தச் சங்கடத்திலிருந்து விடுதலையடைய, ஸுரேசன் முன் அவள் வெளியிட்ட விசனம் மிகுந்த பிரார்த்தனை, அவள் ஹிருதயத்தில் எந்த ஆழமான இடத்திலிருந்து வெளிவந்தது என்பதும் மஹிமின் மனக் கண்ணுக்கு அப்பொழுது புலப்பட்டது. உண்மையில் அச லாவை அவன் ஹிருதய பூர்வமாக விரும்பினான். அதே அச லாவை இவ்வளவு நாள்வரை அருகே வைத்திருந்தும் அவளு டைய இவ்வளவு பெரிய மன வேதனையைக் கவனிக்காமல் கண்ணை மூடிக்கொண்டிருந்தது தன்னுடைய பெரிய குற்றம் என்பதை உணர்ந்தான். ஆனால் அம்மாதிரி இனி ஒரு கணமும் நடக்க முடியாது. மனைவியின் உள்ளத்தைத் திரும்பிப் பெற ஏதாவது உபாயம் இருக்கிறதா இல்லையா?—அவள் எவ்வளவு தூரம் விலகிப் போயிருக்கிறாள் என்பதை அநு மானம் செய்வதுகூட இன்று அசாத்தியமாக இருந்தது. ஆயினும் அநேகம் பிரதிகூலங்களுக்கு எதிராகப் போராடி, கணவன் என்று அடைந்தவன் மூலமாகவே அவமானமும் கெட்ட பெயரும் அடைந்து, அவள் வீடு திரும்ப வேண்டி யிருக்கிறது,—தான் செய்த இவ்வளவு பெரிய குற்றத்தை அவன் அவளிடம் ஒப்புக்கொள்ள வேண்டியிருந்தது.

மஹிம் மெள்ள எழுந்து அசலாவின் வாசற்படிக்கு முன் வந்து பார்க்கும் பொழுது உள்ளே தாளிடப்பட்டிருந்தது.

இரண்டொரு தரம் கூப்பிட்ட பிறகும் பதில் கிடைக்காததால், பலவந்தமாக அவள் சாந்தியைக் குலைக்க அவன் இஷ்டப்படவில்லை. ஆனால், திடீரென்று ஒரு கடினமான பரீட்சையின் பொறுப்பிலிருந்து விடுதலை அடைந்ததால் அவனுக்கு உயிர் வந்ததைப் போல் தோன்றியது.

மஹிம் அங்கிருந்து திரும்பி வந்து கட்டிலில் படுத்தான்; பக்கத்திலிருந்த இடம் அவள் இல்லாததால் காலியாக இருந்ததோ, அவள் பக்கத்து அறையில் சாப்பிடாமல் தரையில் படுத்துக்கொண்டிருக்கிறாள் என்ற விஷயம் அவன் நினைவுக்கு வரவே, அவனுக்கு எவ்விதத்திலும் தூக்கம் வரவில்லை. எழுந்து அவளை எழுப்பி வரவேண்டுமா வேண்டாமா என்பதை எண்ணி எண்ணிச் சங்கடப்பட்டு இரவு வெகு நேரத்திற்குப் பின் சற்று கண்ணயர்ந்தான். அதற்குள் திடீரென்று ஏற்பட்ட பெரும் வெளிச்சத்தினால் விழித்துக்கொண்டு பார்த்தான். தலைமாட்டில் திறந்திருந்த ஜன்னல் வழியாகப் பெரும் ஜோதி வந்துகொண்டிருந்தது; அறை முழுவதும் புகை சூழ்ந்துகொண்டிருந்தது; வெகு அருகில் அதைக் கேட்டாலே கைகால் செயலற்றுப் போகும்படியான சத்தம் வந்துகொண்டிருந்தது. எங்கோ நெருப்புப் பிடித்திருக்கிறது என்பதை அவன் நிச்சயமாக அறிந்துங்கூட ஒரு நிமிஷம் அவனால் கைகால்களை அசைக்க முடியவில்லை. ஆனால் அந்தச் சில நிமிஷங்களிலேயே அவனுடைய மூளைக்குள் பிரம்மாண்டமான சுழல் ஏற்பட்டது. அவன் குதித்து எழுந்து கதவைத் திறந்து வெளியே சென்று பார்க்கும்பொழுது சமையலறையில், அசலா இருக்கும் அறையின் தாழ்வாரத்தின் ஒரு மூலைவரை சீறிக்கொண்டு நெருப்பின் ஜ்வாலை எரிந்துகொண்டிருந்தது. அருகேயிருந்த நாகமரத்தைச் சிவப்பாக்கியது அந்நெருப்பு. கிராமத்தில் கூரை வீட்டில் நெருப்புப் பிடித்தபின் அதை அணைக்க எண்ணுவது பைத்

இயக்காரத்தனம் ; யாரும் இதற்கு முயற்சியும் செய்வதில்லை. தெருவிலுள்ளவர்கள் தங்கள் தங்கள் பொருள்களையும், ஆடு மாடுகளையும் அப்புறப்படுத்த இங்கு மங்கும் ஓடிக்கொண்டிருந் தனர். அடுத்த தெருவிலுள்ள ஸ்திரீகளும் புருஷர்களும் ஒவ்வொரு பக்கமாகக் கூடி நின்று, மிக்க பரபரப்புடன், ‘ஆஹா! ஹா!’ என்று சொல்லிக்கொண்டே, ‘எவ்வளவு பொருள்கள் எரிந்து போயிருக்கும்? எப்படி இந்தச் சர்வ நாசம் நடந்ததோ?’ என்பவை போன்ற யோசனைகளைச் செய்துகொண்டே, வீடு எரிந்து சாம்பலாவதையே எதிர் பார்த்துக்கொண்டிருந்தார்கள். அதன் பிறகு? வீடு திரும்பிக் கைகால் கழுவிக்கொண்டு, பாக்கி இரவைப் படுக்கையில் படுத்துக் கழித்துவிட்டு, காலையில் மறுபடியும் கையில் லோட் டாவை எடுத்துக்கொண்டு குளத்திற்குச் செல்வார்கள் ; பிறகு மற்ற ஆலோசனைகளையும் செய்து முடித்துவிட்டு வீடு சென்று ஸ்நானம் செய்து சாப்பிடுவார்கள். ஒருவருடைய எரிந்த வீட்டின் சாம்பல் மற்றவரின் நியமமான வாழ்க்கைப் பயணத்திற்குத் துளிகூடக் கஷ்டத்தைத் தருவதில்லை.

மஹிம் கிராமத்தில் இருப்பவன். எல்லாம் அவனுக்குத் தெரியும். ஆகையால் அவன் அர்த்தமில்லாமல் கூப்பாடு போட்டுத் தெருவில் உள்ளவர்களின் தூக்கத்தை அகாலத் தில் கெடுக்கவில்லை. அதற்கு அவசியமும் ஒன்றுமில்லை. காரணம் அவனுடைய மா பலா நிறைந்த அவ்வளவு பெரிய தோட்டத்தைத் தாண்டி நெருப்பு பிறர் வீட்டைத் தீண்ட முடியாது. வெளிப் பக்கம் வேலைக்காரன் ஸுரேசன் முத லியவர்கள் படுத்துக்கொண்டிருந்த அறை வரையில் தீ எட்ட நேரம் இருந்தது. அசலாவின் அறையில் தீப்பற்ற இன்னும் அதிக நேரமில்லை. அவன் அவளுடைய அறைக் கதவை வேகமாக உதைத்து, ‘அசலா!’ என்று கூப்பிட் டான்.

அசலா விழித்துக்கொண்டிருப்பவள் போல, 'ஏன்?' என்று பதிலளித்தாள்.

'தாமதம் செய்யாதே, வெளியே வா! வீட்டில் நெருப்புப் பிடித்துக்கொண் டிருக்கிறது!' என்றான் மஹ்ஹிம்.

அசலா பயமடைந்த குரலில் பதிலுக்கு ஒருமுறை கூக்குரலிட்டாள்; அதன் பிறகு ஒரே மௌனம். மஹிம் மறுபடியும் ஆத்திரத்துடன் கூப்பிட்டான். ஆனால் அவள் ஒரு பதிலும் சொல்லவில்லை. மஹிமுக்கு இதே பயம்தான். ஏனென்றால் வீட்டில் நெருப்புப் பிடிப்பதென்று எதைச் சொல்லுகிறார்கள் என்பதைப்பற்றி அசலாவுக்கு ஒன்றுமே தெரியாது. அதற்கு முன் அவள் கண்களை மூடிக்கொண்டே பதில் சொன்னாள். இப்பொழுது கண்களைத் திறந்ததும் அந்த அக்னி மயமான காட்சியைக் கண்டு அவளும் சிறிது நேரம் வரை ஒன்றும் தோன்றாதவளாக ஆகிவிட்டாள். அசலா மூர்ச்சை அடைந்திருப்பாள் என்பதை மஹிம் நன்றாக உணர்ந்துகொண்டான். ஆனால் மஹிம் அதற்குத் தயாராகவே இருந்தான். அவன் ஒரு கதவை மேலே தூக்கி, திறந்து விட்டு, உள்ளே சென்று மூர்ச்சை அடைந்திருந்த தன் மனைவியை எடுத்து மார்பில் அணைத்துக்கொண்டு, வேகமாக வெளியே வந்து வாசலில் நின்றான்.

அப்பொழுது, வீட்டிலுள்ள மற்ற எல்லோரையும் எழுப்ப, அவர்களைப் பெயர் சொல்லிச் சொல்லிக் கூப்பிடலானான். ஸுரேசன் வெளியே வந்து நின்றான். யதுவும் இன்னும் மற்றவர்களும் கதவைத் திறந்துகொண்டு வெளியே ஓடி வந்தார்கள். அதன் பின்புதான் ஒரு பிரம்மாண்டமான சத்தம் கேட்டது. அதனால் அசலாவின் மூர்ச்சை கலைந்தது. அவள் தன் இரு கரங்களாலும் கணவனின் கழுத்தைக் கட்டிக்கொண்டு தேம்பித் தேம்பி அழலானாள்.

மஹிம் எல்லோரையும் அழைத்துக்கொண்டு வெளியே திறந்த இடத்திற்கு வந்த பொழுது பெரிய அறையின் கூரை தீப்பிடித்துவிட்டது. அசலாவின் நகைகளும் இன்னும் சில விலையுயர்ந்த சாமான்களும் அங்கே இருப்பதும், மேலே ஒரு கணம் தாமதம் செய்தால்கூட அவைகளைக் காப்பாற்ற முடியாது என்பதும் அவன் ஞாபகத்திற்கு வந்தது.

அசலா சுயநினைவு அடைந்துவிட்டாள்; அவள் பலமாகக் கணவனின் கைகளைப் பிடித்துக்கொண்டு, 'முடியாது, அது நடக்காது. பழிவாங்க உங்களுக்கு இந்தச் சமயம்தான் கிடைத்ததா? நான் உங்களை உள்ளே போக விடமாட்டேன். போகட்டும், எல்லாம் எரிந்து போகட்டும்!' என்றாள்.

'போகாமல் ஒன்றும் நடவாது அசலா!' என்று சொல்லி, அவன் பலவந்தமாகக் கையை விடுவித்துக்கொண்டு, சூழ்ந்திருந்த புகையினுள் வேகமாக நுழைந்துவிட்டான். யதுவும் கூச்சலிட்டுக்கொண்டே பின்னால் ஓடினான்.

ஸுரேசன் அதுவரை ஒன்றும் தோன்றாதவனாய்ப் பார்த்துக்கொண்டு தூர நின்றிருந்தான்; திடீரென்று நினைவு வந்ததும் அவன் எதையோ எடுக்க முன்னால் வந்தவுடன் அசலா சட்டென்று அவன் வேஷ்டியின் தலைப்பைப் பிடித்துக்கொண்டு, கடுமையான குரலில், 'எங்கே போகிறீர்கள்?' என்றாள்.

ஸுரேசன் வேஷ்டியை இழுத்துக்கொண்டே, 'மஹிம் போயிருக்கிறானே—' என்றான்.

அசலா அழுத்தமான குரலில், 'அவர் தன் பொருளைக் காப்பாற்றச் சென்றிருக்கிறார். நீங்கள் யார்? நான் உங்களைப் போக விடமாட்டேன்!' என்றாள். ஆனால் அவள் குரலில் துளிகூட அன்பின் தொனி இல்லை. அதிகாரமற்றவனுடைய உபத்திரவத்தை வெறுத்து அதை அடக்கியதைப் போல் இருந்தது.

இரண்டு மூன்று நிமிஷங்களுக் கெல்லாம், மஹிம், இரண்டு கைகளிலும் இரண்டு பெட்டிகளைத் தொங்கவிட்டுக் கொண்டும், தலையில் ஒரு பெரிய பெட்டியைச் சுமந்துகொண்டும் வெளியே வந்து சேர்ந்தான். பெட்டிகளை அசலாவின் காலடிகளில் வைத்துக்கொண்டே, 'உன் நகைப் பெட்டியைப் பார்த்துக்கொள். அங்கு இங்கு விட்டுவிடாதே! உன் புஸ்தக அறையைக் காப்பாற்ற முடியுமா பார்க்கிறேன்!' என்றான்.

அசலாவின் வாயிலிருந்து ஒரு வார்த்தையும் வெளிவரவில்லை. அவள் கையில் அப்பொழுதுகூட ஸுரேசனுடைய வேஷ்டியின் தலைப்பு இருந்தது. மஹிம் ஒரு கணம் அதைப் பார்த்துவிட்டு, யதுவைக் கூட அழைத்துக்கொண்டு, மறுபடியும் மறைந்தான்.



# XX

காலையின் இளம் வெளிச்சத்தில் தன் கணவன் முகத்தைப் பார்த்ததும் அசலாவின் உள்ளம் தழுதழுத்து அழுகை பொங்கியது. கண்களில் பெருகிய கண்ணீரை அவளால் தடுக்க முடியவில்லை. தலைமயிர் தூசியாலும் சாம்பலாலும் விகாரமடைந்திருந்தது; நெருப்பின் ஜ்வாலையால் ஒரே இரவில் தன் அழகிய கணவனை யாரோ வயோதிகனாக ஆக்கிவிட்டதைப் போல் அவளுக்குத் தோன்றியது. கிராமத்து ஜனங்கள் நாற்புறமும் சுற்றிச்சுற்றிப்பேசிக்கொண்டிருந்தனர். 'பித்தளைப் பாத்திரங்களெல்லாம் அநேகமாகப் போய்விட்டன. போய்த் தொலையட்டும், ஆனால் நல்ல புடவை துணிகள், நகை நட்டுக்கள் அந்த ஒரு பெட்டியில் எவ்வளவு தப்பியிருக்கின்றன!' என்ற விஷயத்தைப் பற்றி எல்லோரும் தீவிரமான ஆலோசனை செய்துகொண்டிருந்தார்கள். அவர்களிடமிருந்து சிறிது தூரத்தில், அணைந்துபோன அக்னி ஸ்தம்பம் போலப் பேசாமல் நின்றவண்ணம் வெறித்த பார்வையுடன் பார்த்துக்கொண்டிருந்தான் மஹிம். அவன் எல்லாவற்றையும் கேட்டுக்கொண்டிருந்தான். ஆனால் அந்த இரைச்சலை அகற்றக் கூடியதாக இல்லை அவனுடைய மன நிலைமை. அடுத்த தெருக்காரர் பீரு பனர்ஜி மிக்க கண்ணியமான மனிதர், வாதரோகத்தின் காரணமாக இதுவரை அவரால் வரமுடியவில்லை. அப்பொழுதுதான் தடியை ஊன்றிக்கொண்டு அவர் வருவதைப் பார்த்த மஹிம் சற்று முன்னால் வந்தான். பனர்ஜி

மஹாசயர் ரொம்ப அநுதாபப்பட்டுவிட்டுக் கடைசியில், 'மஹிம், உன்னுடைய தகப்பனார் இறந்து வெகு நாள் ஆகி விட்டது. ஆனால் எனக்கும் அவருக்கும் வித்தியாசமே கிடையாது. நாங்கள் இருவரும் ஹரி-ஹர ஆத்மாக்கள்!' என்றார்.

மஹிம் தலையசைத்து வினயத்துடன், 'அதில் என்ன சந்தேகம்!' என்றான்.

'இம்மாதிரி ஏதாவது நடக்கும் என்பது எனக்கு முன்பே தெரியும்' என்றார் பனர்ஜி.

மஹிம் திடுக்கிட்டு ஆவல் நிறைந்த பார்வையுடன் அவரைப் பார்க்கலானான். அருகேயே மரங்களின் மறைவில் சாமான்களை வைத்துக்கொண்டு அசலா உட்கார்ந்திருந்தாள். அவளும் கேட்பதற்கு ஆவல் அடைந்தாள். இவ்வளவு பீடிகை போட்டுக்கொண்டு பனர்ஜி மஹாசயர் சொல்ல ஆரம்பித்தார். 'பிரம்மாவின் கோபம் எப்படியும் பொய்யாகாது, அப்பா! எங்களிடம் ஒரு தரம் கேட்கக்கூட இல்லை, இவ்வளவு பெரிய பிராமணன் வீட்டுப் பிள்ளையாக இருந்தும் நீ எப்படிப்பட்ட செய்யத் தகாத காரியத்தைச் செய்து விட்டாய்!' என்றார்.

மஹிமனால் விஷயத்தை அறிய முடியவில்லை. பனர்ஜி தம் பேச்சை விஸ்தாரமாக வியாக்கியானம் செய்வதற்காகத் தம்மை அநுசரிப்பவர்களின் பக்கம் பார்த்து, 'ஏதாவது உபத்திரவம் கட்டாயம் ஏற்படும் என்று நாம் எல்லோரும் சொல்லிக்கொண்டிருந்தோம் அல்லவா! வேறு யார் மீதும் பிரம்மாவுக்குக் கோபம் ஏற்படவில்லையே! அப்பா, பிரம்ம சமாஜி எப்படியோ அப்படித்தான் கிறிஸ்தவர்களும்! பெரிய மனிதன் ஆனால் கிறிஸ்தவர்கள் என்கிறார்கள், வங்காளி ஆனதால் பிரம்ம சமாஜி என்கிறார்கள். சாஸ்திர ஞானம் உள்ள நமக்கு இந்த விஷயம் விளங்காமல் ஒன்றுமில்லை!' என்றார்.

உற்சாகம் அடைந்த மற்றவர்கள் இதை ஆமோதித்தார்கள். பனர்ஜி மஹாசயர் மிகவும் உற்சாக மடைந்து, 'நீ ஏன் அப்பா செய்யவில்லை? முதலில் ஒரு பிராயச்சித்தம் செய்துகொண்டு இவளை விட்டு ஒழித்து—' என்று மேலும் பேச ஆரம்பித்தார்.

மஹிம் கை தூக்கி, 'பொறுங்கள். உங்களை அவமரியாதை செய்ய நான் விரும்பவில்லை. முடியாததைப் பற்றிப் பேசாதீர்கள். நான் வீட்டுக்கு அழைத்துக்கொண்டு வந்திருப்பவளுடைய புண்ணியத்தில் வீடு இருந்தால் சரி, இல்லாவிட்டால் எத்தனை தடவை வேண்டுமானாலும் எரியட்டும், என்னால் சகித்துக்கொள்ள முடியும்!' என்றுசொல்லி, அவன் மறுபக்கம் சென்றுவிட்டான்.

பனர்ஜி மஹாசயர், தம் படை பலத்துடன், சிறிது நேரம் வரை வாயையும் முகத்தையும் பார்த்துக்கொண் டிருந்தார். பிறகு தடியை ஊன்றிக்கொண்டே வீடு திரும்பினார். அவர் மனத்திற்குள் என்ன சொல்லிக்கொண்டு போனாரோ அதைச் சொல்லாமல் இருப்பதே நல்லது.

அசலா எல்லாவற்றையும் கேட்டாள்; அவளுடைய இரு கண்களிலும் பெரிய பெரிய கண்ணீர் முத்துக்கள் துளித்தன.

யது அங்கு வந்து, 'அம்மா தங்களிடம் கேட்டுக் கொண்டு பாபு பல்லக்குக் கொண்டுவரச் சொன்னார். கொண்டு வரட்டுமா?' என்றான்.

அசலா தலைப்பினால் கண்களைத் துடைத்துக்கொண்டு, 'பாபுவை ஒரு தரம் இங்கே அனுப்பு!' என்றாள்.

'பல்லக்கு?'

'இப்பொழுது இருக்கட்டும்.'

மஹிம் அருகே வந்து நின்றதும் மறுபடியும் அவள் கண்களில் கண்ணீர் வந்துவிட்டது. திடீரென்று அவள்

குனிந்து தன் பாதங்களைத் தொட்டதால் மஹிம் ஆச்சரியமும் துக்கமும் அடைந்தான். கணவனின் கையைப் பிடித்து அவனைத் தன் அருகில் உட்கார வைத்துக்கொள்ளப் போகிறாளா, அல்லது வேறு ஏதாவது சிறு பிள்ளைத்தனம் செய்துவைக்கப் போகிறாளா, என்னதான் செய்திருப்பாள் என்பதைக் கடவுள்தான் அறிவார்; ஆனால் பொழுது விடிந்துவிட்டது, நாற்புறமும் வம்பு பேசும் ஜனங்களின் கண்கள் இருந்தன; ஆகையால் அசலா தன்னை அடக்கிக் கொண்டு, 'பல்லக்கு எதற்கு?' என்றாள்.

'ஒன்பது மணி வண்டி கிடைத்துவிட்டால் எல்லாவற்றிற்கும் சௌகரியமாக இருக்கும். ஒரு மணிக்குள் வீட்டுக்குப் போய் ஸ்நானம் செய்து சாப்பிட முடியும். நேற்றுக் கூடத்தான் நீ ஒன்றும் சாப்பிடவில்லையே!' என்றான்.

'நீங்கள்?'

'நானா?' என்று மஹிம் சற்று யோசித்துவிட்டு, 'எனக்கும் ஏதாவது ஒரு ஏற்பாடாகிவிடும்!' என்றான்.

'ஆனால் எனக்கும் ஆகிவிடும். நான் போகவில்லை.'

'என்ன ஆகும், சொல்லேன்?'

இந்தக் கேள்விக்கு அசலாவால் பதில் சொல்ல முடியவில்லை. 'காட்டில் மரத்தின் கீழ் இருப்பேன்!' என்று சொல்ல வாய் வந்தது. ஆனால் உண்மையில் அம்மாதிரி நடக்காது. மேலும் தெருவில் பிறர் வீட்டை ஒரு மணி நேரம் ஆசிரயிப்பதுகூட எவ்வளவு அவமானம் என்ற விஷயம் அவளுக்கு இப்பொழுது தெரிந்துவிட்டது. மிருணாளினியின் நினைவு அவளுக்கு வரவில்லையா என்றால், அது வேறு விஷயம். அடிக்கடி நினைவு வந்தது. ஆனால் வெட்கத்தின் மிகுதியால் அதை வாய்விட்டுச் சொல்ல முடியவில்லை. சிறிது நேரம் சும்மா யிருந்துவிட்டு, 'நீங்களும் கூட வாருங்கள்!' என்றாள்.

மஹிம் ஆச்சரிய மடைந்து, 'கூட வரவேண்டுமா? அதனால் என்ன லாபம்?' என்ருன்.

'லாப நஷ்டம் பார்க்கும் பாரத்தை இன்றிருந்து நான் ஏற்றுக்கொள்ளுகிறேன். உங்களுக்கு ஆதரவு உள்ளவர்கள் இங்கே அதிகமில்லை. அது எனக்குத் தெரிந்துவிட்டது. இதைத் தவிர உங்களுடைய முகம் ராத்திரிக்குள் எப்படியாகிவிட்டது என்பது உங்களுக்குத் தெரியவில்லை. நான் பார்த்துக்கொண்டிருக்கிறேன். என்னை வெட்டிப் போட்டாலும் நான் உங்களை இங்கே தனியாக விட்டுவிட்டுப் போக முடியாது!' என்ருள்.

மஹிமின் மனத்திற்குள் ஒரு குழப்பம் ஏற்படலாயிற்று; ஆனால் அவன் உறுதியாக இருந்தான்.

'நீங்கள் ஏன் இவ்வளவு யோசிக்கிறீர்கள்? என் நகைகள் என்னவோ இருக்கின்றன. அதனால் மேற்கே எங்கேயாவது ஒரு சிறிய வீட்டைச் சுலபமாக வாங்க முடியும். எங்கே யிருந்தாலும் நீங்கள் எனக்குச் சாதம் போடாமல் பட்டினி போட்டுக் கொல்ல முடியாது. அதற்கு நீங்கள் முயற்சி செய்தே தீருவீர்கள். நான்தான் உங்களிடம் சொல்லிவிட்டேன். தங்கள் பாரம் இனிமேல் என்மீது இருக்கட்டும்' என்ருள்.

யது அருகே வந்து, 'பல்லக்குக் கொண்டுவரப் போகட்டுமா, அம்மா!' என்ருன்.

பதிலுக்காக அசலா ஆவல் நிறைந்த பார்வையுடன் கணவனின் முகத்தைப் பார்க்கலானுள். மஹிம் அதற்குப் பதிலொன்றும் சொல்லவில்லை. யதுவைப் பல்லக்குக் கொண்டு வர உத்தரவிட்டுவிட்டு, மனைவியிடம், 'ஆனால், நான் என்னவோ இப்பொழுது வர முடியாது!' என்ருன்.

இதைக் கேட்டு வர்ணிக்க முடியாத நிம்மதியாலும் திருப்தியாலும் அசலாவின் உள்ளம் நிரம்பியது. அவள்

ஹிருதயத்தின் துடிப்பைச் சமாளித்துக்கொண்டு, இயற்கையான தோற்றத்துடன், 'அது சரிதான், இப்பொழுது நீங்கள் வர முடியாது. ஆனால் சாயங்கால வண்டியில் கட்டாயம் வந்துவிடுகிறீர்களா, சொல்லுங்கள்? இல்லாவிட்டால் உங்களுக்காக நான் எதிர்பார்த்துக்கொண்டிருப்பேன். பிறகு —' என்றாள்.

ஆனால் அவளுடைய இந்த யோசனை மஹிமின் ஒரு நீண்ட பெருமூச்சினால் அணைந்துவிட்டது. அவள் வருத்தமடைந்து பயத்துடன், 'சாயங்காலம்கூட வர முடியாதா? பின்னே இந்த இருள் சூழ்ந்த இரவில் யார் வீட்டில்—' என்று சொல்லிக்கொண்டிருக்கும் பொழுதே அவள் குரல் தடைபட்டுவிட்டது. யார் வீட்டில் தன் கணவன் இரவைக் கழிக்கவேண்டுமோ அது ஞாபகம் வந்ததுமே, அவள் முகம் கம்பீரமும் வருத்தமும் அடைந்தது. அவளுடைய மனத்தில் உள்ளதை மஹிம் அறியவில்லையோ என்னவோ, அவன், 'கல்கத்தாவில் என்னை எங்கே வரச் சொல்லுகிறாய்?' என்றான்.

அசலா உடனே, 'என் அப்பாவிடம்!' என்றாள்.

மஹிம் தலையசைத்துவிட்டு, 'முடியாது!' என்றான்.

'முடியாவிட்டால் அங்கே நாலு ஐந்து நாட்கள் மாத்திரம் இருந்துவிட்டு நாம் மேற்கே போய்விடலாமே?'

'முடியாது.'

அவனுடைய தீர்மானத்திலிருந்து அவனை அசைப்பது முடியாத காரியம் என்பது அசலாவுக்குத் தெரியும். சிறிது நேரம் யோசித்துவிட்டு, 'சரி, வாருங்கள் நாம் மேற்கே ஏதாவது ஒரு நகரத்திற்குப் போகலாம். நான்கூட இருந்தால், தங்களுக்கு எங்கும், எந்தக் கஷ்டமும் ஏற்படாது அல்லவா? ஆனால் நகையை எப்படியும் விற்கவேண்டும்; கல்கத்தாவைத் தவிர வேறெங்கு முடியும்?' என்றாள்.

மஹிம் மறுபக்கம் பார்த்துக்கொண்டு பேசாமலிருந்தான். அசலா வியாகூலமடைந்த குரலுடன், 'மேற்கேகூடப் பெரிய நகரங்கள் இருக்கின்றன. அங்கேயும் விற்க முடியும் அல்லவா? என் பெட்டியில் குறைந்தது இருநூறு ரூபாயாவது இருக்கும். இப்பொழுது அதைக்கொண்டே போய்விட முடியுமல்லவா? ஏன் பேசாமல் இருக்கிறீர்கள்? சீக்கிரம் சொல்லுங்களேன்?' என்றாள்.

மஹிமனால் மனைவியுடைய கண்களின் பக்கம் பார்க்க முடியவில்லை. ஆனால் அவன், 'உன்னுடைய நகைகளை எடுத்துக்கொள்ள முடியாது, அசலா!' என்று பதில் சொன்னான்.

திடீரென்று ஒரு பலமான தாக்குதல் ஏற்பட்டு அசலா பின்னடைந்தாள். சிறிதுநேரம் பொறுத்து, 'ஏன் எடுத்துக்கொள்ள முடியாது?' என்றாள்.

மஹிம் அதற்குப் பதிலொன்றும் சொல்லவில்லை; சிறிது நேரம்வரை இருவரும் மௌனமாக நின்றனர். திடீரென்று அசலா ஒரேயடியாகப் பற்பல கேள்விகளைக் கேட்டுவிட்டாள். 'உலகத்தில் நீங்கள் ஒருவர்தான் கணவரா? ஆபத்துக் காலத்தில் அவர்கள் எப்படி எடுத்துக்கொள்கிறார்கள்? மனைவியின் நகைகள் எதற்காக இருக்கின்றன? பின்னே இவ்வளவு கஷ்டப்பட்டு இவைகளை எதற்காகக் காப்பாற்றினீர்கள்?' என்று சொல்லிக்கொண்டே, அவள் தன்னுடைய சிறிய தகரப் பெட்டியைக் கையால் தள்ளிவிட்டு, 'ஆபத்துக் காலத்தில் இவைகள் ஒன்றுக்கும் உபயோகப்படாவிட்டால் வீணாக இவைகளின் பாரத்தைச் சுமப்பதில் என்ன ஆகப் போகிறது? நெருப்பு இப்பொழுதும் எரிந்துகொண்டிருக்கிறது, அதில் போட்டுவிட்டு நான் நிம்மதியடைந்து செல்லுகிறேன். பிறகு உங்கள் மனதுக்கு எது இஷ்டமோ அப்படிச் செய்யுங்கள்!' என்று சொல்லித் தலைப்பினால் கண்களைத் துடைத்துக்கொண்டாள்.

இரண்டொரு நிமிஷம் கழித்து மஹிம் மெதுவாக, ' அசலா, நான் நன்ருக யோசனை செய்து பார்த்தேன். ஆனுல் நான் எந்தக் காரியத்தையும் ஆத்திரமடைந்து செய்வதில்லை; வேறொருவர் செய்வதையும் விரும்புவதில்லை என்பது உனக்குத் தெரியும். நீ கொடுக்க விரும்புவதை நான் என்னுடையதென்று எண்ணி எடுத்துக்கொள்ள முடியுமானுல் என் ஆனந்தத்திற்கு இன்று ஓர் எல்லை இருக்காது; ஆனுல் எவ்விதத்திலும் எடுத்துக்கொள்ள முடியாது. என்னுடைய துக்கத்தைப் பார்த்து உன்னைப் போல வேறொருவர்கூட இதைவிட அதிகமாகக் கொடுக்க விரும்பினுர். ஆனுல், அது தயை காரணமாகவே கிடைப்பதாக இருந்தது. இதுவும் அப்படித்தான். ஆனுல், இதனுல் உனக்கோ, அல்லது எனக்கோ, யாருக்கும் கடைசிவரை நன்மை ஏற்பட முடியாது என்பது என் நம்பிக்கை' என்ருன்.

அசலாவால் அப்பொழுது சகிக்க முடியவில்லை. அழுவதை மறந்து பிரதிவாதம் செய்வதற்காகத் தன்னுடைய கர்வம் நிறைந்த கண்களை மேலே தூக்கினுள். கணவனின் பார்வை வேறு பக்கம் இருந்தது. அதைத் தொடர்ந்து கவனித்ததும், சிறிது தூரத்திலுள்ள குளக்கரையில் வேப்பமரத்தின் கீழே, பெரிய திண்ணைமேல் தாடையில் கைவைத்துக்கொண்டு, ஸுரேசன் பேசாமல் ஆகாயத்தைப் பார்த்துக்கொண்டிருப்பது தென்பட்டது. அசலாவின் வாய் வார்த்தை வாயோடு நின்றுவிட்டது, நிமிர்ந்த தலை தானுகவே கீழே குனிந்தது.

ஆனுல், மஹிம் சலிப்புடன் தன் மனத்திற்குள், 'எனக்கு மாத்திரம் ஒருபொழுதும் சாந்தி கிடைக்காதென்பது அல்ல, உன்னை அடிக்கடி ஏமாற்றக்கூடிய சம்பந்தமே நம் இருவரிடையேயும் ஒரு பொழுதும் ஏற்படவில்லை' என்று எண்ணி, உரக்க, ' அசலா, ஒருவர் தன்னைக் காலி செய்து

கொண்டு தானம் செய்வதில் அநேக துக்கங்கள் இருக்கின்றன. ஆவேசத்தில் ஒருகால் ஒரு கணம் இம்மாதிரிச் செய்ய முடியும், ஆனால் வாழ்நாள் முழுதும் அதன் பலனை அநுபவிக்க வேண்டி யிருக்கும். ஒரு பிழையின் காரணமாக உன் மன வருத்தத்திற்கு ஒரு அளவில்லாமற் போகும் என்பதை நான் அறிவேன். பிறகு மீண்டும் ஒரு பிழை ஏற்பட்டால் நீயும் ஒருநாள் உன்னை மன்னித்துக்கொள்ள முடியாது, நானும் என்னை மன்னித்துக்கொள்ள முடியாது. இவ்வளவு துக்கத்தைச் சகித்துக்கொள்ளும் பான்மையும் உன்னிடம் இல்லை. இந்த விஷயத்தை நீ இன்று அறியாவிட்டாலும் இரண்டு தினங்களுக்குப் பின்பு அறிவாய். இதனால் நான் உன்னிடம் எதையும் ஏற்றுக்கொள்ள முடியாது!' என்றான்.

வார்த்தை அசலாவின் உள்ளத்தில் சென்று தைத்தது. கணவனின் பார்வையில் அவள் எவ்வளவு அந்நியமானவள் என்பதை அன்று அறிந்த அளவு அதற்கு முன் ஒரு பொழுதும் அவள் அறிந்ததில்லை. அதன் கூடவே மிருணாளினியின் ஞாபகம் வந்ததால், அவள் கோபத்தால் பொங்கி நிறைந்தாள். அவளும் கடுமையடைந்து, ' நீங்கள் இதுவரை யோசித்துக் கொண்டிருப்பதை நான் அறிவேன். ஒருகால் உங்கள் வார்த்தையே உண்மையாகி, உங்கள் முகம் பார்த்து, தயை வந்ததனாலேயே நான் என்னுடைய தெல்லாவற்றையும் உங்களுக்குக் கொடுக்க விரும்பினேன், இரண்டு நாட்களுக்குப் பிறகு நான் இதற்காக வருந்த வேண்டியிருக்கும் என்பது சரிதான் என்று வைத்துக்கொள்வோம். ஆனால், கேளுங்கள், பிறர் மனத்திலுள்ள விஷயத்தை அறிவதில் நீங்கள் எவ்வளவு புத்தியுள்ளவராக வேண்டுமானாலும் இருக்கலாம். உங்களுக்கு அறிவுறுத்த ஏற்றதான வார்த்தைகளும் இருக்கின்றன. மனைவியின் பொருளையும் பலவந்தமாக எடுத்துக்கொள்ளும் விஷயம் இருக்கட்டும். கை நீட்டி வாங்கிக்

கொள்ளக்கூடிய யோக்கியதையாவது உங்களிடமிருக்கிறதா? இனி நான் உங்களிடம் விவாதிக்க விரும்பவில்லை. இவ்வளவு விவேக புத்தியாவது உங்களிடம் மிஞ்சியிருக்கிறதே, இன்று இதுவே எனக்கு ஆறுதல். ஆனால் நான் எங்கிருந்தாலும் ஒரு நாள் இல்லாவிட்டால் ஒரு நாள் எல்லா விஷயங்களையும் அறிந்தே ஆகவேண்டும். நிச்சயம் அறிந்தாகவேண்டும்!' என்று சொல்லிவிட்டு, அவள் கையினால் தன் வாயைப் பொத்திக்கொண்டு தன் அழுகையைத் தடுத்தாள்.

ஒன்பது மணி வண்டியில் ஸுரேசன் வீட்டுக்குத் திரும்பிக்கொண்டிருந்தான். முந்திய இரவு நடந்த அக்னி காண்டம் அவனை என்னவோ செய்துவிட்டது. யாரிடமும் பேசக்கூட அவனுக்குச் சக்தியில்லை. வண்டி வர இன்னும் நேரமிருந்தது. ஸுரேசன் ஸ்டேஷனில் மஹிமை ஒரு பக்கமாக அழைத்துச் சென்று சற்று நேரம் சும்மாயிருந்து, 'மஹிம், நெருப்புப் பிடித்த விஷயமாக என்னிடம் உனக்குச் சந்தேகம் ஒன்றுமில்லையே?' என்று கேட்டான்.

மஹிம் அவனுடைய இரு கைகளையும் பலமாகப் பற்றி, 'சீ!' என்றுதான் சொன்னான்.

ஸுரேசனுக்கு இரு கண்களிலும் கண்ணீர் வந்துவிட்டது. தழுதழுத்த குரலில், 'நேற்றிருந்து இந்தப் பயத்தினால் எனக்குச் சற்றுக்கூட நிம்மதியில்லை, மஹிம்!' என்றான்.

மஹிம் பேசாமல் அவன் கையை மாத்திரம் அழுத்தினான்.

'ஸுரேஷ், ஒரு உண்மையான குற்றம் பல பொய்க் குற்றங்களின் சுமையைச் சுமத்திவிடுகிறது. ஆனால் ரொம்பத் துக்கமடைந்த பிறகு, நீ எதை வேண்டுமானாலும் செய்யலாம்; ஆனால் ஒழுக்கத்தைப் பாதிக்கும் குற்றம் எதையும் நீ ஒருபொழுதும் செய்ய முடியாது. அவ்வளவு நம்பிக்கை எனக்கு இப்பொழுதும் இருக்கிறது — ஸுரேஷ், நீ என்

னமோ கடவுளை மதிப்பதில்லை; ஆனால் உண்மையில் அவரை நம்புகிறவர்கள் இரவு பகல் அவர்களுடைய நம்பிக்கையை அவர் வீண்செய்ய வேண்டாம் என்று பிரார்த்திக்கிறார்கள்!' என்றான்.

இதற்குள் வண்டி வந்துவிட்டது. ஸ்திரீகள் வண்டியில் அசலாவையும் அவள் வேலைக்காரியையும் ஏற்றிவிட்டு, மஹிம் ஸுரேசன் அருகில் வந்தபோது, அவன் ஜன்னல் வழியாகக் கைநீட்டி மஹிமின் கைகளைப் பிடித்துக்கொண்டு, 'நேற்றிலிருந்து உன்னுடைய நஷ்டத்தை ஈடுசெய்ய என்னுடைய பிரார்த்தனையை நீ எவ்விதத்திலும் ஏற்றுக் கொள்ளவில்லை. போகட்டும், ஆனால் உன்னுடைய கடவுள் உன் பிரார்த்தனையை நிச்சயம் அங்கீகரிப்பார், அப்பா! என்னை இப்பொழுது அவர் சிரமப்படுத்தமாட்டார்!' என்று சொல்லி, கையை விட்டுவிட்டு, முகத்தைத் திருப்பிக்கொண்டு உட்கார்ந்தான்.

அங்கே ஜன்னல் வழியாகத் தலையை நீட்டி யதுவிடம் அசலா சும்மா ஏதோ பேசிக்கொண்டிருந்தாள்; மஹிம் அருகே வந்ததும் அவள், 'மிருணாளினி அக்காவின் கணவர் இன்று இறந்துவிட்டாராமே?' என்று கேட்டாள்.

மஹிம் தலையசைத்துவிட்டு, 'ஆமாம், ஒருமணி நேரத்திற்கு முன் இறந்ததாகக் கேள்விப்பட்டேன்!' என்றான்.

'பத்துப் பதினைந்து நாட்களாக நிமோனியாவுடன் படுத்திருந்தார். இந்தத் தகவலைக்கூட எனக்குச் சொல்வது அவசியமென்று நினைக்கவில்லையா நீங்கள்?' என்றாள்.

மஹிம் பதில் சொல்ல விரும்பினான். ஆனால், விஷயத்தை எப்படிக் கூட்டிச் சொல்வது என்பதை யோசித்துக்கொண்டிருக்கும்பொழுதே, வண்டி ஊதியது. ரயிலும் புறப்பட்டுவிட்டது.

# XXI

கேதார் பாபு இன்னும் முன் போல் சௌஸ்தம் அடையவில்லை. ஸ்நானம் செய்து சாப்பிட்டுவிட்டு வெளித் தாழ்வாரத்தில் ஒரு ஈஸிச்சேரில் படுத்துக்கொண்டு பத்திரிகையைப் படித்துக்கொண்டிருக்கும் பொழுதே, கண்ணைத் திருப்பிய பொழுது, வாடகைக் குதிரை வண்டி ஒன்று வாசலில் வந்து நின்றது. பார்த்தால் ஸுரேசனும், அவனுடன் தன் பெண்ணும் வேலைக்காரியும் இறங்கிக்கொண்டிருக்கிறார்கள்! அவருடைய நினைவு கலைந்தது. அறிய முடியாத ஒரு சந்தேகத்தால் பயந்து எழுந்து உட்கார்ந்து, தலையை முன்னால் நீட்டி, உரக்க, 'அசலா! ஸுரேஷ்! நீங்கள் எங்கிருந்து வருகிறீர்கள்? வேலைக்காரி, என்ன விஷயம்? இவைகள் எல்லாம் என்ன காரியம்? எனக்கு ஒன்றும் விளங்கவில்லையே!' என்றார்.

அசலா மேலே வந்து தந்தையின் பாதங்களைத் தொட்டாள். ஸுரேசன் நமஸ்காரம் செய்து, 'மஹிமின் தந்தி கிடைக்கவில்லையா?' என்றான்.

கேதார் பாபு கவலை நிறைந்த முகத்துடன், 'இல்லையே!' என்றார்.

ஸுரேசன் ஒரு நாற்காலியை இழுத்துப் போட்டுக்கொண்டு, 'ஒன்று தந்தி அடிக்க அவன் மறந்திருக்க வேண்டும், — இல்லையானால் இதுவரை கிடைத்திருக்காது!' என்றான்.

'தந்தி யிருக்கட்டும், விஷய மென்ன, அதைச் சொல்லு முதலில்! நீ இவர்களை எங்கிருந்து அழைத்து வருகிறாய்?' என்றார் கேதார் பாபு.

'நேற்றிரவு நெருப்புப் பிடித்ததால் மஹிமின் வீடு எரிந்துவிட்டது!'

'வீடு எரிந்துவிட்டதா! நாசமாய்விட்டதா! என்ன சொல்லுகிறாய், வீடு எரிந்துவிட்டதா? எப்படி எரிந்தது? மஹிம் எங்கே? உனக்கு இவர்கள் எங்கே கிடைத்தார்கள்?' என்று ஒரே மூச்சில் இத்தனை கேள்விகளையும் கேட்டுவிட்டு, தடாரென்று தம் நாற்காலியில் உட்கார்ந்தார் கேதார் பாபு.

'இவர்களை அங்கிருந்துதான் அழைத்து வருகிறேன். நான் அங்கு இருந்தேன் அல்லவா!' என்றான் ஸுரேசன்.

கேதார் பாபுவின் முகம் கோபமும் கம்பீரமும் அடைந்தது. 'நீ அங்கிருந்தாயா? எப்பொழுது சென்றாய்? எனக்கொன்றும் தெரியாதே! ஆனால் அவன் எங்கே?' என்றார்.

'மஹிம் தான் வர முடியவில்லை, ஆகையால் —'

கேதார் பாபுவின் முகத்தில் இருள் படர்ந்தது. தலையை அசைத்துவிட்டு, 'இல்லை, இல்லை, இது சரியல்ல. ரொம்பக் கெட்ட விஷயம். கட்டுப்பாட்டிற்கு விரோதம். இவைகளை யெல்லாம் நான் ஒருபொழுதும்—' என்று சொல்லிக் கொண்டிருக்கும் போதே தலை நிமிர்ந்து மகளின் பக்கம் பார்க்கலானார்.

அசலா அதுவரை ஒரு நாற்காலியின் முதுகின்மேல் கையை வைத்துக்கொண்டு பேசாமல் நின்றிருந்தாள். தந்தையின் இந்தச் சந்தேகம் அவள் உள்ளத்தில் சென்று தைத்தது. திடீரென்று நேர்ந்த அவளுடைய இந்த வருகையின் காரணத்தில் அவருக்குச் சிறிதுகூட நம்பிக்கை ஏற்படவில்லை என்ற விஷயத்தை நன்றாக உணர்ந்து, வெட்கத்தாலும், வெறுப்பினாலும் அவள் முகம் வெளுத்தது.

கேதார் பாபு அங்கே தவறுதல் செய்தார். மகளின் முகத் தோற்றத்தைக் கண்டு அவருடைய சந்தேகம் இன்னும் பலப்பட்டது. அவர் நாற்காலியில் சாய்ந்து படுத்து, முகத்தின் முன் பத்திரிகையை வைத்துக்கொண்டு, முனகலுடன் பெருமூச்சு விட்ட வண்ணம், 'உங்களுக்கு எது சரியென்று படுகிறதோ அதைச் செய்யுங்கள், நான் நாளைக்கே இந்த வீட்டை விட்டு எங்கேயாவது போய்விடு கிறேன்!' என்றார்.

ஸுரேசன் கோபமும் ஆச்சரியமும் அடைந்து, 'கேதார் பாபு, இதென்ன சொல்லிக்கொண்டிருக்கிறீர்கள்? ஏன் நீங்கள் வீட்டை விட்டுப் போகவேண்டும்? ஏன் — என்ன, என்ன நடந்திருக்கிறது?' என்று சொல்லி, அசலாவின் பக்கமும், அவள் தந்தையின் பக்கமும் பார்க்கலானான். ஆனால் யாருடைய முகமும் அவனுக்குத் தென்படவில்லை.

கேதார் பாபுவிடமிருந்து பதிலொன்றும் பெறாமல் அவன் எழுந்து நின்று, 'போகட்டும், என்னிடம் மஹிம் எந்தப் பாரத்தைக் கொடுத்தானோ அதை நான் வகித்துவிட்டேன். இப்பொழுது உங்களுக்கு எது சரியென்று தோன்றுகிறதோ அதை நீங்கள் செய்யுங்கள். நான் இன்னும் ஸ்நானம் செய்து சாப்பிடவில்லை. வீட்டுக்குப் போகிறேன்!' என்று சொல்லிக் கதவின் பக்கம் போனானோ இல்லையோ, கேதார் பாபு எழுந்து உட்கார்ந்து, சலிப்பான குரலில், 'அடேடே, ஏன் அப்பா போகிறாய்? விஷய மென்ன கேட்போம். நெருப்பு எப்படிப் பிடித்தது?' என்றார்.

ஸுரேசன் கோபமான குரலில், 'அது தெரியாது!' என்றான்.

'நீ அங்கு எப்பொழுது போனாய்?'

'ஐந்தாறு நாட்களுக்கு முன். நான் இன்னும் சாப்பிடவில்லை. இனித் தாமதிக்க முடியாது!' என்று சொல்லி

மறுபடியும் ஸுரேசன் புறப்படத் தயாரானான். இதற்குள் கேதார் பாபு, 'ஸ்நானம் சாப்பாடு உங்களில் யாருக்குமே இன்னும் ஆகவில்லை என்பதைக் காண்கிறேனே — ஆனால் இதுவும் வீடுதான். இங்கும் வேலைக்காரர்கள் இருக்கிறார்கள். அசலா, சமையல்காரனைச் சற்று கூப்பிடுவதுதானே! ஏன் நின்றுவிட்டாய்? உட்காரு ஸுரேஷ், என்ன நடந்தது? எல்லாவற்றையும் விட்டுச் சொல்லு, கேட்போம்!' என்றார்.

ஸுரேசன் திரும்பி உட்கார்ந்தான். சிறிது பொறுத்து, 'இரவு தூங்கிக்கொண்டிருந்தேன். மஹிமின் கூச்சல் கேட்டு அறையிலிருந்து வெளியே வந்து பார்க்கும்பொழுது எல்லாம் ஹோவென்று எரிந்துகொண்டிருந்தது! கூரை வீடு, அணைப்பதற்கு வழி ஒன்றுமில்லை, அதற்கு யாரும் முயற்சிக்கவும் இல்லை — எல்லாம் எரிந்து சாம்பலாய்விட்டது. போதுமா? வேறென்ன?' என்றான்.

கேதார் பாபு ஒரு துடி துடித்தார். 'என்ன அப்பா சொல்லுகிறாய்! எல்லாம் எரிந்துவிட்டதா? ஒன்றையும் காப்பாற்ற முடியவில்லையா? அசலாவின் நகைகள்?' என்றார்.

'அவைகளை யெல்லாம் காப்பாற்றியாகிவிட்டது.'

'காப்பாற்றிவிட்டால் சரி!' என்று சொல்லி, கேதார் பாபு ஒரு நீண்ட பெருமூச்சு விட்டுக்கொண்டு, நாற்காலியில் சரியாக உட்கார்ந்தார். சிறிது நேரம் சும்மா இருந்துவிட்டு, 'ஆனால் நெருப்பு எப்படிப் பிடித்தது?' என்றார்.

'அதன் தகவல் தெரியவில்லை யென்று இப்பொழுது தானே உங்களிடம் சொன்னேன்? ஆனால் இது மாத்திரம் தெரியும். கிராமத்தில் அவனிடம் நல்லெண்ணம் உள்ளவர்கள் ஒருவருமில்லை' என்றான் ஸுரேசன்.

'ஒருவருமில்லையா?'

'இல்லை.'

கேதார் பாபு பிறகு ஒன்றும் பேசவில்லை. வெகு நேரம் வரை பேசாமல் வெளியே பார்த்துக்கொண்டிருந்தார். கடைசியில் ஒரு பெருமூச்சு விட்டுக்கொண்டு எழுந்து நின்று, 'போ, ஸுரேஷ்! நீ ஸ்நானம் செய்துவிட்டு வா! இனித் தாமதம் செய்யாதே. பார்க்கிறேன், சமையலுக்கு என்ன ஏற்பாடு ஆகியிருக்கிறது என்று' என்று சொல்லி, ஸுரேசனை அழைத்துக்கொண்டு அவர் வெளியே சென்றார்.

ஸ்நானம் சாப்பாடு ஆன பிறகும்கூட ஸுரேசனுக்கு அவர் விடுதலை அளிக்கவில்லை. அவன் ஒரு நாற்காலியில் படுத்து அரைத் தூக்கத்திலிருந்தான். அசலா தன் அறைக்குள் சென்று கதவைத் தாளிட்டுக்கொண்டாள். பிறகு அவள் சத்தமே கேட்கவில்லை. கேதார் பாபு ஒருவருக்குத் தான் சிரம பரிகாரமில்லை. வந்தாலும் பல்லில்லாத தந்திக்காக அவர் காத்துக்கொண்டிருந்தார்; அந்தச் சாக்கில் சாயங்காலத்தில் தூங்குவது சரியல்ல என்று தம் மகளைக் கூப்பிட்டு அனுப்பினார்.

அசலா வந்ததுமே முதலில் இதைத்தான் கேட்டார். 'மஹிம் தந்தி கொடுத்தான் என்று சொன்னீர்களே, அது எங்கே? தந்தி கிந்தி ஒன்றும் வரவில்லையே! நீங்கள் ரயிலில் வந்துவிட்டீர்கள்; இன்னும் தந்தியைப் பற்றி ஒரு தகவலுமில்லை! சரி கொஞ்சம் இரு, பார்க்கிறேன்!' என்று சொல்லிக்கொண்டே, மகளின் பதிலைக் கேட்காமல், செருப்பை மாட்டிக்கொண்டு வேகமாக வெளியே சென்றார். ஒரு க்ஷணத்திற் கெல்லாம் கீழேயிருந்து அவருடைய ஆத்திரமடைந்த குரல் கேட்டது. அசலாவின் வேலைக்காரியிடம் அவர் விதவிதமான கேள்விகளைப் போட்டுக்கொண்டிருந்தார். அவள் ஆச்சரியமடைந்து, திரும்பத் திரும்ப எதிர்வாதம் செய்து பதிலளித்துக்கொண்டிருந்தாள். 'அது

எப்படி பாபுஜி! நெருப்புப் பற்றி வீடு வாசல்களெல்லாம் எரிந்து சாம்பலாகிவிட்டது! என் கண்ணால் பார்த்துவிட்டு வந்திருக்கிறேன் நான். நீங்கள் நெருப்புப் பிடிக்கவில்லை என்று சொல்லுகிறீர்கள்! நெருப்புப் பிடிக்காவிட்டால் வீடு எப்படி எரிந்து சாம்பலாகும்? கொஞ்சம் யோசித்துப் பாருங்களேன்!' என்று சொல்லிக்கொண்டிருந்தாள்.

ஸுரேசன் எல்லாவற்றையும் கேட்டுக்கொண்டிருந்தான்; தலை நிமிர்ந்து பார்த்தான். அசலா வாசற்படியில் சாய்ந்து நின்றுகொண்டு வெளுத்த முகத்துடன் காது கொடுத்து ஒவ்வொரு வார்த்தையையும் கேட்டுக்கொண்டிருந்தாள். ஸுரேசன் பரிகாசமாக, 'உன் அப்பாவுக்கு என்ன ஆகிவிட்டது, சொல்ல முடியுமா?' என்றான்.

அசலா திடுக்கிட்டாள். அவன் பக்கம் திரும்பி, 'இல்லை!' என்றாள்.

'நான் நிச்சயமாகச் சொல்லுகிறேன். உன் தந்தைக்கு நம்பிக்கை ஏற்படவில்லை. நெருப்புப் பிடித்தது என்பது நம்முடைய கட்டுக் கதை என்பதாக அவர் அபிப்பிராயம். பிறகு உண்மையும் பொய்யும் ஒரு நாள் தெரிந்துவிடப் போகிறது; ஆனால் நான் இங்கே வந்தது முற்றிலும் பிசகு என்று அவருடைய எண்ணம்' என்றான்.

அசலா வரண்ட முகத்துடன், 'தாங்கள் இனி இங்கே வரமாட்டீர்களா?' என்றாள்.

ஸுரேசன் எழுந்து நின்று, 'ஒருகால் முடியாமல் இருக்கலாம். எனக்கும் கொஞ்சம் சுயமரியாதைப் புத்தியிருக்கிறது. யாரிடமாவது என் சூட்கேஸை அனுப்பிவிடு!' என்றான்.

அசலா தலையை அசைத்து, 'சரி' என்றாள். ஆனால் அவன் அங்கு வருவது வராததைப் பற்றி அவள் ஒன்றும் சொல்லவில்லை.

'ஆனால் நாளைக்கே அனுப்பிவிடு. ரொம்ப அவசியமான சாமான்கள் அதில் இருக்கின்றன!' என்று சொல்லி, கேதார் பாபுவுக்காகக் காத்திராமல் அவன் போய்விட்டான்.

கேதார் பாபு திரும்பி வந்ததும் அவருக்குச் சற்று ஆச்சரியம் உண்டாயிற்று; ஆனால் மனத்திற்குள் கோபமடைந்தாரா என்றால், அப்படித் தோன்றவில்லை.

இரவு வெகு நேரம்வரை அசலா படுக்கையில் படுத்துத் துடித்துக்கொண்டிருந்தாள். கடைசியில் எழுந்து உட்கார்ந்தாள். வெளித் தாழ்வாரத்தில் சென்று நின்று எதிரேயுள்ள சாலையில் போய்க்கொண்டிருக்கும் வழிப்போக்கர்களைச் சற்று நேரம் பார்த்து மனத்தை மாற்றிக்கொள்ளலாம் என்பது அவள் எண்ணம். தன் அறையின் தாழ்வாரக் கதவைத் திறந்துகொண்டு தாழ்வாரத்திற்கு வந்தாள். அங்கிருந்து கூடத்தில் அப்பொழுதும் விளக்கெரிந்துகொண்டிருப்பதைப் பார்த்தாள். முதலில் வேலைக்காரர்கள் விளக்கை அணைக்க மறந்துவிட்டார்கள் என்று நினைத்தாள்; ஆனால் சில அடிகள் முன்னால் சென்ற பிறகு உள்ளேயிருந்து தன் தந்தையின் குரல் கேட்டதும் அவள் ஆச்சரியத்திற்கு ஓர் அளவேயில்லை. எப்பொழுதும் அவர் பத்தடித்ததும் அடிக்காததுமாய்த் தூங்கச் சென்றுவிடுவார்; ஆனால் அன்று பத்தரை மணி ஆகிவிட்டது. அடுத்த க்ஷணம் வேலைக்காரியின் குரல் கேட்டது. அவள், 'இப்பொழுது மிருணாளினி அக்காவின் கணவர் இறந்துவிட்டார்; அவள் மாமியார் வீட்டில் சரியாக இருந்தாள், அப்படி எனக்கு ஒன்றும் தெரியாது, பாபு! மாப்பிள்ளை பாபுவுடன் அவளுக்கு என்னவிதமான சம்பந்தம் என்பது அவருக்குத்தான் தெரியும்!' என்று சொல்லிக்கொண்டிருந்தாள்.

அதற்குப் பதிலாகக் கேதார் பாபு, 'ஹூம்' என்று மாத்திரம் சொல்லிச் சும்மா இருந்துவிட்டார்.

அதற்கு முன்பு அநேகம் பேச்சுக்கள் நடந்திருக்கின்றன என்று அசலா அறிந்துகொண்டாள். மிருணாளினியின் விஷயம், மஹிமின் விஷயம், தன்னைப்பற்றி—ஒன்றும் பாக்கியில்லை. ஆனால் எங்கே தன்னைப் பற்றியே ஏதாவது கேட்கத் தகாத வார்த்தை தன் காதில் விழுந்துவிடப் போகிறதோ என்ற பயத்தினால், அவள் பேசாமல் வந்தபடியே திரும்பிப் போக எண்ணினாள். ஆனால் எப்படி அவள் கால்கள் இரும்பு விலங்குகள் பூட்டினவை போல் ஆகிவிட்டன என்பது தெரியவில்லை.

கேதார் பாபு சற்று நேரம் சும்மா யிருந்துவிட்டு, 'ஆனால் இருவருக்கும் ஒத்துக்கொள்ளவில்லை, அப்படிச் சொல்லு!' என்றார்.

'கொஞ்சம் கூட இல்லை, பாபுஜி, கொஞ்சம்கூட இல்லை. ஒரு நாள்கூட ஒத்துக்கொள்ளவில்லை!' என்றாள் வேலைக்காரி.

இந்த வேலைக்காரியை அசலா இதுவரை முட்டாளென்று எண்ணிக்கொண்டிருந்தாள்; அவள் புத்தி யாருடையதிலும் குறைந்ததன்று என்பதை இன்று கண்டாள்.

கேதார் பாபு மறுபடி ஒரு நிமிஷம் சும்மா யிருந்துவிட்டு, 'ஆனால் நேற்றிரவு யாரும் சாப்பிடக்கூட இல்லை என்று சொல்லு! ஸுரேசன் வந்த பிறகு ஒருவிதமாகச் சண்டை சச்சரவுகளிலேயே நாள் கழிந்து வந்ததா?' என்றார்.

வேலைக்காரியின் பதில் என்னவோ கேட்கவில்லை; ஆனால் தந்தையின் வாய் வார்த்தையிலிருந்து, அவள் தலையை அசைத்து அப்படி அபிப்பிராயம் கொடுத்திருப்பாள் என்பதை அறிந்துகொண்டாள். காரணம், அடுத்த க்ஷணமே கேதார் பாபு ஒரு பெருமூச்சு விட்டுக்கொண்டு, 'ஒரு நாள் இது மாதிரி நடக்கும் என்பதை நான் முன்பே அறிவேன்.

இந்தக் காலத்தில் பிள்ளைகள் பெண்கள் தாய் தந்தையரின் வார்த்தையைக் கேட்பதில்லை; இல்லாவிட்டால் நான் எல்லாவற்றையும் ஒருவிதமாக ஒழுங்கு செய்து வைத்திருந்தேனே! அம் மாதிரி நடந்திருந்தால் இன்று அவளுக்குக் கவலை என்ன?' என்று சொல்லி மறுபடியும் அவர் ஒரு பெருமூச்சு விட்டது நன்றாகக் கேட்டது.

வேலைக்காரி பூர்ணமான அநுதாபத்துடன் கூடவே, 'நன்றாகச் சொன்னீர்கள், பாபுஜி! இன்று அவர்களுக்கு என்ன கவலை? எங்கோ பட்டிக்காட்டில் ஒரு கூரை வீடு—அதுவுமில்லை! மாப்பிள்ளை பாபுவோ—' என்று சொல்லி வார்த்தையை முடிக்காமலே ஒரு பெருமூச்சு விட்டுக்கொண்டாள்.

'தலையெழுத்து!' என்று சொல்லி, கேதார் பாபு இரண்டு நிமிஷம் மௌனமாக இருந்துவிட்டு, எழுந்து நின்றார். 'சரி, நீ போ!' என்று சொல்லி அவளை விடை கொடுத்து அனுப்பி விட்டு, விளக்கை அணைக்க வேலைக்காரனைக் கூப்பிடலானார்.

அசலா மெள்ள அடி வைத்துக்கொண்டு தயக்கத்துடன் தன் அறைக்குச் சென்று படுக்கையில் படுத்தாள். தந்தையின் உதார குணம், பெருந்தன்மையான எண்ணம் இவைகளைப் பற்றி அசலாவுக்கு முன்பு எப்பொழுதுமே சந்தேகம் கிடையாது; ஆனால் அவர் வீட்டின் ஒரு வேலைக்காரியுடன் தனிமையாக யோசனை செய்யும் துச்சமான காரியத்தைச் செய்வார் என்பதை அவள் ஒருபொழுதும் எண்ணியதில்லை. அன்று அவளுடைய மனம் குன்றி, புழுதியில் புரண்டு மாசடைந்தது,—ஆனால் அவளுடைய தந்தை, வேலைக்காரி, பந்து எல்லோரும் அதே மாதிரிப் புழுதியில் விழும்போது அவள் யாருடைய சகாயத்தைக் கொண்டு இந்தப் புழுதிப் படுக்கையிலிருந்து எழுந்து நிற்க முடியும்? இந்த நம்பிக்கையை அவளால் கற்பனைகூடச் செய்ய முடியவில்லை.

## XXII

உலகத்தில் குணம், தோஷம் இரண்டும் உள்ள சாதாரண மனிதர்களைச் சேர்ந்தவர் கேதார் பாபு. பெண்ணின் விவாக விஷயத்தில் மாப்பிள்ளை பட்டம் பெற்றவனாக இருக்கவேண்டும் என்பதைத்தான் விரும்பினார். மஹிம் நல்ல பையன். எம். ஏ. படித்திருந்தான். ஊரிலும் ஏதோ கொஞ்சம் ஸ்திதி இருந்தது. அவன் கையில் தம் மகளை ஒப்புவிப்பது பாக்கியம் என்றேதான் கருதினார். ஆனால் திடீரென்று அவனுடைய பணக்கார நண்பன் ஸுரேசன், ஒரு நாள் தன் வண்டியில் அவர் வீட்டுக்கு வந்து, அதற்கு நேர் விரோதமான தகவலைச் சொல்லி, தானே மாப்பிள்ளையாவதற்கு ஏற்பாடு செய்த பொழுது இரு மித்திரர்களுடைய பொருளாதார நிறைவையும் கணக்கிட்டு, மஹிமை விலக்கக் கேதார் பாபுவுக்கு யாதொரு தடையும் ஏற்படவில்லை. காதலின் சூட்சுமத் தத்துவத்திற்கு அவர் அவ்வளவு மதிப்புக் கொடுப்பதில்லை; ஸ்திரீகள் பணம் காசு, வீடு வாசல், ஆடை ஆபரணங்கள் இவைகளுடன் எங்கே சுகமாக இருக்கலாமோ அம்மாதிரியான இடத்தைத்தான் தேடுகிறார்கள் என்பது அவர் அபிப்பிராயம். பெண்ணைச் சுகப்படுத்துவதே தந்தையின் கடமை என்றால், வலுவில் வந்திருக்கும் அந்த அரிய சந்தர்ப்பத்தை எவ்விதத்திலும் கைவிட வேண்டியதில்லை என்ற விஷயத்தைத் தீர்மானிக்க அவருக்கு அதிக யோசனை செய்யவேண்டி ஏற்படவில்லை.

பணக்கார மாப்பிள்ளையிடம் கடன் என்ற சாக்கில் விவாகத்திற்கு முன்னமேயே ஐயாயிர ரூபாய் வாங்கினதைக்கூட அவர் தவறென்று எண்ணவில்லை; எப்பொழுது வீடு அவர்களுடையதாக இருக்கப் போகிறதோ அப்பொழுது கடனைத் தீர்க்கவேண்டும் என்ற கவலைகூட அவருக்கு உண்டாகவில்லை.

ஆனால் அதிர்ஷ்டக் கட்டையான பெண் எல்லாவற்றையும் வீணாக்கிவிட்டாள். எவ்விதத்திலும் அவள் இதற்கு ஒப்புக்கொள்ளவில்லை. ஆகையால் கடைசியில் அவர் மஹிமிடமே தம் மகளை ஒப்புவிக்க வேண்டியிருந்தது. ஆயினும் அந்த விபரீத நிகழ்ச்சியால் அவருக்கு ஏற்பட்ட துக்கத்திற்கு ஓர் அளவில்லை. இதைத் தவிர, எந்த வார்த்தையை அவர் தமக்குத் தாமே ஒப்புக்கொள்ள வேண்டியிருந்ததோ அது ஸுரேசனுக்கு ரூபாயைத் திருப்பிக் கொடுக்கவேண்டும் என்பதுதான். ஆனால் ஒன்று, அதற்கு எழுத்து மூலமாக ஒன்றுமில்லை. இரண்டாவது, வழக்குத் தொடரும் வழியும் முற்றிலும் தெளிவில்லாததால், இந்தக் கவலையையும் அவர் தம் ஹிருதயத்திலிருந்து தூர விலக்கிவிட்டார். ஆகையால் இந்தக் கேள்வி மனத்தில் எழுந்தாலும் பதில் குழப்பம் குழப்பமாகவே இருந்தது.

பிறகு அசலா புக்ககம் சென்றாள். அதன் பிறகு ஸுரேசன் போக்கு வரத்து, அவன் நட்பு முதலியவை கேதார் பாபுவுக்குப் பிடிக்கவில்லை. 'வீட்டிலில்லை' என்று சாக்குச் சொல்லி, அவர் அவனைச் சந்திப்பதுகூட இல்லை. ஆனால் மகளின் கெட்ட நடத்தையால், அவர் தம் மனத்திற்குள் ரொம்ப வெட்கமும் துக்கமும் அடைந்திருந்தார்.

இவ்விதமாக நாட்கள் கழிந்துகொண்டிருந்தன. இதன் மத்தியில் திடீரென்று அவர் நோய்வாய்ப் பட்டார். ஸுரேசன் வந்து அவருக்கு வைத்தியம் செய்தான், புத்திரனைவிட

அதிகச் சேவை செய்து அவரைச் சுகப்படுத்தினான். அவரே கடனைப் பற்றிப் பேசிய போது, ஸுரேசன், அது நண்பன் வரதட்சணைக்குச் சரியாகிவிட்டது என்று விளையாட்டாகச் சொல்லிவிட்டான். அன்றையிலிருந்து அந்த வாலிபன் பேரில் அவருடைய அன்பு நாளுக்கு நாள் பெருகி வளர்ந்து வந்தது. அபாக்கியவதி இம்மாதிரி ரத்தினத்தை அறியவில்லை, அசட்டை செய்து விட்டுவிட்டாள், ஒரு நாள் இல்லா விட்டால் ஒரு நாள் அவள் இதன் பலனை அநுபவிக்க வேண்டி வரும் என்று தம் மகளுக்குச் சிற்சில சமயம் சாபம் கூடக் கொடுத்தார்.

இந்த விதமாக மஹிம்கூட அவர் கண்ணுக்கு முள்ளானான். பெண், ஸ்திரீ தர்மத்திற்கு விரோதமாகக் கணவனை விட்டுவிட்டு, முகத்தில் கரியைப் பூசிக்கொண்டு, தம் வீட்டுக்குத் திரும்பி வருவாள் என்று அவர் ஒருபொழுதும் கனவில் கூட எண்ணவில்லை; மேலும் அந்தப் பாவத்திற்குச் சகாயம் செய்கிறவன், எவ்வளவு பெரியவனாக வேண்டுமானாலும் இருக்கட்டும், தந்தையின் மனோபாவம் அவனுக்கு எதிரிடையாக எப்படியும் முரண்படும் — இதை அநுமானம் செய்வது கடினமல்ல.

மற்றொரு புறம் தந்தையைப் பற்றி மகளின் மனோபாவம் முதலில் எப்படி வேண்டுமானாலும் இருந்திருக்கட்டும். ஆனால், என்று பண ஆசையால் மஹிமை விட்டுவிட்டு ஸுரேசனுக்குத் தன்னைக் கொடுக்க நிச்சயித்தாரோ, தீர்ப்பதற்கு வழியில்லாமல் விருந்தும் அவனிடமிருந்து ரூபாய் கடன் வாங்கினாரோ அன்றைத் தினத்திலிருந்தே மனித சுபாவ முறையில் கேதார் பாபு அசலாவின் பார்வையில் ரொம்பக் கீழே இறங்கிவிட்டார். அந்த அபிப்பிராயம் முந்தின இரவு அவர் தம் மகளின் நடத்தை விஷயமாக ஒளிந்து ஒளிந்து வேலைக்காரியிடம் அபிப்பிராயம்

கேட்கக்கூடக் கூசாமல் இருந்த பொழுது பன்மடங்கு அதி கரித்தது.

ஆனால் அத்துடன் கூடவே அசலா இன்று தன்னைக் கூடப் பார்த்துக்கொள்ள முடிந்தது. தானே தன் கணவனிடம், 'நான் உங்களைக் காதலிக்கவில்லை' என்று சொன்னவுடனேயே, பெண்ணுக்குரிய சர்வோத்தமமான மரியாதை கூட உலகிலிருந்து அவளுக்குப் போய்விட்டது என்பதைக் கண்ட பொழுது, அவள் சரீரம் முழுவதும் மயிர்க்கூச்செறிந்தது. அதனால் அன்று அவள் கணவன் முன் துச்சமாகி விட்டாள். வேலைக்காரியின் பார்வையில் குறைவுபட்டுவிட்டாள். ஸுரேசன் போன்றவர்களின் பார்வையில்கூட அவள் அவன் ஆசைத்தோழி என்று பட்டுவிடுவதுகூடத் துராசை அன்று என்று சொல்லும்படியாகச் சுயமதிப்பை இழந்துவிட்டாள். ஆனால் உண்மை அதுதானா? அவள் அவ்வளவு குறைவானவளா? அவள் தன் காதலில் ஜயிப்பதற்காக, எல்லா விரோதங்களையும், எல்லாத் தடைகளையும் தவிர்த்துப் பரீட்சையில் இறங்கிய அந்த விஷயத்தை, அன்று அதற்குள் எல்லோரும் மறந்துவிட்டார்களா? அவளை ஸுரேசனுடன் அனுப்பிவிட்ட பின் கணவன் எவ்விதமான சிரத்தையும் எடுத்துக்கொள்ளவில்லை. இந்த உதாசினத்தில் மறைந்திருந்த அவமானத்தாலும் துக்கத்தாலும், இரவு முழுதும் அவள் புழுங்கிக்கொண்டிருந்தாள்.

காலையில் அவள் விழித்தெழுந்த பொழுது நேரமாகிவிட்டது. இளஞ்சூரியன் தன் கதிர்களை ஜன்னல் வழியாக மெத்தையில் இறைத்துக்கொண்டிருந்தான். அவள் மெள்ளப் படுக்கையை விட்டு எழுந்து, தலைமாட்டில் இருந்த ஜன்னலைத் திறந்துவிட்டு, பேசாமல் தெருவின் பக்கம் பார்க்கலானாள்.

கல்கத்தாவில் பெரிய சாலையில் வழிப்போக்கர்களுக்குக் குறைவில்லை. சிலர் வேலை நிமித்தம் போகிறார்கள். சிலர் வீடு

திரும்பிக்கொண்டிருக்கிறார்கள், சிலர் காலைக் காற்றிலும், வெளிச்சத்திலும் உலவிக்கொண்டிருக்கின்றனர். அதைப் பார்த்ததும் அந்தச் சமயத்தில் யாரும் வீட்டி விருப்பதில்லை என்ற நினைவு அவளுக்கு வந்தது. 'நான் யாரிடமும் முகம் காட்ட முடியாமல் உண்மையில் அப்படி என்ன பெரிய தவறைச் செய்துவிட்டேன்—இம்மாதிரி என்னை நானே கைதி செய்துகொள்வதற்கு? அபராதம் ஏதாவது செய்திருந்தால் கூட அவருக்குத்தான் செய்தேன். அதற்குத் தண்டனையையும் அவரே கொடுப்பார்; ஆலோசிக்காமல் வேறொருவர் தண்டனை யளிக்க விரும்பினால், அதை எப்படிப் பேசாமல் சகிப்பது?'

அசலா அந்த நிமிஷமே எழுந்து நின்றாள்; எல்லா வருத்தத்தையும் துடைத்தெறிந்துவிட்டு, கைகால் முகம் கழுவிக்கொண்டு, ஆடை மாற்றிக்கொண்டு, கூடத்திற்கு வந்தாள்.

கேதார் பாபு தம் நாற்காலியில் படுத்துக்கொண்டு பத்திரிகையைப் படித்துக்கொண்டிருந்தார். ஒரு தரம் தலையை எடுத்துப் பார்த்துவிட்டு, மறுபடியும் பத்திரிகை படிக்கலானார்.

சிறிது நேரத்திற்கெல்லாம் சமையற்காரன் வந்து கெட்டிலில் டீ, தண்ணீர், இன்னும் மற்ற சாமான்களையும் மேஜையின்மீது வைத்துவிட்டுப் போனான். கேதார் பாபு தாமே எழுந்து, தமக்காக ஒரு கோப்பை டீ தயாரித்துக்கொண்டு, பேசாமல் சென்று நாற்காலியில் அமர்ந்து பத்திரிகை பார்க்கலானார்.

அசலா தலை குனிந்துகொண்டே, தந்தையின் செய்கைகளைக் கவனித்தாள்; ஆனால் தானே தன் அக்கரையைக் காட்டி டீ தயாரிக்கவோ, அல்லது ஏதாவது பேசவோ, அவளுக்குத் தைரியம் வரவில்லை, இச்சையும் ஏற்படவில்லை.

ஆனால், ஒரே அறையில், இம்மாதிரி கடுமையாக முறைத்துக் கொண்டு வாய் மூடி உட்கார்ந்திருப்பது என்பது முடியாத காரியம். இந்தச் சிக்கலான பிரச்னையைப் பற்றி, இம் மாதிரி வெகு நாள் வரையில் ஒரே வீட்டில் அவருடன் இருக்க முடியுமா, அது உசிதமா அல்லவா என்பதை, தனிமையில் யோசிக்க எண்ணி எழுந்திருக்க விரும்பினாள். அதற்குள் தலை நிமிர்ந்து பார்த்தபொழுது மிக்க ஆச்சரிய மடைந்து போனாள். ஸுரேசன் உள்ளே வந்துகொண்டிருந்தான்.

ஸுரேசன் கைகுவித்து கேதார் பாபுவுக்கு நமஸ்காரம் செய்த போது, அவர் முகம் தூக்கிச் சற்றே தலையசைத்து விட்டு, மீண்டும் படிப்பதில் முனைந்தார்.

ஸுரேசன் நாற்காலியை இழுத்துப் போட்டுக்கொண்டு உட்கார்ந்தான். டீ சாமான்களை எடுத்துக்கொண்டு போகச் சமையற்காரன் உள்ளே வந்ததும், ஸுரேசன் அவனிடம், 'என் சூட்கேஸ் எங்கே இருக்கிறது? அதை என் வண்டியில் கொண்டு வை. "ஷேவ்" பண்ணிக்கொள்ளும் சாமான்களும் அதில்தான் இருக்கின்றன. தாமதம் செய்யாதே! நான் இப்பொழுதே போகவேண்டும்!' என்றான்.

'உத்தரவு!' என்று சொல்லி அவன் சென்றான். பிறகு அறை ஒரே நிசப்த மடைந்தது. சிறிது நேரத்திற்குப் பிறகு, ஸுரேசன் திடீரென்று, 'மஹிமிடமிருந்து ஏதா வது தகவல் வந்ததா?' என்று கேட்டான்.

கேதார் பாபு தலை நிமிராமலே, 'இல்லை!' என்றார்.

'ஆச்சரியமாக இருக்கிறதே!'

அதன் பிறகு மறுபடியும் மௌனம். சமையற்காரன் திரும்பி வந்து, 'சூட்கேஸை வண்டியில் கொண்டுவைத்தாய் விட்டது!' என்றான்.

'ஆனால் இதோ புறப்பட்டுவிட்டேன்! மஹிமின் கடிதம் வந்தால் எனக்குச் சற்று தகவல் கொடுங்கள்' என்று

சொல்லிவிட்டு ஸுரேசன் எழுந்திருக்க விரும்பியதும், கேதார் பாபு கையிலிருந்த பத்திரிகையை நாற்காலியில் போட்டுவிட்டு, 'நீ கொஞ்சம் இரு, ஸுரேஷ், நான் இதோ வருகிறேன்' என்று சொல்லிவிட்டு, அவன் முகத்தைப் பார்க்காமலே, ஸ்லிப்பரைக் காலில் மாட்டிக்கொண்டு கொஞ்சம் வேகமாக அறையை விட்டு வெளியே சென்றார்.

அது வரை அசலா தலை குனிந்து உட்கார்ந்திருந்தாள். கேதார் பாபு சென்ற பிறகு, ஆச்சரியமடைந்து ஸுரேசன் முகம் திருப்பியதும், அவன் பார்வை பயமும் மலினமு மடைந்த அசலாவின் கண்களில் விழுந்தது. 'என்ன சமா சாரம்?' என்று கேட்டான் அவன்.

அசலா முகம் கவிழ்ந்தபடியே தலையை அசைத்தாள்.

ஸுரேசன் மறுபடியும், 'உன் தந்தை என்னை இவ்வளவு நீசனாகவும், இப்படிப்பட்ட பெரும் பாவியாயும் கருதுவார் என்று நான் கனவில்கூட எண்ணவில்லை!' என்றான்.

இந்தப் புகாருக்குக் கூட அசலா ஒரு பதிலும் சொல்ல வில்லை, அவள் முன் போலவே பேசாமல் உட்கார்ந்திருந் தாள்.

'எனக்குத் தோன்றுகிறது, இந்தச் சமயமே மஹி மிடம் சென்று இந்த விஷயத்தை......'

வாக்கியம் முடியு முன்பே கேதார் பாபு திரும்பி வந்து விட்டார். அவர் கையில் ஒரு துண்டுக் காகித மிருந்தது. அதை ஸுரேசன் முன் மேஜையின்மேல் வைத்துக் கொண்டே, 'அப்பொழுது அவசரத்தினால் உன்னுடைய அந்த ரூபாய்க்கு ஒரு ரசீதுகூடக் கொடுக்கவில்லை. ஐயாயிரம் ரூபாய்க்குக் கைப்பட லெட்டர் எழுதியிருக்கிறேன், வட்டி ஒருகால் இப்பொழுது கொடுக்க முடியாது; ஆனால் வீடோ இருக்கிறது. இதனால் அசல் தொகை என்னவோ தீர்ந்துவிடும்!' என்றார்.

ஸுரேசன் ஒரு கணம் பிரமையடைந்து நின்றான். பிறகு, 'கேதார் பாபு, நான் தங்களிடம் லெட்டர் ஏதும் கேட்க வில்லையே!' என்றான்.

'நீ கேட்கவில்லை, அது சரி. ஆனால் நான் என்னவோ கொடுக்க வேண்டியதுதானே! இதுவரையில் கொடுக்க முடியவில்லை! இது நான் செய்த அநியாயம்! ஸுரேஷ், காகிதத்தைப் பையில் வைத்துக்கொள். வயோதிகனாகி விட்டேன். திடீரென்று ஒரு நாள் நான் இறந்துவிட்டே னானால் ரூபாய் விஷயமாகச் சண்டை வந்துசேரும்!' என்றார்.

ஸுரேசன் ஆவேகத்துடன், 'கேதார் பாபு! ஸுரேஷ் எப்படி வேண்டுமானாலும் இருக்கட்டும், அவன் பணம் காசுக் காகச் சண்டைபோட மாட்டான். இதைத் தவிர, நான் ரூபாயை விரும்பவில்லை என்பதைத் தாங்களே அறிவீர்கள். நான் இதை வரதட்சிணையாக என் நண்பனுக்குக் கொடுத்து விட்டேன்!' என்றான்.

'ஆனால் நீ அதை உன் நண்பனுக்கே கொடு! நான் வாங்கிக்கொண்டதென்னவோ கடன்தான்!'

'சரி! நான் என் நண்பனுக்கே கொடுக்கிறேன்!' என்று சொல்லி மேஜைமேலிருந்து காகிதத்தை எடுத்துக்கொண்டு, இரண்டடி பின்வாங்கி, அசலாவின்முன் நின்றானோ இல்லையோ, கேதார் பாபு கோபாக்னியினால் பொங்கி எழுந்தார். உரக் கச் சத்தமிட்டு, 'ஜாக்கிரதை, ஸுரேஷ்! நேற்றிலிருந்து நான் எவ்வளவோ அவமானங்களைச் சகித்து வருகிறேன். ஆனால் என் எதிரிலேயே என் மகளிடம் நீ ரூபாய் கொடுத்து விட்டுச் செல்வதை என்னால் சகிக்கவே முடியாது!' என்று சொல்லி, நடுங்கிக்கொண்டே தன் சாய்வு நாற்காலியில் தடா லென்று உட்கார்ந்தார்.

முதலில் ஸுரேசன் திடுக்கிட்டுக் கேதார் பாபுவின் பக்கம் கண் கொட்டாமல் பார்த்துக்கொண்டிருந்தான். பிறகு அவர்

இம்மாதிரி உட்கார்ந்த பிறகு தம் வெளுத்த முகத்தை அசலா வின் பக்கம் திரும்பிப் பார்க்கும்போது கணத்திற்குள் அவள் கற்சிலை போலானாள். ரொம்ப முயற்சி செய்து அவன் ஏதோ சொல்ல விரும்பினான், ஆனால் அவனுடைய உலர்ந்த நெஞ்சி லிருந்து வியக்தமற்ற சத்தத்தைத் தவிர வேறொன்றும் வெளிவரவில்லை. மறுபடியும் திரும்பிப் பார்த்தான். கேதார் பாபு இரண்டு கைகளையும் முகத்தில் வைத்துக்கொண்டு படுத்திருந்தார். பிறகு அவன் ஒன்றும் பேசவே முயற்சிக்க வில்லை. ஒரு கணம் மரம் போல் அசைவற்று நின்றுவிட்டு, கடைசியில் மெள்ள அறையிலிருந்து வெளியே சென்றான்.

அவன் சென்றுவிட்டான். ஆனால் அசலாவும் தந்தை யைப் போல் உட்கார்ந்துவிட்டாள். சுவரில் மாட்டியிருந்த கடிகாரத்தின் டக்டக் என்ற சத்தத்தைத் தவிர மற்றபடி அறையில் நிசப்தம் நிலவியது.

கீழே ஸுரேசனுடைய ரப்பர் டயர் போட்ட வண்டி வாசலைத் தாண்டிச் சென்றது குதிரையின் குளம்புச் சத் தத்திலிருந்து தெரிந்தது. அடுத்த கணம் சமையற்காரன் அறைக்குள் வந்து, 'பாபு!' என்று கூப்பிட்டான்.

கேதார் பாபு தலை நிமிர்ந்து பார்த்தார். அவன் கையில் ஒரு கிழிந்த காகிதத் துண்டு இருந்தது. அவரால் ஒன்றும் சொல்ல முடியவில்லை. அவர் குதித்தெழுந்து தன் வலக் கரத்தை நீட்டி, 'எடுத்துக்கொண்டு போ! என் எதிரே யிருந்து எடுத்துக்கொண்டு போ! போ வெளியே!' என்று கர்ஜித்தார்.

வேலைக்காரன் எஜமானனின் நிலைமையைக் கண்டு ஓட் டம் பிடித்தான். அவன் சென்ற பின் அவர் வருத்தமான பார்வையுடன் பெண்ணின் பக்கம் நோக்கி, குரலை இன்னும் கொஞ்சம் உயர்த்திக்கொண்டு, 'அயோக்கியன்! எங்கி ருந்தோ வந்த காலிப் பயல்! இனிமேல் என் வீட்டில் கால்

எடுத்து வைக்கட்டும், போலீஸில் பிடித்துக் கொடுக்கிறேன். அசலா, இதை உன்னிடம் சொல்லிவைக்கிறேன்!' என்றார்.

தன் பெயரைக் கேட்ட அசலா, வெளிறிப் போய் உலர்ந்திருந்த தன் முகத்தை மெள்ள உயர்த்தி, வரண்ட பார்வையுடன் தந்தையின் முகத்தைப் பேசாமல் பார்க்கலானாள்.

கேதார் பாபு மறுபடியும், 'ரூபாயை வீசித் தந்தையின் கண்ணில் மண்ணைத் தூவிவிட முடியாது. காதகி! இதை ஞாபகம் வைத்துக்கொள்!' என்றார்.

அசலா அப்பொழுதும் பேசாமல் இருந்தாள். ஆனால் அவளுடைய உலர்ந்த பார்வை வரவரப் பிரகாச மடைந்தது. தந்தையின் பார்வை அதில் விழவில்லை. அவர், ஆள்காட்டி விரலை ஆட்டிக்கொண்டு, 'கை லெட்டரைக் கிழித்துத் தந்தைக்கு லஞ்சம் கொடுத்துவிட முடியாது! இந்த விஷயத்தை அவனுக்கு நான் அறிவுறுத்துகிறேன்! இந்த வீட்டை நானே விற்று அவன் கடனை அடைத்துவிட்டு எங்கே இஷ்டமோ அங்கே போகிறேன். என்னை யாரும் தடுக்க முடியாது, சொல்லி வைக்கிறேன்!' என்றார்.

இந்தத் தடவை அசலா பேசினாள். முதலில் அவளுக்குச் சற்று சங்கோஜமாக இருந்தது. பிறகு அவள் கலங்காத திடமான குரலில், 'கடனைத் தீர்க்காமல் வீட்டை எனக்கு விட்டுவிட்டுப் போங்கள் என்று நான் சொல்லுகிறேனா அப்பா? நீங்கள் செய்யாவிட்டால் நானே அதைச் செய்து தான் ஆகவேண்டும்!' என்றாள்.

கேதார் பாபு இன்னும் அதிக ஆத்திரமடைந்து, 'நீங்கள் செய்த காரியத்தால் கண்ணியமுள்ள சமாஜத்தின் மத்தியில் எனக்குத் தலை காட்ட முடியவில்லை. அது தெரியுமா உனக்கு?' என்றார்.

அசலா முன்போலவே சாந்தத்துடன், திடமான குரலில், 'தெரியாது! எனக்குத் தெரியாது! நீங்கள் தலை

காட்ட முடியாமல் அம்மாதிரியான காரியத்தை நான் செய்திருந்தேனுனல் முதலில் என் முகத்தை நீங்கள் காண முடியாது. விழுந்து சாவதற்குத் தண்ணீருக்குப் பஞ்சமில்லை!' என்று சொல்லிக்கொண்டிருக்கும் போதே, அழுகையால் அவள் குரல் தழுதழுத்தது. 'நேற்றிலிருந்து நீங்கள் என்னைச் செய்துவரும் அவமானம் பொய்யானதால் அதைச் சகித்து வருகிறேன். இல்லாவிட்டால்......'—இந்த இடத்தில் அவள் குரல் நின்றேவிட்டது. முகத்தில் தலைப்பைப் போட்டுப் பொங்கி வரும் அழுகையை அடக்கிக்கொண்டு அவள் அறையிலிருந்து வெளியே சென்றுள்.

கேதார் பாபு சிந்தை சிதறியவரானுர். கோபிக்கவும், சோகிக்கவும், குத்திக் காட்டவும், மகளுடைய நிந்திக்கத் தக்க நடத்தையே அவருக்கு ஆழ்ந்த துக்கத்தைத் தரும் காரணமாக இருந்தது என்பது அவர் அபிப்பிராயம். ஆனல் எதிர்த் தரப்பும் திடீரென்று தம்முடைய நடத்தையை மிக்க கேவலம் என்றெண்ணித் தம் எதிரிலேயே வெறுத்து ரோஷத்துடன் செல்ல முடியும் என்ற எண்ணம் அவருக்குக் கனவில்கூடத் தோன்றவில்லை. ஆகையால் அவர் ஒன்றும் தோன்றுதவராய்ச் சிறிது நேரம் இருந்துவிட்டு, பிறகு தயக்கத்துடன் உட்கார்ந்து நெற்றியில் கையை வைத்துத் தடவிக்கொண்டே, 'இதோ பார்! இது இன்னொரு காண்டம் ஆயிற்று!' என்று சொல்லிக்கொண்டார்.

இதன் பின் தந்தையும் மகளும் பத்துப் பனிரண்டு தினங்களை எப்படிக் கழித்தார்கள் என்பதை ஈசன்தான் அறிவார். அசலா தன் அறையைவிட்டு வெளி வருவதே யில்லை. வீட்டு வேலைக்காரர்கள் முன்புகூட அவள் தலைகாட்ட முடியாமல் போய்விட்டது. சென்ற சில நாட்களைப் போல அன்றும் சாலையின் பக்கம் பார்த்துக்கொண்டு பொழுதைக் கழிக்கத் தாழ்வாரத்தில் வந்து அமர்ந்தாள்.

குளிர் காலம். மத்தியானம் மெல்லிய நிழல் வானத்தி லிருந்து பூமியில் இறங்கிக்கொண்டிருந்தது. அந்த நிழ லுடன் தன் உள்ளத்தில் கிடக்கும் வாழ்க்கையின் ஆழங் காண முடியாத எல்லையற்ற ஒரு சம்பந்தத்தை உணர்ந்து, அவள் மனம் அற்பாயுள் உள்ளதைப் போலத் துடிக்க லாயிற்று. அவள் கண்கள் எதையாவது சரியாகப் பார்த் துக்கொண்டிருந்தனவா என்ருல், அதுவும் இல்லை. ஆயினும் அந்த ஸ்பரிசத்தின் காரணமாக, கீழும் மேலும் அக்கம் பக் கத்திலும் உள்ள விஷயங்கள் அவள் கண்களில் படாமல் இல்லை. இம்மாதிரியாகத் தனிமையில் உட்கார்ந்து யோசித் துக்கொண்டிருக்கும் போது, பொழுது சாயும் நேரம், ஸுரே சன் வண்டி தங்கள் வீட்டினுள் நுழைவதைக் கண்டாள். கண்ணிமைப் பொழுதில் அவள் முகம் வெளுத்துவிட்டது. போலீஸைக் கண்டு பயந்து ஓடும் திருடனைப் போல, ஜன்ன லண்டையிலிருந்து ஓடி, கட்டிலில் சென்று படுத்தாள்.

பத்து நிமிஷங்களுக் கெல்லாம் கதவு தட்டப்பட்டது; வெளியேயிருந்து அவள் தந்தை அன்பான குரலில், 'அம்மா அசலா! விழித்துக்கொண்டிருக்கிருயா?' என்ருர்.

ஆனல் அசலாவிடமிருந்து யாதொரு பதிலும் வராத தைக் கண்டு, அவர் மேலும் இனிய குரலுடன், 'சாயங்கால மாகிவிட்டதம்மா! எழுந்திரு! ஸுரேசனுடைய அத்தை உன்னை அழைத்துப்போக வந்திருக்கிருள். மஹிமுக்கு உடம்பு சரியில்லை!' என்ருர்.

அசலா எழுந்து கதவைத் திறந்ததுமே, ஸுரேச னுடைய அத்தை உள்ளே நுழைந்தாள். அசலா குனிந்து அவள் பாதங்களைத் தொட்டாள்.

கேதார் பாபு எல்லோருக்கும் பின்னல் அறையில் நுழைந்து, கட்டிலில் ஒரு மூலையில் அமர்ந்து, மகளை அழைத்து, 'நீங்கள் புறப்பட்டு வந்ததுமே மஹிமுக்கு

ஜுரம் வந்துவிட்டது. அநேகமாய், இரவில் இந்தக் காலத்து வாட்டுப் பனி, அதிக உழைப்பு முதலியவைகளால்தான் ஜுரம் வந்திருக்கும்' என்று சொல்லிக்கொண்டே, ஸுரேச னுடைய அத்தையைப் பார்த்து, 'இவர்களை அனுப்பிவிட்டுப் பயத்தால் தவித்துக்கொண்டிருந்தான். தகவல் ஏன் கொடுக்க வில்லை? ஸுரேசன் தீர்க்காயுசாக இருக்கவேண்டும். அவன் சென்று புத்திசாலித்தனமாக அவனை அழைத்துக்கொண்டு வந்திராவிட்டால் என்ன ஆகியிருக்குமோ, கடவுள்தான் அறிவார்!' என்று சொல்லிக்கொண்டிருக்கும்போதே, அன்பு நிறைந்த அனுதாபத்தினால் விருத்தரின் குரல் தடைபட்டு விட்டது.

அசலா தலை குனிந்து மௌனமாக நின்று கேட்டுக் கொண்டிருந்தாள். யாதொரு கேள்வியும் கேட்கவில்லை. எவ்வித வருத்தத்தையும் வெளிக்காட்ட வில்லை.

ஸுரேசனுடைய அத்தை அசலாவின் தோளில் தன் கையை வைத்துச் சாந்தமான இனிய குரலில், 'பயப்படக் கூடிய விஷயம் ஒன்றும் இல்லை. இரண்டொரு தினங்களில் சௌகரியமாகிவிடும்' என்றாள்.

அசலா வாய் திறந்து ஒன்றும் கூறாமல், மறுபடியும் அவளுக்கு நமஸ்காரம் செய்து, சால்வையை எடுத்துவிட்டுப் புறப்படத் தயாரானாள்.

இம்மாதிரி, குளிர் காலத்து மாலையில் யாதொரு உஷ்ண ஆடைகளையும் அணியாமல், வெறுங் காலுடன், சாதாரண உடையுடன் தன் மகள் வெளியே புறப்படத் தயாரானதைக் கண்ட தந்தையின் ஹிருதயம் இளகிவிட்டது; ஆனால் எதிரே நிற்கும் அந்தக் கைம்பெண்ணின் ஆடையைக் கண்டு, மறுபடி அவளுக்கு வருத்தத்தைக் கொடுக்க அவர் விரும்ப வில்லை. 'போ அம்மா! நானும் வருகிறேன்' என்று சொல்லி, ஸ்லிப்பரை மாட்டிக்கொண்டு இறங்கி முன் செல்லலானார்.

## XXIII

மஹிமைப் பற்றி அசலாவுக்கு எல்லாவற்றையும் விடப் பெரும் வருத்தம் என்னவென்றால், தான் மனைவியாக இருந்துங்கூடக் கணவனின் கஷ்டங்களில் பங்கெடுத்துக் கொள்ள முடியவில்லையே என்பதுதான். இந்த விஷயத் தைப் பற்றி ஸுரேசன்கூடச் சிறுவயது முதற் கொண்டே நண்பனிடம் பல தடவை விவாதித்திருக்கிறான். ஆனால் யாதொரு பலனும் இல்லை. லோபியின் கையி லுள்ள தனத்தைப் போல, யாரும் தனக்கு எந்த உதவியும் செய்ய முடியாதபடி, மஹிம் அதை வைத்துக் காத்துவந்தான். அவனுக்கு என்ன குறைவு? எது தேவை? அவன் துக்கம் என்ன?—என்பதைக்கூடப் பிறர் அறிவது கடினமாக இருந்தது.

வீடு எரிந்து சாம்பலாகிவிட்டது. அவனுடைய தாத்தா பாட்டன் காலத்து வீடு எரிந்து சாம்பலானதைக் கண்டு அவன் உள்ளம் வெடிக்கலாயிற் றென்பதை அவன் முகத்தைக் கண்டு அசலாவால் அறிந்துகொள்ள முடிய வில்லை. மிருணாளினியின் வைதவ்யத்தால் கூடக் கணவனின் துக்கத்தின் ஆழத்தைக் காண முடியவில்லை. தன் வாயினா லேயே 'உன்னை நான் விரும்பவில்லை' என்று சொன்ன போதும், அந்தச் சொல்லின் கொடுமையைப் பற்றிக் கூட அவள் அதே அறியாமையில்தான் இருந்தாள். எல்லா விதத் துர்ப்பாக்கியத்திலும்கூடக் கணவனின் சலனமற்ற

உதாசினத்தை உண்மையில் ஒப்புக்கொள்வதில் அவள் மனத்தில் சந்தேகமெதுவும் சற்றும் உதிக்கவில்லை. ஆகையால்தான் அன்று ஸ்டேஷனில் அவள் தன் கணவனின் கலங்காத சாந்தம் குடிகொண்ட முகத்தின் பக்கம் அடிக்கடி பார்த்து, பொறுமையின் அந்தப் பொய்த் திரைக்குப் பின்னால் அவனுடைய முகத்தின் உண்மையான தோற்றம் எப்படியிருக்கும் என்பதை வழி நெடுக யோசித்துக் கொண்டே வந்தாள்.

இன்று அவனுடைய தேக அசௌக்கிய விஷயத்திற்குச் சாதாரண உருவம் கொடுக்கவேண்டி, கேதார் பாபு சகஜமான குரலில், தமக்கு ஆச்சரியம் உண்டாகவில்லை என்றும், இவ்வளவு பெரிய கெட்ட சம்பவங்களுக்குப் பிறகு இம்மாதிரி ஒரு விஷயம் நேரும் என்று தமக்குச் சந்தேகம் ஏற்பட்டது என்றும் சொன்ன பொழுது, அசலாவின் ஹிருதயத்தில் ஒரு கணம் எழுந்து நின்ற உணர்ச்சியை வெறும் ஆவல் என்று சொல்லிவிட முடியாது.

ஸுரேசனின் ரப்பர் டயர் வண்டி வேகமாகச் சென்று கொண்டிருந்தது. அத்தை ஒரு பக்கத்துக் கதவை மூடிவிட்டுப் பேசாமல் உட்கார்ந்திருந்தாள். அவள் பக்கத்தில் உட்கார்ந்திருந்த அசலாவும் கற்சிலை போல் அசைவற்று உட்கார்ந்திருந்தாள். இவர்கள் இருவரிடமிருந்தும் யாதொரு உற்சாகமும் கிளம்பாவிட்டாலும், கேதார் பாபு மாத்திரம் ரஸ்தாவின் பக்கம் பார்த்துக்கொண்டு ஏதோ பேசிக் கொண்டே வந்தார். 'ஸுரேசனைப் போலத் தயை, புத்தி, சாதுரியம் உள்ள பையன் பூமியில் வேறொருவரும் இல்லை; மஹிமின் பிடிவாதத்தினால் அவன் தொல்லை யடைந்துவிட்டான்; டாக்டரோ வைத்தியனோ இல்லாத, நாய் நரி வாசம் செய்யும் பட்டிக்காட்டில் சென்று வசித்ததற்குத் தண்டனை ஒரு நாள் அனுபவித்தே தீரவேண்டும்!'—இந்த மாதிரி,

பொருத்தத்தோடும், பொருத்தமில்லாமலும் வார்த்தைக
மௌனமாக உட்கார்ந்திருக்கும் அந்த ஸ்திரீகளின் செ
களில் அவர் வழி நெடுக உரைத்துக்கொண்டே சென்றார்.

இதற்குக் காரணமும் உண்டு. கேதார் பாபு சுபாவத்
லேயே இவ்வளவு சாதாரண மனிதர் என்பதல்ல. அன்
அவருடைய உள்ளத்தின் மறைமுகமான ஆனந்தம் எவ
தப் பொருத்தத்தின் கட்டுப்பாட்டையும் ஒப்புக்கொள்
வில்லை. தம்முடைய அத்தியந்த நண்பன் ஸுரேசனுட
சண்டையிட்டது, தம்முடைய ஒரே பெண்ணுக்குத் துரே
கம் இழைத்தது, எல்லாவற்றையும்விடச் சில தினங்கள
மிகக் கொடுமையாக அவர் உள்ளத்தைக் குத்திக்கொண்
வந்த சந்தேகத்தின் பெரும் பாரம், — யாவும் இன்று ஸுரே
னின் அத்தை திடீரென்று வந்ததால் பனிச்சென்று அகன்
விட்டன. மஹிமின் தேக அசௌக்கிய விஷயத்தைப் பற்
அவர் மனத்தில் பெரிதாக எண்ணவில்லை. அன்றிரவு தெய்
வசமாகக் குளிர் வீசி அதனால் ஜுரம் வந்திருக்கலாம்
வேறொன்றுமில்லை. ஸுரேசன் அத்தை நாலைந்து தினங்களி
உடம்பு குணமாகிவிடும் என்று நம்பிக்கை கூறியிருந்தாள்
அவ்வளவு நாட்கள்கூடத் தேவையில்லை. மறுநாள் கால
யிலேயே சொஸ்தமானாலும் ஆகிவிடலாம். தேக அசௌக்
யம் சம்பந்தமாக அவர் இதைத்தான் எண்ணியிருந்தார்.

ஆனால் உண்மை விஷயம் இதுதான். ஸுரேசன் தாமே
சென்று மஹிமைத் தன் வீட்டுக்கு அழைத்து வந்திரு
தான். எந்தச் சாக்கின் பேரிலோ அவனுடைய மனைவியை
அருகே அழைத்து வர அத்தையை அனுப்பியிருக்கிறான்
பெண்ணுக்கும் மாப்பிள்ளைக்கும் கொஞ்சக் காலமாகவே மன
வருத்தம் ஏற்பட்டிருந்தது என்று வேலைக்காரி வாயிலாக
கேட்டதை அவர் மறக்கவே யில்லை. ஆகையால் இவை
ளெல்லாம் தம்பதிகளின் கலகத்தின் பலன் என்று இன்

தெளிவாக அறிந்தபோது, மிக்க மன வருத்தத்துடன், அங்கு சென்று அந்தக் குற்றமற்ற கண்ணியமுள்ள யுவன் முகத்தில் எப்படி விழிப்பது என்ற யோசனை எழுந்தது. ஆனால் அவருடைய மகளின் சரீரம் முழுவதிலும் ஒரு கடினமான அமைதி நிலவி நின்றது. நோய் விசேஷமாக ஒன்று மிருக்காது என்ற விஷயத்தை அவளும் மனத்திற்குள் அறிந்திருந்தாள். ஆனால் ஸுரேசன் அவனை இங்கே எப்படிப் பிடித்துக்கொண்டு வந்தான் என்பதை மட்டும் அவளால் உணர முடியவில்லை. தன் கணவனைப் பற்றி இவ்வளவு தான் அவள் அறிந்திருந்தாள்.

சாயங்காலம் ஆகிவிட்டது. தெருவிலுள்ள விளக்குகள் எல்லாம் எரிய ஆரம்பித்தன. வண்டி ஸுரேசன் வீட்டு வாசலில் நுழைந்து வாசற்படி முன் போய் நின்றது. கேதார் பாபு தலையை நீட்டி, சட்டென்று உடைந்த குரலில், 'ஏன் இரண்டு வண்டிகள் நின்றுகொண்டிருக்கின்றன?' என்றார்.

அசலாவின் ஆச்சரிய மடைந்த பார்வையும் அவற்றின் மேல் விழுந்தது. லாந்தரின் வெளிச்சத்தில் நன்றாகப் பார்த்தாள். ஸுரேசன் ஒரு கண்ணியமான ஆங்கிலேயரை மரியாதையுடன் வண்டியில் ஏற்றிக்கொண்டிருந்தான். அருகே மற்றொரு கனவான் வங்காளி உடையில் நின்றுகொண்டிருந்தார். அவர் டாக்டராக இருக்கலாம் என்பதை இருவரும் ஒரே கணத்தில் அறிந்துகொண்டனர்.

அவர் சென்ற பிறகு, இவர்களுடைய வண்டி வாசற்படியருகே சென்று நின்றது. ஸுரேசன் அங்கேயே நின்றுகொண்டிருந்தான். கேதார் பாபு இரைந்து, 'ஸுரேஷ்! மஹிம் எப்படி யிருக்கிறான்? என்ன உடம்பு?' என்று கேட்டார்.

'நன்றாக இருக்கிறான்! வாருங்கள்!' என்றான் ஸுரேசன்.

கேதார் பாபு இன்னும் அதிக வருத்தமான குரலில், 'என்ன உடம்பு? சொல்லேன்!' என்றார்.

'வியாதியின் பெயரைச் சொன்னால் மாத்திரம் நீங்கள் அறிந்துகொண்டுவிட முடியாது. ஜுரம், மார்பில் கொஞ்சம் சளி பிடித்திருக்கிறது. ஆனால், நீங்கள் இறங்கி வாருங்கள்,—அவர்களை இறங்க விடுங்கள்!' என்றான்.

கேதார் பாபு கீழே இறங்கச் சற்றும் முயற்சிக்காமல், 'கொஞ்சம் சளி பிடித்திருக்கிறதா? இதற்கு வைத்தியம் நீயே செய்ய முடியுமே! நான் பச்சைக் குழந்தையல்ல, ஸுரேஷ்! இரண்டு டாக்டர்கள் எப்படி வந்தார்கள்? ஆங்கிலேய டாக்டருக்கு என்ன அவசியம் ஏற்பட்டது?' என்று சொல்லும் போதே அவர் குரல் நடுங்கலாயிற்று.

ஸுரேசன் அருகே வந்து கையைப் பற்றி அவரை இறக்கி விட்டான். பிறகு, 'அத்தை! அசலாவை நீ உள்ளே அழைத்துக்கொண்டு போ. நான் இதோ வருகிறேன்!' என்றான்.

அசலா யாரிடமும் ஒன்றும் கேட்கவில்லை. இருளில் அவளுடைய முகமும் யாருக்கும் தென்படவில்லை. இறங்கும் போது அவள் கால்கள் நடுங்கின. இதையும் யாரும் கவனிக்கவில்லை. அவள் எப்படிப் பேசாமல் வந்தாளோ, அதைப் போலவே பேசாமல் இறங்கி, அத்தையின் பின்னால் வீட்டுக்குள் சென்றாள்.

சில நிமிஷங்களுக்குப் பிறகு வாசற்படிக் கெதிரேயிருந்த பெரிய திரையை அகற்றிவிட்டு, அவள் நோயாளியின் அறைக்குள் நுழைந்தபோது, மஹிம் தன் வீட்டைப் பற்றி ஏதோ சொல்லிக்கொண்டிருந்தான். அந்தச் சத்தம் காதில் விழுந்ததுமே, நோயாளியின் பிதற்றலால், வியாதி எதுவரை போயிருக்கிற தென்பதை ஊகிக்க அதிக நேரமாகவில்லை. ஒரு கணம் சுவரில் சாய்ந்து நின்று தன்னைத் திடப்படுத்திக்கொண்டாள் அசலா.

நோயாளியின் தலையருகே அமர்ந்து நெற்றியில் ஐஸ் கட்டிப் பையை வைத்து ஒத்தடம் கொடுத்துக்கொண்டிருந்த ஸ்திரீ தலையைத் திருப்பி அசலாவின் பக்கம் பார்த்தாள். பிறகு அவள் தைரியத்துடன் எழுந்திருந்து அசலாவுக்கு நமஸ்காரம் செய்துவிட்டு நிமிர்ந்து நின்றாள். அவள் வைதவ்யக் கோலத்தோடு இருந்தாள், தலைமயிர் கழுத்து வரை தெரிந்தது. அவள் முகத்தில் அப்பொழுது கைம்பெண்களின் வைராக்கியம் அடர்ந்து படர்ந்திருந்தது. மெல்லிய விளக்கொளியில் முதலில் அவள் மிருணாளினி என்று அசலாவினால் அறிந்துகொள்ள முடியவில்லை; ஆனால் அப்பொழுது எதிரே வந்து நிமிர்ந்து நின்றதும் இருவரும் ஒருவரை யொருவர் பார்த்து ஸ்தம்பித்து நின்றனர். ஒரு தடவை அசலாவின் சரீரம் முழுவதும் மயிர்க்கூச் செறிந்து நடுங்கியது; ஏதோ சொல்ல உதடுகள் சற்று அசைந்தன. ஆனால் வாயிலிருந்து யாதொரு வார்த்தையும் வெளிப்படவில்லை. அடுத்த கணம் மூர்ச்சையடைந்த அவள் உடல், ஒடிந்த கொடியைப் போல, மிருணாளினியின் பாதங்களின் அடியில் விழுந்தது.

நினைவு வந்த பிறகு, அசலா கண் திறந்து பார்த்தபொழுது, அவள் தந்தையின் மடியில் தலைவைத்து சோபாவில் படுத்திருந்தாள். ஒரு வேலைக்காரி அவள் முகத்தில் பன்னீரைத் தெளித்துக்கொண்டிருந்தாள். அருகேயே ஸுரேசன் நின்றுகொண்டு விசிறியால் மெள்ள விசிறிக்கொண்டிருந்தான்.

என்ன சம்பவம் நடந்தது? இதை நினைவுபடுத்திப் பார்க்க அவளுக்குச் சற்று நேரமாயிற்று. மறுபடியும் எழுந்து உட்கார முயற்சித்தாள். கேதார் பாபு அவளைத் தடுத்து, 'இப்பொழுது எழுந்திருக்கவேண்டிய அவசியமில்லை, அசலா! சற்று நேரம் தூங்கு!' என்றார்.

ஸுரேசனும் விளக்கமற்ற குரலில் இதையேதான் ஆமோதித்தான். அசலா பேசாமல் ஒரு முறை அவன் முகத்தைப் பார்த்துவிட்டு, பதிலுக்குத் தந்தையின் கையை அப்புறப்படுத்திவிட்டு, நேராக எழுந்து உட்கார்ந்தாள். பிறகு, 'தூங்குவதற்காக இங்கே வரவில்லை அப்பா! எனக்கு ஒன்றும் ஆகவில்லை, நான் அந்த அறைக்குப் போகிறேன்!' என்று சொல்லிவிட்டு, அவள் யாருடைய பதிலையும் எதிர்பாராமல் வெளியே சென்றுவிட்டாள்.

அந்த வீட்டின் அறைகளையும் வாசல்களையும் அவள் மறக்கவில்லை. நோயாளி இருக்கும் அறையைக் கண்டுபிடிக்க அவளுக்கு அதிக நேரமாகவில்லை. அறைக்குள் அவள் நுழைந்ததுமே, மிருணாளினி அவளைப் பார்த்து, 'மன்னி! நீ இங்கே வந்து சற்று உட்காரு! நான் சற்று சந்தியா பூஜை செய்துவிட்டு வருகிறேன்! ஐஸ் பை நழுவிவிடப் போகிறது, நினைவிருக்கட்டும்!' என்று சொல்லி, அசலாவைத் தன் இடத்தில் உட்கார வைத்துவிட்டு வெளியே சென்றாள்.



# புதிய நவயுக நாவல்கள்

| | | ரு. | அ. | பை. |
|---|---|---|---|---|
| 1. பெண் | | 1 | 12 | 0 |
| ஆசிரியர்: *ஸியாராம்சரண குப்தர்* | | | | |
| 2. கிரஹ தாகம் | *பாகம்* I | 1 | 12 | 0 |
| ,, | *பாகம்* II | 1 | 12 | 0 |
| ஆசிரியர்: *சரத் சந்திர சட்டர்ஜி* | | | | |
| 3. மகாராஷ்டிர ஜீவன் உதயம் | | 1 | 12 | 0 |
| ஆசிரியர்: *ரமேஷ் சந்திர தத்தர்* | | | | |
| 4. ரஜபுத்திர ஆதிக்கத்தின் அஸ்தமனம் | | 1 | 12 | 0 |
| ஆசிரியர்: *ரமேஷ் சந்திர தத்தர்* | | | | |
| 5. சுகம் எங்கே? | | 1 | 12 | 0 |
| ஆசிரியர்: *வி. ஸ. காண்டேகர்* | | | | |
| 6. அன்னு | | 1 | 12 | 0 |
| ஆசிரியர்: *டால்ஸ்டாய்* | | | | |
| 7. மேஹர்-உன்னிஸா | | 0 | 8 | 0 |
| ஆசிரியர்: *ஹரிஸாதன் முகோபாத்யாயர்* | | | | |
| முன்னர் வெளிவந்தவை | | | | |
| 8. தேவதாஸ் | | 1 | 0 | 0 |
| ஆசிரியர்: *சரத் சந்திர சட்டர்ஜி* | | | | |
| 9. இரட்டை மனிதன் | | 0 | 8 | 0 |
| ஆசிரியர்: *லூயி ஸ்டீவன்ஸன்* | | | | |
| 10. தேய்ந்த கனவு | | 0 | 8 | 0 |
| ஆசிரியர்: *சார்லஸ் டிக்கன்ஸ்* | | | | |

தபால் செலவு வேறு

---

**நவயுகப் பிரசுராலயம் லிமிடெட்**

:: *ஜார்ஜ் டவுன், சென்னை* ::